# தமிழ்ச் சொல்லாக்கம்




தொகுப்பு

உவமைக் கவிஞர் சுரதா

# தமிழ்ச் சொல்லாக்கம்



தொகுப்பு :

உவமைக்கவிஞர்

சுரதா

சேகர் பதிப்பகம்

66/1, பெரியார் தெரு, எம். ஜி. ஆர். நகர்,

சென்னை - 600 078.

© 24 71 43 25.



முதற் பதிப்பு : 22. 11. 2003

உவமைக் கவிஞர்
சுரதா அவர்களின்
83ஆவது பிறந்தநாள்
வெளியீடு

விலை ரூ. 85.

*ஒளி அச்சு :*
கிறிஸ்ட் கம்ப்யூட்டர்ஸ்,
55A/86, பிள்ளையார் கோவில் தெரு,
வடபழனி, சென்னை - 26.

*அச்சிட்டோர் :*
ஜி.வி. கிராபிக்ஸ்,
அசோக் நகர், சென்னை - 83.

# உள்ளே...

# சொல்லாக்க நெடு வழியில்....

பேராசிரியர், முனைவர் **இராம. குருநாதன்** அவர்கள்

புதுப்புது தேடல்களை ஆர்வத்தோடு எல்லாத் துறைகளிலும் ஈடுபாட்டோடு அணுகும்போது பழைய சுவடுகளையும் நினைத்துப் பார்ப்பது ஒருவகையில் ஆர்வத்தைக் கிளறச் செய்யும். இந்த மலரும் நினைவுகள் எல்லாவற்றுக்கும் பொருந்தும். பழைய திரைப்படப் பாடல்களில் மனம் பதித்து அதிலேயே பற்றுக்கொண்டிருப்பவர்களை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். இப்படிப்பட்ட உணர்வை, உவமைக் கவிஞர் சுரதா, பழைய நூல்களிலிருந்து திரட்டி வைத்திருந்த அரிய சொல்லாக்கங்களைச் சுவைபடத் தொகுத்ததன் மூலம் தந்திருக்கிறார்.

தமிழின் சொற்பொருள் வரலாற்றைக், குறிப்பாக, கடந்த இரு நூற்றாண்டுகளில் வெளிவந்த நூல்கள் வழி அறிவதற்கு ஒரு வழித்துணையாக உள்ளது இந்நூல். இந்நூலிலிருந்து பல்வேறு அரிய சொற்களின் பொருள்களை உணர்ந்து கொள்கிறோம். அரிதின் முயன்று தொகுத்த நூல்கள் கவிஞரிடம் மிகுதியும் உள்ளன. அவற்றிலிருந்து அருமையான தகவல்களை அவ்வப்போது நண்பர்களிடம் சொல்லியும், இதழ்களில், நூல்களில் எழுதியும் வருவதை வழக்கமாகக் கொண்டிருப்பவர் அவர். இது போன்றவற்றிற்கு அவரே ஒரு தகவல் களஞ்சியம்.

வடமொழிச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைத் தந்தமை ஆங்கிலத்திலிருந்து தமிழுக்குச் சொற்களைப் பெயர்த்தல் முதலிய நிலைகளில் பழந்தமிழ் அறிஞர்கள் எத்தகைய இயல்புகளை மேற்கொண்டனர் என்பதற்கு இந்நூல் ஓர் தகவல் ஆவணமாக விளங்குகிறது.

பழந்தமிழ் நூல்களில் காணக் கிடைக்கும் அரிய சொற்களை அவற்றின் திறனறிந்து தொகுத்துத் தந்தமைக்காகக் கவிஞரைப் பாராட்டவேண்டும். இதனைத் தந்துள்ள முறைமையும் அருமையாய்

உள்ளது. சொற்களைப் பட்டியலாக மட்டும் தந்திருப்பாரேயானால் அவர் பங்கில் சிறப்பிராது. இத்தொகுப்பு நூலை அவர் அமைத்துக்கொண்ட விதம் சிறப்புடையது. சொல், சொல வழங்கப்பட்டுள்ள நூலில்/இதழில் உள்ள பத்தி, நூல் / இதழ்ப்பெயர் நூலாசிரியர், ஆண்டு என்ற நிரலில் அமைத்துக்கொண்டு, அதற்கப்பால் ஆங்காங்கே சிற்சில இடங்களில் குறிப்பையும் தந்துள்ளமை பாராட்டுக்கு உரியது. தகவல்களைத் தரும்போது, 'இச்சொல்லாக்கம் அடிக்குறிப்பில் இடம் பெற்றுள்ளது' எனவும் இம்மொழிபெயர்ப்பு அடிக் குறிப்பில் இடம் பெற்றுள்ளது' எனவும் ஆங்காங்கே சொல்லிச் செல்வன கவிஞரின் சொற்பொருள் தேடும் வேட்டையை / வேட்கையை நமக்குப் புலப்படுத்துகின்றன.

தமிழாக்கச் சொற்கள் தமிழ் நூல்களில் பெய்யப்பட்டதை நிரலாகத் தந்திருப்பது அறிதற்குச் சுவை பயக்கிறது. தொகை விளம்பி (ப.12), நிறுத்தற்குறி (ப.13), புகைத்தேர் (ப.18), ஆவி வண்டி (ப.34), காற்றெறி விளக்கு (ப.24), கடைவழி (ப.27), நீர்நிலைக் கண்ணாடிக் கூடு (ப.30), ஜலதரங்கம் (ப.106) நிலைச் செண்டு (ப.123), ஒளி அஞ்சல் (ப.171), இலவந்திகை (ப.182) முதலிய சொற்களின் ஆக்கம் படித்தறிவதற்கு இனிமை தருவதாகும்.

நூற்பகுதியில் சொல் இடம் பெற்றிருப்பதை அறியும்போது, அச்சொல் பெய்யப்பட்ட சூழ்நிலை, அந்தக் காலத்தில் வழங்கப்பட்ட மொழிநடை ஆகியவற்றை விளங்கிக் கொள்ள முடிகிறது. பாராளுமன்று (1904), உயிரணு (1909), நிழற்படம் (1911) வாக்கு (1912) போன்ற சொற்கள் அக்காலத்திலேயே அழகியதாய் மொழி பெயர்த்திருக்கும் திறனை / தேவையை அறிந்துகொள்ள முடிகிறது. சில சொற்களின் பெயர்ப்பு நமக்கு வியப்பூட்டுவதாயும், மருட்கை தருவதாயும் அமைந்திருப்பதை உணர்கிறோம். மதி வல்லோன் (ப.112), நெய்யாவி ஊர்தி (ப.160), முதலறிவு (ப.96), இறப்பு ஏற்பாடு (ப.125) ஆட்டக் கடுதாசிகள் (ப.135), சூடளந்தான் (ப.136), பாழ் (ப.163) முதலியவை இத்தகையன.

பிற துறைச் சொற்கள் அழகியக் கலைச் சொல்லாக்கம் பெற்றிருப்பதையும் காண்கிறோம். மருத்துவம் தொடர்பான கலைச் சொல்லாக்கம் பெற்ற பல சொற்கள் அவ்வாறு அமைந்துள்ளன. உமிழ் நீர்க்கோளம் (ப.39), உடற்கூற்று நூல் (ப.126), சிற்றணுக்கூடு (ப.126) முதலியனவற்றை இதற்கு எடுத்துக் காட்டலாம்.

ஒரு துறை சார்ந்த பல சொற்களை ஆங்காங்கே காட்டியிருப்பதும் நன்று. (ப. 42, 118, 142)

பழந்தமிழ் அறிஞர்களான தொழுவூர் வேலாயுத முதலியார்; பாம்பன் சுவாமிகள், திருமணம் செல்வ கேசவ முதலியார், திரு.வி.க., பரிதிமாற் கலைஞர், கா. நமசிவாய முதலியார் முதலான பலர் சொற்பொருளைத் தந்திருக்கும் பாங்கை இந்நூல் விளக்கும்போது அவர்களின் மொழிநடை இயல்பையும் அறிந்து இன்புறுகிறோம்.

மொழி வளர்ச்சியில் பழமைக்கும் இடம் உண்டு; புதுமைக்கும் வரவேற்பு உண்டு. பழையன கழிவதும், புதுமையை ஏற்பதும் மொழியின் இயல்பு. இக்கருத்தைக் கூறும் நூற்பாவில் உள்ள 'காலவகை' என்ற சொல்கூட ஒரு வகையில் மொழியாக்கச் சொல்லே! இன்றைக்கு Fashion என்றழைக்கப்படும் ஆங்கிலச் சொல்லுக்கு ஏற்ற சொல்லாக அது உள்ளது.

அதேபோல் இன்று வழங்கப்படும் பிற சொற்களுக்குப் பழைய நூல்களிலிருந்தும் 'இணை' அல்லது சமன் சொற்களைத் தேடலாம். சான்றாகக் கூற வேண்டுமானால், Himalayan Blunder என்ற மரபுத் தொடரை 'வான்பிழை' எனக் கம்பன் கூறிய சொற்களில் பொருத்திக் காட்ட வாய்ப்புண்டு. இது தனியோர் ஆராய்ச்சி. விரிப்பிற் பெருகும்; தொகுப்பின் எஞ்சும்.

இந்நூலைத் தொகுத்த கவிஞர் சுரதாவிற்குத் 'தமிழகம்' நன்றிக் கடன் செலுத்தவேண்டும். அவரைத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்ளவேண்டும். படைப்புத் துறைமுகத்திலிருந்து அவர் ஒதுங்கிக் கொண்டாலும், படித்தறிந்த நூல்களின் தேன்மழையில் நம்மைத் திளைக்க வைத்துள்ளார். இது போன்ற தகவல்களின் தமிழ்ச் சுரங்கம் அவர். அக்கவிச்சுரங்கத்தில் இருந்து கவிதைகளைவிட இனி, கனிமங்களை வெட்டி எடுக்கலாம்.

இந்நூலைக் கவிஞர்க்கு ஒரு காணிக்கையாக அளித்துள்ளார் வரலாற்றறிவும், தமிழறிவும் பதிப்புக்கலையும் அறிந்த திரு வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள். இதற்காக அவரைப் போற்றவேண்டும்.

இந்நூலை அழகிய முறையில் வெளிக் கொணர்ந்திருக்கும் சேகர் பதிப்பகத்தார்க்கு என் பாராட்டுக்கள் பல. ✪

# சொற்களஞ்சியம் சுரதா!

நம் தமிழகத்தில் தோன்றிய கவிஞர்கள் பலராவர். செய்யுள்கள் மட்டும் யாத்தவர் சிலர்; உரைநடையும் எழுதியோர் பலர்.

உரைநடையில் நாடகம், கட்டுரை, கதைகள் எழுதியோர் சிலர்.

பக்தி, சீர்திருத்தம், நாட்டு நலன் எனப் பல்வேறு துறைகளில் ஈடுபட்டோரும் உண்டு.

வரலாறு, ஆய்வு எனும் ஆர்வமுடையோரும் உண்டு.

பாரதியார், பாரதிதாசன், சுத்தானந்த பாரதியார், கவிமணி, கம்பதாசன், வாணிதாசன், முடியரசன், தமிழ்ஒளி, கண்ணதாசன் போன்றோர் பல துறைகளில் கால் பதித்ததை இலக்கிய வரலாறு காட்டுகிறது.

இவ்வரிசையில் சுரதா அவர்கள் சற்று மாறுபட்டவராகத் தோற்றமளிக்கிறார்.

இவர் வரலாற்றுணர்வு மிக்கவர். பழமைச் சிறப்புகளைப் படியெடுத்துப் பாராட்டுகிறார்; பரப்புகிறார். பழைய செய்திகளை, பழைய நிகழ்ச்சிகளை ஆர்வமுடன் தேடித் திரட்டுவது இவரது தனித்தன்மை.

தேடித் தேடிக் கண்டவற்றைத் தக்கவாறு வெளிப்படுத்துவதில் இவர் ஊக்கம் மிக்கவர்.

சுரதா செய்திக் களஞ்சியமாய்த் திகழ்கிறார். கவிஞர்களில் இவர் ஒரு தனிப் பிறவி. அமைதியானவர்; அடக்கமானவர்; துணிச்சல்காரர்; இடக்காகவும் மடக்குவார்; இயல்பாயும் மடக்குவார். எளிமையாய்ப் பழகுவார்; இனிமையாய் உரையாடுவார்.

முன்னோரைப் போற்றுவார்; முன்னேற்றம் தரும் அரியவற்றையும் போற்றுவார். எடுத்தெறிந்து பேசும் துணிச்சலும் கொண்டவர். சாதியைக் கேட்டுக் குடைந்தெடுக்கும் சுரதா சாதிப்பித்து அற்றவர்.

முரண்பாடுகளின் மொத்த உருவாய்ச் சொல்லாடும் சுரதா அவர்கள், முழுமையான பெருங்கவிஞர் என்பதில் யாருக்கும் கருத்து மாறுபாடு இல்லை. இதுவே இவரது வெற்றி வாழ்வு எனத்தக்கது.

மறைந்த சொல்லாட்சிகளை எளிதாய் அமைத்து அவற்றுக்கு மறுபிறப்பு தருவதில் வல்லவர். புதிய புதிய உத்திகளில் உவமைகளைத் தந்த சிறப்பால் உவமைக்கவிஞர் எனும் புகழைப் பெற்றார். உரையாடும் பொழுதில் புதிய புதிய செய்திகளைக் கொட்டுவார். மேலும் தம் பெயரையும் புதிதாய் அமைத்துக் கொண்டவர் சுரதா. அவ்வாறே பல புதுமைகளையும் செய்து வருகிறார்.

சிலர் முதலில் வெறுப்பர்; சிலர் வீண் வேலை என்பர். ஆனாலும் சுரதா தளராமல் செய்துகாட்டுவார்; தொடர்ந்தும் செய்கிறார்.

அறிஞர், கவிஞர், கலைஞர் போன்ற பலதுறை சார்ந்த சாதனையாளர்களை எந்தவித வேறுபாடும் கருதாமல் போற்றச் செய்வது, அடையாளங் காட்டுவது, நினைவுபடுத்துவது, அவர்கள் பிறந்த ஊரில், வாழுமிடத்தில் மண் எடுத்து வைப்பது இவரது பெரு முயற்சிகளாகும்.

விமானக் கவியரங்கம், கப்பல் கவியரங்கம், படகுக் கவியரங்கம், சிலைக் கவியரங்கம், குதிரை மீது கவியரங்கம், வண்டிக் கவியரங்கம், குன்றுக் கவியரங்கம் என்பன இவரது தனிக் கண்டுபிடிப்புகள்; சாதனைகள். வீடுகளில் கருத்துக் கல்வெட்டுகள் பதிக்கச் செய்ததும் புதிய வரலாறே.

பிறந்தநாள் பட்டியல், திருமண நாள் பட்டியல் அச்சிடச் செய்து பரப்பி வருவதும் புதுமைகளல்லவா!

நல்லோரையும் சிறந்தோரையும் பாடும் சுரதா, நடிகர் - நடிகையையும், பல்வேறு தரப்பினரையும் பாடுவார். பொரி, கடலை வறுப்போரையும் மறவாது போற்றுவார். தொழில் வேறுபாடுகளைக் கருதாமல் செய்திகளைப் பாடுவது இவர் வழி.

இவர் ஆத்திகத்தை அறவே எதிர்க்கிறார்; நாத்திகத்தை முற்றாக வளர்க்கிறார்.

இலக்கியத் தேனீயாகவும் வரலாற்றுச் சுவைஞராகவும் வாழ்பவர் சுரதா!

எழுத்தாளர்க்கும் இளங்கவிஞர்க்கும் ஊக்கந் தருபவர். பேராசிரியர்க்கும் பாடக் குறிப்புகள், நுண்மைச் சிறப்புகள் உணர்த்துவார்.

பக்தியை நம்பாத சுரதா, பக்தி வளர்க்கும் பைந்தமிழை மதிப்பார்; சுவைப்பார்.

புதிய சொல்லாக்கத்தில் ஆர்வமிக்க இவர், புதுப்புதுச் சொற்கள் எங்கே பிறந்தாலும் அதைக் கண்டு வியப்பார்; மகிழ்வார்; பரப்புவார்!

முட்டை என்பது ஒரு விதை என்று கூறிய இளங்கவிஞரை இதயந் திறந்து பாராட்டிப் பரிசும் அளித்தார்; பிறரையும் அவ்வழியில் ஊக்கங் கொள்ளச் செய்தார். இவ்வகையில் புத்தார்வங் கொண்டோர் பலராவர்.

வடசொற்கள், ஆங்கிலச் சொற்கள் முதலான வேற்றுமொழிச் சொற்களைப் பலரும் பல காலங்களில் தமிழ்ச் சொற்களாகப் படைத்தனர்; படைத்து வருகின்றனர்.

இன்று நம்மில் பலர் அப்புதிய சொற்களைக் கையாள்கிறோம்.

ஆனால் புதிய தமிழ் வடிவம் தந்தவரை நினைவில் கொள்வதில்லை. எப்பொழுது, யாரால், எந்த நிலையில் மொழியாக்கம் நிகழ்ந்தது என்பதைப்பற்றி நாம் கருத்தூன்றிப் பார்ப்பதில்லை.

சுரதா அவர்கள் அப்படி ஒதுங்கி விடுவதில்லை. முனைந்து அதைக் கவனிப்பார். குறித்து வைப்பார். பிறர்க்கும் உரைப்பார். அவ்வகை அரும்பணியின் தொகுப்பே இந்நூல். சொற்கள் பிறந்த காலம், இடம், நூல் எனும் முழு விவரங்களும் தொகுத்து வைத்தார். அதுவே ஒரு நூலாய் வெளி வருகிறது.

இந்நூல் ஒரு திரட்டு! சுரதாவின் தேன் கூடு!

சொல் மொழிமாற்றம் பெற்ற சுவடுகளை அடையாளங்காட்டும் அரிய தொகுப்பு. கி.பி. 1857 முதல் 1953 வரை வெளிப்பட்ட

மொழிமாற்றச் சொற்களைத் (தம் பார்வையில் பட்டவற்றை) தேடித் தந்துள்ளார். 238 நூல்களும் 200 நூலாசிரியர்களும் பட்டியலாய்த் தரப்பட்டுள்ளது. 42 இதழ்களையும் தெரிந்து கொள்ளலாம். அவரது ஆர்வ முயற்சிக்கு நூல் வடிவம் தந்துள்ளோம். சொல்லடைவுகளைக் கொண்டு சொற்களைத் தேடிப் படித்தறியலாம்.

கவிதை படைக்கும் கற்பனையுள்ளம் கலைச்சொல் தேடியுள்ளது; புதுச்சொல் கண்டு பூரித்துப் பொற்குவியலாய்த் திரட்டிக் காத்து, அதன் பிறப்பையும் காலத்தையும் நாம் அறிய வழங்குகிறது.

இத்தொண்டு தக்கது; தனித்தது; இனிப்பது; உயர்ந்தது.

அவர் உள்ளத்தில் கொந்தளித்துக் கிடக்கும் கவிதைகளும் காப்பியங்களும் எழுத்துருவில் முழுமையாகத் தராவிடினும் கருதத்தக்க, மொழி வளர்ச்சிக்குரிய தமிழாக்கச் சொற்களைத் தொகுத்தளித்திருக்கும் தொண்டு தனிச் சிறப்புடையது. தேவைப்படும் தமிழ்த்தொண்டு.

தமிழாக்கச் சொற்களை எழுதியோர் - எழுதப்பெற்ற நூல்கள் பற்றிய பட்டியலும், தமிழாக்கச் சொற்களின் அகர வரிசைப் பட்டியலும் பின் இணைப்பாகத் தரப்பெற்றுள்ளது. வாசிப்போர் பார்த்துப் பயனடைய வேண்டுகிறோம்.

மொழி வளர்ச்சிக்கும் பேராசிரியர்களுக்கும் உதவும் பெருந்தொண்டு.

தமிழ்க் கல்வியுலகம் கவிஞரைப் பாராட்டும் என்பது உறுதி. எமது நிலையம் இதனை வெளியிட, விரும்பி அளித்த உவமைக் கவிஞருக்கு எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

1965 ஏப்ரல் 14ஆம் நாள் கவிஞரின் கவிதைத் தொகுப்பைத் **தேன்மழை** எனும் பெயரில் வெளியிட்டோம். அதையடுத்து, **கவிதைத் தலைவர் நேரு** எனும் 16 பக்கமுள்ள அரிய கவிதைப் புத்தகம் ஒன்றை அழகுற வெளியிட்டோம். 38 ஆண்டுகளுக்குப் பின் மொழியாக்கச் சொற்களின் தொகுப்பை 2003இல் வெளியிட்டு மகிழ்கிறோம். தமிழுலகம் பயன்பெறும் என நம்புகிறோம்.

அன்பன்

**வெள்ளையாம்பட்டு சுந்தரம்**

## Geometry - அளவு நூல்

கண்டிதமான அளவு நூலில் குத்துக்கு யாதொரு பெருமையும் இல்லை. (அதாவது) நீட்சியும் இல்லை, அகலமும் இல்லை, கனமும் இல்லை. கோட்டுக்கு நீட்சி மாத்திரம் உண்டேயன்றி, அகலமும் இல்லை, கனமும் இல்லை. ஆகையால், வழக்கத்தில் குத்துக்களையும், கோடுகளையும், இந்த வரையறுப்பு வாக்கியங்களின் கருத்துக்கு எவ்வளவோ சமீபமாய்ப் பொருந்தும்படி நாம் எடுக்கிறோமோ, அவ்வளவு, அவற்றின் மீது சார்வாய் இருக்கும் வேலைகள் திருத்தமாய் இருக்கும்.

நூல் : அளவு நூல் (1857), இரண்டாம் புத்தகம், பக்கம் - 4
நூலாசிரியர் : தாமஸ் லுண்டு, B.D.
விசுவகன்மியம் : சிற்ப நூல்



செவித்துவாரம் – ஓசைப்புழை
சுக்கிலம் – வீரியம்
சாதாரணம் – பொது

நூல் : சிவதருமோத்தரம் மூலமும் உரையும்
(மறைஞான சம்பந்த நாயனார்)
உரையாசிரியர்
குறிப்புரை : திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவாமூர்த்திகள்



## புநர் விவாகம் - மறுமணம்

மேல் விவரித்த வேத வசனங்களாலும் ஸ்மிருதி வசனங்களாலும் புருஷ சங்க நேர்ந்திராத கைமைகளுக்குப் புநர்விவாகஞ் செய்வது வேத சாஸ்திர சம்மதமென்றும், சில பிராம்மண ஜாதியில் இப்போதும் மறுமணம் நடந்தேறி வருகிறதாக ஜசுநாததர்க்க பஞ்சானன வியாக்கியானத்தினால் தெரிய வருகிறபடியாலும், மேற்குறித்த வசனங்களின் ஆதாரத்தின் பேரில் மறுமணஞ் செய்து கொள்வதாய் தமயந்தி சுயவரம் சாட்டினதாக நளசரித்திரத்தினால் தெரிய வருகிறபடியாலும், பல்லாரி ஜில்லாவில் லிங்க பலஜளு என்கிற மிகவும் மேன்மை பெற்ற குலத்தாரில் சீரையுடுக்கி என்கிற மறுமணம் இப்போதுஞ் செய்யப்பட்டு வருவதாலும், இன்னம் சில இந்து ஜாதிகளில் மறுமணம் நடந்தேறி வருவதாலும், இத்தேசத்தில் பூர்வ காலத்தில் அது நடந்தேறி வந்து சிலகாலமாய் ஏதோ

ஒருவிதத்தில் நின்று போயிருப்பதாகவும், மேற்சொல்லிய துரைத்தன சட்டங்களால் இராஜநீதிக்கும், ஜன சவரட்சணைக்கும், சவுக்கியத்திற்கும், விர்த்திக்கும் ஒத்திருப்பதாகவும் பிரகாசப்படுகின்றது.

நூல் : இந்து கைமை புநர்விவாக தீபிகை (பக்கம் 13)
நூலாசிரியர் : சைதாபுரம் காசி விசுவநாத முதலியார்.



## Translation - மொழி பெயர்ப்பு

ஐந்தாம் வேதமென்னப்பட்ட ஸ்ரீ மகாபாரத இதிகாசமானது அநாதியான சம்ஸ்கிருத பாஷையில் ஸ்ரீ வேதவியாசரால் ஆதியில், சபாத லக்ஷமன்கின்ற நூற்றிருபத்தையாயிரங் கிரந்தமாக உலகோர்க்கு இகபர சுகிர்தப் பிரயோசனகரமாய் நின்று உதவும்படி பிரசாதிக்கப்பட்டது. இதனை, அக்காலத் தொடங்கி இந்த பரதக் கண்டத்தில் வழங்கும் வடதேசத்துப் பாஷைகளிலும் தென்தேசத்துப் பாஷைகளிலும் அவ்வப் பெரியோர் தங்கள் தங்கள் தமிழ் தெலுங்கு முதலிய நடைகளில், தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழி பெயர்ப்பென்கின்ற நூல் யாப்பின் விதிப்படி காவியம் பத்தியம் வசனம் ஆகிய பல ரூபங்களாக ஏற்படுத்தியிருக்கின்றனர். அவற்றுள் வெண்பாப் பாரதமென்பது மதுரைப் பாண்டியராஜன் சங்கத்தார் செய்தது: இது இக்காலத்தில் இறந்த நூலாகி பொருளிலக்கண நூல்களில் மேற்கோளாக மாத்திரம் காணப்படுகின்றது.

நூல் : மகாபாரதமென்னும் இதிகாசத்தில் முதலாவது ஆதிபர்வம் (1870)
மகாபாரத சரித்திர பாயிரம் : பக்கம் 1
நூலாசிரியர் : தரங்கை மாநகரம் ந.வ. சுப்பராயலு நாயகர்.



## தொகை விளம்பி

இது ஒரு யந்திரத்தின் பெயர். இருப்புப்பாதை வண்டிகளில் ஏறிச் செல்லும் பிரயாணிகளின் தொகையைத் தவறாமல் குறிப்பிக்கும். இந்த யந்திரங்கள் சில சென்னை வீதி இரும்புப் பாதை வண்டிகளில் வைக்கும்படி சீமையினின்று வந்து சேர்ந்தனவாம். வனவிலங்கதிசயம் பார்க்கப்போகும் பெயர் இத்தனை பெயரென்று திட்டமாய்க் கண்டு சேர்ந்த கட்டளைக்களுக்கு அறியும் படி ஒரு யந்திரம் உத்தியானத்திலும் வைக்கப்படுமாம்.

இதழ் : ஜனவிநோதினி, ஆகஸ்டு - 1874
சொல்லாக்கம் : இதழாசிரியர்.



| | |
|---|---|
| கமா (Kama) | – முனை கூட்டு |
| டேஷ் (Dash) | – சிறு கீற்று |
| பிராக்கெட் (Bracket) | – பெருங்கீற்று |
| முற்றுப் புள்ளி (Pullstop) | – குத்து |
| டபுள் பிராக்கெட் (Double Bracket) | – இருதலைப் பிறை |

, இம்முனை கூட்டுச் சொல் முதலியவற்றின் பின்னும்,

- இச்சிறுகீற்றுச் சொற்களின் பிரிவுக்குப் பின்னும்,

— இப்பெருங்கீற்றுப் பதசாரத்துக்குப் பின்னும்,

( ) இவ்விருதலைப் பிறை வருவிக்கப்பட்ட சொற்களுக்கும், இக்குத்து முற்றுச் சொல்லுக்குப் பின்னும்,

[ ] இவ்விருதலைப் பகரந் தாத்பரியத்துக்கும்,

* இத்தாரகை அடியிற் காட்டப்பட்டவற்றிற்கும் வைக்கப்பட்டன.

நூல் : நிஷ்ட்டாநுபூதி மூலமும் உரையும் (1875 ஆகஸ்டு) பக்கம் 2

உரையாசிரியர் : முத்து கிருஷ்ண ப்ரம்மம்.



## அந்தக் கரணம் - உட்கருவி

பூமியென்னுங் கற்பக விருக்ஷத்தினது யௌவன மென்னும் நறும் புஷ்ப மஞ்சரி, மங்கையரது அந்தக் கரணங்களாகிய (உட்கருவிகள்) வண்டுகளை ஆகருஷிக்கின்றமை சகஜமே.

நூல் : வில்ஹணீயம் (1875) பக்கம் 10

மொழி பெயர்ப்பாளர் : (யாழ்ப்பாணத்துப் புயோலி) மகாவித்துவான் வ. கணதிப்பிள்ளை



## சித்தப்பிரமை - அறிவு மயக்கம்

இது முகமன்று, முயற்களங்கமின்றிய சந்திரனே! இவைகள் ஸ்தனங்களல்ல, பூரண அமிர்த கும்பங்களே! இது அளகபந்தியன்று, காமாயுத சாலையே! இவைகள் நேத்திரங்க ளல்ல, யௌவன புருஷர்களைப் பந்திக்கும் விலங்குகளே! அந்தகார சமூகமும், சந்திர பாகமும், இந்திர வில்லும், இரு

நீலோற்ப மலரும், பதும புஷ்பமும், சங்கும், சுவர்ண கும்பங்களிரண்டும், ஆலிலையும், மின்னலும், இரண்டு வாழைத்தண்டும், எவ்வாறோ ஒன்றாய்ச் சேர்ந்து எனக்குச் சித்தப்பிரமையை (அறிவு மயக்கம்) உண்டாக்கி மதனபீடை ஜனிப்பிக்கன்றன.

சுதினம் – நல்ல நாள்
தர்ப்பணம் – கண்ணாடி
அந்தகாரம் – இருள் சின்னம்
அடையாளம்
சாரங்கம் – வில்
சித்தப்பிரமை – அறிவு மயக்கம்
மதன பீடை – காம நோய்
ஸ்படிகம் – பளிங்கு
க்ஷமித்தருளல் – பொறுத்தல்
கஜகும்பம் – யானை மத்தகம்
நிபுணை – மிக வல்லவள்
வாஞ்சை – பிரியம்
சம்பூரணமாகும் – நிறைவேறும்
சுதினம் – நல்லநாள்
தர்ப்பணம் – கண்ணாடி
அந்தகாரம் – இருள்
சின்னம் – அடையாளம்
சாரங்கம் – வில்
சித்தப்பிரமை – அறிவு மயக்கம்
மதனபீடை – காமநோய்
ஸ்படிகம் – பளிங்கு
க்ஷமித்தருளல் – பொறுத்தல்
விநயம் – மரியாதை
பிரதிகூலமாய் – மாறாக
சிரோண்மணிகாள் – தலைவர்கள்
சங்கோசம் – வெட்கம்
தரம் – பக்குவம்
சரற்காலம் – மாரிகாலம்
அபேக்ஷை – ஆசை
சுதினம் – நல்லநாள்
வாஸ்தவம் – உண்மை
சங்கமம் – கூட்டம்
அந்தக்கரணம் – உட்கருவி
ஆருஷிக்கின்றமை – இழுத்தப்படுகின்றமை
சகஜம் – உண்மை
அபிலாஷம் – விருப்பம் (பக்.10)
காடந்தகாரம் – சுனவிருள்
ரக்ஷணம் – காத்தல்

| | | |
|---|---|---|
| சிரேஷ்டன் | – | தலைவன் (பக்.11) |
| உபசாரபூர்வகம் | – | முன் மரியாதையாக (பக்.13) |
| சோடசம் | – | பதினாறு |
| வியாகுலம் | – | துக்கம் |
| சுவர்ணச்சலாகை | – | பொன் ஈட்டி |
| அளகபந்தி | – | மயிர் முடிச்சு |
| பாலாதித்தியன் | – | இளஞ்சூரியன் |
| தனசம்பத்து | – | பணச்செல்வம் (பக்.22) |
| சூடகம் | – | வளையல் (பக்.23) |
| பிரலாபம் | – | புலம்பல் (பக்.25) |
| சம்பாவனை | – | மரியாதை (பக்.29) |



## High Court - உயர்நீதி சாலை

இராமசாமி ராஜு இளம்பிராயத்திலேயே மிகவும் நுட்ப உணர்வும் ஆழ்ந்த அறிவும் உடையராயிருந்தனர்.

'யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு'

என்ற ஆன்றோர் திருவாக்கைக் கடைப்பிடித்து பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்க விரும்பி 1882 ஆம் வருஷம் லண்டன் மாநகருக்குச் சென்றார். அங்குத் தங்கிய காலத்தில், ஆக்ஸ்பர்ட் யூனிவர்சிட்டியிலும், லண்டன் யூனிவர்சிட்டி காலேஜிலும், தமிழ், தெலுங்கு இவை இரண்டிற்கும் போதகாசிரியராக விருந்தது மன்றிப் பத்திரிகைகளுக்கு விஷயதானஞ் செய்து அதனால் பெறும் பொருளால் தம்மையும் தம் குடும்பத்தையும் போற்றி வந்தார். அக்காலத்தில்தான், ஆங்கில பாஷையில் 'அறுபது மந்திரிகள் கதை' என்னும் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். தாம் குறித்து சென்ற பாரிஸ்டர் பரீட்சையில் தேறியபின் 1885 ஆம் வருஷம் இங்கிலாந்தை விட்டுப் புறப்பட்டுச் சென்னை வந்து சேர்ந்தார்.

அதே வருஷம் ஜூலை மாதத்தில் சென்னை உயர் நீதி சாலையில் (High Court) அவர் ஒரு பாரிஸ்டராக ஏற்றுக் கொள்ளப்பெற்றார்.

| | | |
|---|---|---|
| நூல் | : | பிரதாபசந்திர விலாசம் (1877) (1915) (பக்கம்–2) |
| நூலாசிரியர் | : | ப.2. இராமசாமிராஜு, பி.ஏ., பாரிஸ்டர் – அட் – லா எப்.ஆர்.எச்.எஸ். (லண்டன்) எம்.ஆர்.ஏ.எஸ். (லண்டன்) |
| பதிப்பாளர் | : | வி. ராமசாமி சாஸ்திரிலு |



## அந்நியாபதேசம் - முன்னிலைப் புறமொழி
## ஸாகூதம் - உள்ளுறை

அவ்வளவில் அச்சபையருகிலிருந்தோர் தருவின் மீதிருக்கும் குயிலின் இனிய குரற் கேட்டலும், அதனை முன்னிட்டுக் கூறியதாக அரசனைக் குறித்து, 'ஓ! குயிற் பிள்ளாய்! சுருதிக்கு இதமில்லாமலே கடினமாகக் கூவுகின்ற நீசமாகிய காக்கையின் சம்மந்த மில்லாவிடின் நீ சிறப்படைவாயன்றோ' என்று முன்னிலைப் புறமொழியாக (அந்நியாபதேசம்)வோர் செய்யுளைக் கூறினர்.

உள்ளுறைப் (ஸாகூதம்) பொருளினையுடைய அவ்வுரையைக் கேட்ட 'சடபிஞ்ஞர்' – புத்தர்கள், மிதியுண்ட அரவு சீறியெழுந்தாற்போலும் வெகுண்டெழுந்து சமய தருக்கத்திற்குத் தாமே முன்னிட்டு வாதிக்கத் தொடங்கினர்.

நூல் : ஸ்ரீ சங்கர விஜயம் (1879) பக்கம் - 6
நூலாசிரியர் : தொழுவூர் வேலாயுத முதலியார் (இராமலிங்க அடிகள் மாணவர்)



## சத்து - இருப்பு

முக்தியின் அவஸ்தையில் மனம், புத்தி முதலியவைகள் நாசமடைந்துவிடுமானால் ஆத்ம விநாசத்திற்கும் முக்திக்கும் பேதமென்ன? ஞானமற்ற ஆத்மாவோ ஆத்மாவேயல்ல, ஞானத்தினாலேயே அதன் சத்தை (இருப்பு) சொல்லப்படுகின்றது.

நூல் : ஜீவாத்துமா (1881) பக்கம் - 10
நூலாசிரியர் : பிரம்மோபாஸி



## ஜடமதியுள்ளவர் - புல்லறிவாளர்
## பிராந்தி - மயக்கம்

ஜடமதியுள்ளவர்கள் (புல்லறிவாளர்) சரீரத்தின் சாரமே ஆத்மாவென்றும், சரீரம் நாசமடையுங்கால் இதுவும் நாசமடைந்து போகின்றதென்றும் நினைக்கின்றார்கள்; ஆனால் இது அவர்களுடைய பிராந்தியே (மயக்கமே) யொழிய வேறல்ல.

நூல் : ஜீவாத்துமா (1881) பக்கம் - 3
நூலாசிரியர் : பிரம்மோபாஸி



| | | | |
|---|---|---|---|
| 1. | அண்டகோளகை | – | வானவட்டம் |
| 2. | இந்திர நீலரத்தினம் | – | கார் தந்த மணி |
| 3. | இலேபனம் | – | பூசுமருந்து |
| 4. | உதரம் | – | வயிறு |
| 5. | உச்சிட்டம் | – | எச்சில் |
| 6. | உபநயனச் சடங்கு | – | முந்நூல் வினை |
| 7. | கஸ்தூரி | – | மான்மதம் |
| 8. | கயிலையங்கிரி | – | வெள்ளிவிலங்கல் |
| 9. | காளமேகம் | – | கறுத்த மேகம் |
| 10. | சிவராத்திரி | – | அரனிரவு |
| 11. | சுபாவலட்சணம் | – | இயல்பு |
| 12. | திலகம் | – | நெற்றிப்பொட்டு |
| 13. | தெய்வலோகம் | – | பொன்னிலம் |
| 14. | தேகச்சுமை | – | உடற்பொறை |
| 15. | பச்சிமம் | – | மேற்றிசை |
| 16. | புளினம் | – | மணல்மேடு |
| 17. | மரணதினம் | – | உலக்குநாள் |
| 18. | மன்மதன் | – | ஐங்கணைக்கிழவன் |
| 19. | முத்தம் | – | உதடு |
| 20. | யோகநித்திரை | – | அறிதுயில் |
| 21. | லாபம் | – | ஊதியம் |
| 22. | வாமம் | – | இடப்பக்கம் |
| 23. | விஷம் | – | கடு |
| 24. | விருத்தாசலம் | – | முதுகுன்றம் |
| 25. | வேதவல்லி | – | மறைக்கொடி |
| 26. | வேதியர் | – | மறைவாணர் |

நூல் : சிவராத்திரி புராணம் (மூலம்) (1881)
(யாழ்ப்பாணத்திலிருந்த காசி-அ. வரதராஜ பண்டிதர்)
அரும்பிரயோகவுரை : மா. நமசிவாயம்பிள்ளை.
(சிவாநந்த சாகர யோகீசுவரர் அவர்களின் மாணாக்கர் மதராஸ் ரிவினியூபோர்ட் ஆபீஸ் (ஸெட்டில்மெண்ட்) கிளார்க்கு)



வியாபாரம் - தொழில்

நூல் : ஜீவாத்துமா விஷயமான ஒரு வியாசம் (1881)
நூலாசிரியர் : பிரம்மோபாஸி. பக்கம் – 12.



## Telephone Wire - மின் கம்பி

நிஜாம் அரசனின் மந்திரியாகிய ஸர் ஜாலர் ஸங் என்பவர் விஷ பேதியால் இறந்து போனார். ராணியவர்கள் மின் கம்பி வழியாய் அவர் குடும்பத்தாருக்கு அநுதாபச் செய்தி அனுப்பினார்கள்.

இதழ் : தேசோபகாரி (1883) மார்ச்: Vol. XXIII. No.3 பக்கம் - 60

சொல்லாக்கம் : இதழாசிரியர்.



## Press - அச்சுக் கூடம்

அவர் இங்கிலாந்துக்குத் திரும்பின போது, அங்கே செங்கோலோச்சின நாலாம் எட்வர்ட் அரசன் கக்ஸ்தொனுக்கு வெகு இஷ்ட சிநேகிதராய் இருந்தமையால், அச்சடி வித்தையை இங்கிலாந்தில் தொடங்குவதற்கான அநுசரணை எளிதில் கிடைத்துக் கொண்டது. ஆகையால் கக்ஸ்தொன் தாம் திரும்பி வந்து சில நாளுக்குள்ளே உவெஸ்த்மின்ஸ்தர் நகரத்தில் 1471 இல் ஓர் அச்சுக்கூடம் ஸ்தாபித்து, அங்கே 20 வருஷக்காலம் அச்சடித் தொழிலாகிய ஜோலியையே நோக்கி வந்தார்.

இதழ் : தேசோபகாரி (1883 - மே) Vol. XXIII; No.3 பக்கம் - 60.

சொல்லாக்கம் : இதழாசிரியர்



## Train - புகைத்தேர் (ரயில்)

பொம்பாய் செல்லும் வழியில் கர்ஜட்டு ஸ்டேஷனிலிருந்து புகைத்தேர் குகைகளில் செல்லும்போது அமாவாசை இரவில் கண் புதைத்தாலும் அமையாத இருளைக் காணலாம்.

நூல் : கங்கா யாத்ர ப்ராபவம் (1887) பக்கம் - 18

நூலாசிரியர் : கவித்தலம் துரைசாமி மூப்பனார்



## லதா கிருகம் - கொடி வீடு

இராமச்சந்திர ரெழுந்தருளி யிருக்கின்றாரென்று மைதிலியார் திருவுளமுகந்து நாணமுற்றவர்போற் றிருமுகங்கோட்டி யத்தோழியரைக் கடிவதொப்பக் கடிந்து சிறிதகன்று, இங்ஙனமே செல்குதுமேல் நாயகரை யினிக்

காணுவ தெங்ஙனமெனத் திருவுளங்கொண்டு, ஏடி பாங்கி! நானாவிதக் கொடிமல்கி யெழிலுற்றிருக்குந் தீங்கனி யம்மாவை யின்னு மொருமுறை பார்ப்போமென்று மீண்டும் போகலும், இட்சுவாகு குலசம்பூதர், ஓ! ஓ! பெண்ணரசி யிங்கு வருகின்றாள் போலுமென்றோர் லதாகிருகத்துட் புகுந்தனர். (லதா கிருகம் – கொடி வீடு). அதாவது! கொடி சூழ்ந்த வைப்பு.

நூல் : பிரசந்நராகவம் (1883) பக்கம் - 28
மொழி பெயர்ப்பாளர் : கவித்தலம் துரைசாமி மூப்பனார்
(ஜி. கே. கருப்பையா மூப்பனாரின் தாத்தா)



## Exchange - மாற்று கைக்கட்டணம்

இந்தியாவிலுள்ள பொன்னை இங்கிலாந்துக்குக் கொண்டுபோய், அவ்விடத்தில் அதை உருக்கி, மறுபடியும் இந்தியாவுக்குக் கொண்டு வருங்காலத்தில், ‘எக்சேஞ்சு’ என்ற மாற்று கைக்கட்டணம் அதின் தலைமேல் சுமத்தி, 10 ரூபாயுள்ள பொருளை 15 ரூபாயாக இந்துக்கள் திரவியத்தைக் கருவறுக்கிறார்கள்.

இதுதான் இப்படியானதென்றால், இந்தியாவிலேயுள்ள 6, 7, 8, 9 மாற்றுள்ள பொன்னை, இங்கிலாந்திலிருந்து வரும், பொன் விலைக்குச் சமானமாக உயர்த்தி இந்தியா வர்த்தகர்கள் பறிக்கிறார்கள்.

இந்தப் பொன் எந்தத் தேசத்திற்கும் போகாமலிருக்க அதற்கு விலையை உயர்த்திப் பணம் பறிக்கும் இந்துக்களைக் கவர்னமெண்டார் கவனியாதது யாது காரணமோ? உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் சுயநலத்தைக் கோருகிறார்களேயொழிய பொது நலத்தைக் கருதவில்லையே!

இதழ் : ஸ்ரீலோகரஞ்சனி (15-8-1888) புத்தகம் - 1 இல - 3, பக்கம் - 8.
இதழாசிரியர் : சி.கோ. அப்பு முதலியார்



## அக்கிராசனம் - வீற்றிருத்தல்

தெரிந்து கொண்டுதான் பேசல் வேண்டுமென்னுங் கவலையல்லாத திடசாலிகளாகிய ஆபாசத்தார் நன்னூல் விருத்தியில் ‘பிற சொற்களும் வருமாலோ வெனின் சாத்தன் வந்தானென்றால் அவனுடையணி முதலியனவும் உடன் வருதல் கூறாதே யமைதல் போலுமென்க’ என்று ஆண்டுரையாசிரியர் கூறியதையும் ‘காது சேர்’ என்பது முதலிய செய்யுட்களில் அவ்வாறு வருதலையும் உணர்ந்து இனியேனும் தம் உளறுபாட்டை விடுவாராக. பின்னும் ‘அஜ்ஞான

வாசத்தைப் பிரித்துக் கூறவில்லை' என்றும் 'அக்கிரா சனத்திருத்தலைக் குறிப்பிக்கும்' (வீற்றிருத்தல்) என்னும் பதத்தைப் பிரயோகித்ததே அதற்குச் சாக்ஷி என்றும் சொல்லுகின்றனர். இடையில் உடுத்தாடையில்லாதார் தலைக்குத் தலைச் சாத்தணிந்தாற்போல 'வீற்றிருத்தல்' என்னும் பதத்துக்குப் பொருளறியாதார் வாதம் பண்ணுதலை மேற்கொண்டு வந்ததென்ன?

நூல் : நிராகரண திமிரபானு (1888) பக். 23, 24
நூலாசிரியர் : தி. முத்துக்குமார பிள்ளை



## அக்கினி பாணம் - தீயம்பு

நூல் : ஸ்ரீ பக்தலீலாமிர்தம் (1888) பக்கம் - 17
நூலாசிரியர் : தஞ்சை மாநகரம் இராஜாராம் கோவிந்தராவ்

(குறிப்பு : இம்மொழிபெயர்ப்பு அடிக்குறிப்பில் இடம் பெற்றுள்ளது)



## உதய காலம் - நாளடி

நூல் : ஸ்ரீ பக்த லீலாமிர்தம் (1888) பக்கம் - 38.
நூலாசிரியர் : இராஜாராம் கோவிந்தராவ்
குறிப்புரை : தஞ்சை மகாவித்துவான் மதுரை முத்து பாத்தியாயர்

(குறிப்பு : இச்சொல்லாக்கம் அடிக்குறிப்பில் இடம் பெற்றுள்ளது)



## Circular Road - வளைவு வீதி

இந்தக் கல்கத்தா பட்டண மானது கங்கையின் ஒரு கிளை நதியின் இடது பாகத்தில் கட்டப்பட்ட பிரம்மாண்ட பட்டணம். இந்தப் பட்டணத்துக்கும் பங்காள சமுத்திரக் கரைக்கும் சுமார் நூறு மைல் நீளமும், ஒன்றரை மைல் அகலமும், சுமார் 8 சதுர மைல் விஸ்தீரணமுள்ளதாக விருந்து, இப்போது அப்படி இரண்டத்தனை விஸ்தீரணமானதாகத் தோற்றுகிறது.

1742-இல் மஹாராஷ்டிரர்கள் இதன் மேல் படையெடுத்து வராதபடி அந்த நதியின் வடபாக முதல் கிழக்குப் பாகம் வரையில் கோண வாய்க்கால் ஒன்றை வெட்டிப் பட்டணத்தைப் பாதுகாத்து வரப்பட்டது. இந்த மஹாராஷ்டிர வாய்க்காலுக்கு அப்புறமும், தற்காலத்து (Circular Road) வளைவு வீதிக்கும் இடையில் Chitpore - சீத்பூர் வடபாகத்திலும் நந்தன் பாக், சீல்தா, எண்டாலி, பாஹார் சிம்லா, பாலிகஞ்சு தென்கிழக்காகவும், பவானிபூர், அல்லிபூர், கிட்டாபூர், தெற்குப் பாகத்திலுமாக அநேக பெரிய கிராமங்கள் சூழ்ந்திருக்கின்றன.

நூல் : திவ்விய தேச யாத்திரை சரித்திரம் (1889) பக்கம்- 118.
நூலாசிரியர் : சேலம், பகடாலு, நரசிம்மலு நாயுடு.
(தமிழகத்தின் முதல் விடுதலைக் கவிஞர்)



## காப்புச் சேனை

கி.பி. 1781 இல் வாரன்ஹேஸ்டிங்ஸ் காசிப் பட்டணத்துக்குப் போய் சிவாலைய காட்டில் கோட்டையிலிருந்த இராஜனைத் தாக்க, அந்த இராஜன் குடிகளுடைய சகாயத்தினால் தப்பித்துக்கொண்டு 20,000 காப்புச் சேனையோடு சூனார் (Chunar) கோட்டையில் போய்த் தங்கி, பிறகு குவாலியூரில் (Gwalior) 29 வருஷ காலம் அடைக்கலம் பெற்று வாழ்ந்து வந்தான்.

மேற்படி நூல் : பக்கம் - 57,



## The Town Hall - நகர மண்டபம்

கி.பி. 1876 – 77 வருஷம் மாகூஷிமை தங்கிய விக்டோரியா சக்கிரவர்த்தினியவர்களுடைய ஜேஷ்ட புத்திரரும், இளவரசருமாகிய, ஸ்ரீ பிரின்ஸ்சாப் வேல்ஸ் இராஜகுமாரர் காசி க்ஷேத்திரத்தைத் தரிசித்தபோது அவரால் கடைக்கால் போடப்பட்டு, சிரேஷ்ட தேசாதிபதிகளிற் சிறந்தவராகிய அப்பன் ரிப்பன் பிரபு (Lord Ripon) அவர்களால் கிரஹப் பிரவேசம் செய்விக்கலான ஒரு அழகிய தரும வைத்தியசாலை இருக்கின்றது. இதற்குப் பிரின்ஸ்சாப் வேல்ஸ் ஆசுபத்திரி என்று பெயர். இந்தக் கட்டிடத்திற்குப் பிடித்த செலவு தொகை முழுதும் சுதேச தரும பிரபுக்களால் கொடுக்கப்பட்டது.

இந்தத் தரும வைத்தியசாலைக்கருகில் கி.பி. 1870 ஸ்ரீ ஜனவரி மீ இந்தக் காசி க்ஷேத்திரத்தைத் தரிசித்த ஸ்ரீ விக்டோரியா சக்கிரவர்த்தினி அவர்களுடைய துவிதிய குமாரராகிய ஸ்ரீ டியூகாப் எடின்பர்க், என்பவருடைய விஜய ஞாபகச் சின்னமாக விஜயநகரம் மஹாராஜ ரவர்களால் கட்டி வைக்கலான நகர மண்டபம் (Town Hall) இருக்கிறது.

மேற்படி நூல் : பக்கம் - 38, 39.



## பிருந்தம் - துளசி

இப்போது இந்த வசனத்தை எங்கு நின்று பார்த்தாலும் திவ்வியமான துளசிச் செடிகள் பெருத்துப் பெரிய வனங்களாகப் பிரகாசிக்கின்றபடியால்

இதற்கு (பிருந்தம் — துளசி என்னும் பதப்பொருளால்) பிருந்தாவனம் என்னும் பெயர் வழங்கி வருவதாகத் தோற்றுகிறது.

மேற்படி நூல் : பக்கம் - 210,



## Compartment - அறைகள்

ஜப்பல்பூர் பார்க்கத் தக்க ஒரு பெரிய பட்டணமாயும், அதைப் பார்த்துப்போக ஆவல் கொண்டவனாயுமிருந்தும், அந்த ஸ்டேஷனிலிருந்து The East India Railway - பெரிய கிழக்கு இந்திய புகை வண்டி பிரயாணம் ஆரம்பிப்பதால், அந்தப் பிரம்மாண்டமான ஸ்டேஷனில் பல வகுப்பான பிரயாணிகள் கும்பல் கும்பலாகக் கூட்டம் கூடியும், நான் வந்த ஜி.ஐ.பி.ஆர். புகை வண்டிப் பிரயாணிகளையும் முக்கியமாக என்னுடன் வந்த ஸ்திரீகளை வெளியில் கொண்டு போக அனுகூலப்படவில்லை; மேலும் பெரிய மழையும் பெய்யத் தொடங்கியதன்றியில், அந்த அர்த்த ராத்திரி காலத்தில் சம்சாரத்துடன் பலவிதத்தாலும் புதிதான ஜப்பல்பூருக்குள் போக என் மனம் துணியவில்லை; ஆகவே, எனது சம்சாரத்தை யிறக்கி ஓர் மறைவானவிடத்தில் நிற்கவிட்டு அலகாபாத்துக்கு ஆள் ஒன்றுக்கு ரூ. 2.15.6 கொடுத்து ரெயில் சீட்டு வாங்கப் போய் அந்த அபரிமிதமான கும்பலில் அடிபட்டு இடிபட்டு அவஸ்தையுடன் டிக்கெட்டுகளை வாங்கினேன்

அந்த ஜப்பல்பூர் முதல் பங்காள பாபுகள்தான் புகை வண்டி ஸ்டேஷன் மாஸ்டர்களாகவும் மற்ற சிப்பந்திகளாகவு மிருக்கிறார்கள். அந்தக் கிழக்கிந்தியப் புகை வண்டிகள் சென்னைப் புகை வண்டிகளைப் போலவே பெரிதாக இருக்கினும், கம்பார்டுமெண்டு (அறைகளை) இரும்புச் சலாகைகளினால் தடுத்திருக்கிறர்கள். எனக்குக் கூடிய வரையில் நல்ல வண்டி யடுக்கப்பட்டது.

மேற்படி நூல் : பக். - 7, 8.



## Donation - நன்கொடை

இந்து கன தனவான்கள் மெம்பர்களாக விருக்கப் பிரியப்படாமற்போனால் நன்கொடை (Donation)களாகவாவது கொடுக்க இஷ்டப்பட்டால் கொடுத்து வரலாம்.

இதழ் : ஸ்ரீலோரஞ்சனி 15-4-1890. புத். 4, இல - 1. பக். - 8, சி.கோ. அப்பு முதலியார்; (சிந்தாதிரிப்பேட்டை) பத்திராசிரியர்.



## இன்ப்ளுயன்ஸா - முடக்குக் காய்ச்சல்

இன்ப்ளுயென்ஸா என்னும் இங்கிலீஷ் பெயரையுடைய முடக்குக் காய்ச்சல் சென்னை, பெங்களூர், ரேச்சூர் முதலிய சென்னை இராஜதானி அநேக இடங்களில் வலைவீசி சிலரைக் கொள்ளையுங் கொள்ளுகிறது. கடந்த பக்ஷம் ஒரு ஸ்திரி இச்சுரம் பொறுக்காமல் கிணற்றில் விழுந்து தற்கொலையும் செய்து கொண்டாள்.

இதழ் : ஸ்ரீலோரஞ்சனி (1890 - ஏப்ரல்)
மேற்படி புத். பக். 7.



## Mills - ஆலைகள்

இப்போது இவ்வுலகத்தினற்கோர் பெரும்பேறென்று சொல்லும்படியாகிய புகைவண்டி யென்ன, தந்தி யென்ன, நீராவிக் கப்பலென்ன, அச்சு இயந்திரங்களென்ன, Millsகளென்னும் ஆலைகளென்ன, Balloonsகளென்னும் ஆகாய ரதங்களென்று சொல்லும்படியாகிய மகா அற்புதமான கருவிகளையும், மற்ற சாமான்களையும் உண்டு பண்ணியவர்கள் யார்? அம் மெய்ச் சமயமாகிய கிறிஸ்து சமயத்தை அனுட்டித்தவர்களன்றோ?

மேற்படி இதழ் : (1-5-1890) புத்தகம் - 4. இல - 4.
கட்டுரை : கிறிஸ்துமதம் முளைத்ததேன்? பக்கம்-28.
கட்டுரையாசிரியர் : பீமநகர் சங்காபிமானி.



## Donation - நன்கொடை

இந்து மதாபிமான ஸங்கம். இச்சங்கம் ஸ்தாபித்து இரண்டு வருடமாகிறது. இதில் மெம்பராய் சேரவேணுமாகில் மாதம் சபைக்கு 4 அணாவும், சங்கத்திற்கு 1 அணா முதல் சந்தாவாக முன்னாடி செலுத்தி வரவேண்டியது. கிளைச் சபையாக சேர்க்கவேண்டுமாகில் வருடம் ஒன்றிற்கு ரூ. 5 கொடுக்கவேண்டியது. கல்வி முதலிய விஷயங்களில் தேர்ச்சியடைந்த வித்வான்களும் பண்டிதர்களும் கௌரவ மெம்பர்களாகச் சேர்க்கப்படுவார்கள். நன்கொடை (Donation) கொடுக்கப் பிரியப்பட்டவர்கள் கொடுத்து வரலாம்.

மேற்படி இதழ் : (1-5-1890) புத் - 4. இல - 2. பக். - 16.
எழுத்தாளர் : தி.மா. பழனியாண்டி பிள்ளை.



| | | |
|---|---|---|
| Power loom | - | அடிக்கும் தறி |
| Pendulam | - | தொங்கியாடி |

அச்சடிக்கிற விதத்தை உண்டாக்கிய ஜான் பாஸ்டு (John Faust) என்பவரைப் பிசாசின் தோழன் என்றும், பிசாசைக் கைவசப்படுத்திக் கொண்டு புஸ்தகம் புஸ்தகமாய் உற்பத்தி செய்கிறானென்றும் சொன்னார்களன்றோ? நூற்கிற யந்திரம், சாயமிடும் யந்திரம், அடிக்கும் தறி இவைகளை உண்டு செய்தவர்களும் கொஞ்சப்பாடா பட்டார்கள்? ஒன்றுமில்லாத ஒரு பெண்டுலம் (அதாவது கடிகாரங்களில் ஆடும் அரசிலை போன்ற 'தொங்கியாடி' என்பது) கண்டுபடித்தவனைக்கூட அல்லவா 'குடுகுடுபாச்சா' 'Mr. Swing Swang' என்று பரிஹஸித்தார்கள்!

மேற்படி இதழ் : (1-10-1890) புத்தகம் -4, இல- 12, பக்கம் - 94
கட்டுரையாளர் : ஓர் இந்து



## Gas Light - காற்றெரி விளக்கு

நீராவியந்திரம் கண்டுபிடித்தவனைப் பைத்தியக்காரனென்று கல்லை விட்டெறியாத பேருண்டோ முதலில்? காற்றெரி விளக்கை (Gas Light) உண்டாக்கினவனை அவன் காலத்தோர் யார்தான் நகைத்துக் காறி உமிழவில்லை!

மேற்படி இதழ் : (15-9-1890). புத்தகம் - 4, இல - 11, பக்கம் - 94.
கட்டுரையாளர் : ஓர் இந்து



## பென்ஸல் - எழுதுகோல் (1890)

### விகுர்தி வருஷத்திய பாக்கெட் பஞ்சாங்கம்

இப்பஞ்சாங்கம் ஒன்று ரிப்பன் அச்சுக் கூடத்துத் தலைவர் ம—ள—ள—ஸ்ரீ, சை. ரத்தின செட்டியார் அவர்கள் அனுப்ப வரப்பெற்றோம். இப்புத்தகத்தி லடங்கிய விஷயங்கள் அநந்தம். அவற்றை இவண் குறிப்பிடப் பெருகும். இப்புத்தக ரூபத்துள், தினசரிக் குறிப்புக்குரியவும், வரவு செலவுக்குரியவும், விசேஷக் குறிப்புக்குரியவுமான விஷயங்கள் எழுதிக்கொள்ள வெற்றுக் கடிதங்கள் விடப்பட்டுள்ளன. எழுதுவதற்குத் தகுந்த (பென்ஸல்) எழுதுகோலும் வைத்திருக்கின்றது. விலை 6 அணா. தபாற்கிரயம் — 1 — அணா. வேண்டுவோர் மேலைய செட்டியார் அவர்கட்கு எழுதிக்கொண்டால் கிடைக்கும் — பத்

இதழ் : ஸ்ரீலோகரஞ்சனி (1890) புத் - 4, இல - 3 பக். - 1



## Headings - தலைப்பெயர்கள்

ஞானாமிர்தம் என்னுந் திருநாமம் புனைந்து தமிழ்ச்சுவையும் சொன்னோக்கமும் பொருணோக்கமும் பொலிந்து நான்கு பக்கமுடையதாய் மாதம் இருமுறை பிரசுரஞ் செய்யப்படும் ஓர் பத்திரிகையை நமது பார்வைக்கனுப்பிய பத்திராதிபரவர்கட்கு விஞ்ஞாபன மோச்சுகின்றனம். இது ஸ்ரீலஸ்ரீ யாழ்ப்பாணம் சபாபதி நாவலரவர்களை ஆசிரியராகப் பெற்றது. இதில் சாதாரணப் பிரகரணம், வைதிக சித்தாந்தப் பிரகரணம், பரமதப் பிரகரணம், தமிழ் இலக்கிய இலக்கணப் பிரகரணம், சமாசாரப் பிரகரணம் கடிதம் முதலிய தலைப்பெயர்கள் வாய்க்கப் பெற்றிருக்கிறது.

மேற்படி இதழ் : (1-6-1888) புத்தகம் - 2, இல. 11, பக். - 82



## தலையங்கம் - தலைப்பெயர்

1889ஞ் ஆகஸ்டு – மீ 24 உ பிரசுரமாகிய மஹாவிகட தூதன் பத்திரிகையில் 'அரக்கோணம் சான்றார் என்னுஞ் சொல் வழக்கின் முடிவு' எனத் தலைப்பெயரிட்டெழுதிய 'க–ஷ–கி என்பவரது தோழன்' எனப் பெயர் பூண்டவர் பதினெண் புராணங்களின் கருத்தையும் நோக்காது, முன்னிருந்த அருந்தமிழ்ப் புலவர் கருத்தையும் நோக்காது, சான்றோராகிய க்ஷத்திரியர்களால் வெளியிடப்பட்ட நூற்களின் கருத்தையும் நோக்கது சாஸ்திர சம்மதமின்றி, 'சான்றார்' என்னும் பெயர் சாதிப் பெயரல்லவென்றும், சில நூற்களிற் சான்றார் என்னும் பெயர் அரசருக்கு வழங்கிடினும் அதைப்பற்றி எனக்கு அவசியமில்லை என்றும், சேக்கிழார் அருளிச் செய்த பெரிய புராணத்தின்கண் வருகின்ற 'ஈழக்குலச் சான்றார்' என்பதற்கு 'கள்வாணிபகுலவறிஞர்' எனப் பொருளாகுமென்றும், சில நூற்களில் அரசருக்கு கிராமணி என்னும் பட்டப்பெயர் வழங்கிடினும் அது ராஜகுல முற்றிலும் வழங்கவில்லை என்றும், சேக்கிழார் பெரிய புராணத்திற்கு நம்பியாண்டார் நம்பி தருவந்தாதிதான் முதனூலென்றும், வடநாட்டரசர் தென்னாட்டிற்கு வந்ததில்லை என்றும் இதுபோல இன்னுஞ் சில மொழிகளையும் தாறுமாறாகப் புரட்டி மூட தாற்பரியஞ் செய்து எழுதியிருக்கின்றார்.

நூல் : சான்றார் என்னுஞ்சொல் வழக்கின் முடிவைத் தகிக்குஞ் சண்டபானு (1891) பக்கம் - 1
நூலாசிரியர் : ஷண்முக கிராமணியார் (க்ஷத்திரிய வித்வான் நிவேதன சங்கத் தலைவர்)



## எரிநக்ஷத்திரம் - விண்வீழ்க்கொள்ளி

சில சமயங்களில் விண்வீழ்க் கொள்ளிகள் இப்பூமியில் விழுகின்றன. அப்போது அவற்றைப் பரீட்சித்துப் பார்க்கையில் அவைகள் சாதாரணமான கற்களாகவே இருக்கின்றன. இவைகளைப் பல பொருட்காக்ஷி சாலையில் நாளைக்குங் காணலாம்.

இதழ் : மஹா விகட தூதன் 4-4-1891
புத்தகம் : 6, இலக்கம் : 13, பக்கம் : 3.
கட்டுரையாளர் : ஜான் டானியல் பண்டிதர்.



## Photo - புகைப்படம்

வெகு நேர்த்தியான அமைப்பு! அற்புதமான வேலை!

பார்க்கப் பார்க்க பரமானந்தத்தைத் தரும்!

தங்க வர்ணமான சாயையுள்ளது!!

சிதம்பரம் நடராஜர் கோயிலின் புகைப்படம்.

சிற்சபை, கனகசபை, நிருத்தசபை, முக்குறுணிப் பிள்ளையார் கோயில், தில்லை கோவிந்தராஜர் சந்நிதி முதலியனவும் இரண்டு கோபுரங்களுமடங்கியது.

இதழ் : பிரம்மவித்தியா (1-12-1891)



## பாரசூட் - பெருங்குடை

இந்தியாவெங்கும் பிரஸித்தி பெற்ற ஸ்பென்ஸர் நமது சென்னைபுரிக்கு வந்து, மும்முறை ஆகாய யாத்திரை செய்தார். இவர் ஆகாயத்தில் ஏறும்போது புகைக்கூட்டின் துணையினாலேறி வரும்போது அதைவிட்டு அதனோடு சேர்ந்தாற்போல் மாட்டியிருந்த பாரசூட் என்னும் பெருங்குடையைப் பிடித்து அதன் கீழே தொங்கிக்கொண்டு தமக்குச் சிறிதாயினும் அபாயமில்லாதபடி க்ஷேமமாக வந்திறங்கினார்.

இதழ் : ஜநாநந்தினி (1891) மார்ச்; புஸ்த : 1 இல. 3. பக்கம் : 53.
ஆசிரியர் : அன்பில் எஸ். வெங்கடாசாரியார்



## மரணப்ரயாணம் - கடை வழி

கடை வழி – முடிவாகிய பிரயாணம். (மரணப்ரயாணம்), உலகத்தாரே பொருள் முதலிய யாவும் நீங்களிறக்கும்போது கூட வராதன ஆதலால், குமரவேளை வாழ்த்தி, எளியோர்க்கு உதவி செய்யுங்கள் என்பது கருத்து.

நூல் : கந்தரலங்காரம் மூலமும் உரையும் (1892) பக்கம் - 10.
பதவுரை : வித்யாவிநோதிநி பத்ராதிபர்



## ராவுத்தன் - குதிரை வீரன்

ராவுத்தன் – திசைச்சொல், பொருள் – குதிரை வீரன் என்பது.

நூல் : கந்தரலங்காரம் மூலமும் உரையும் (1892); பக். - 22
பதவுரை : வித்யா விநோதிநி பத்ராதியர்



## மோக்ஷம் - தனிவீடு

மேற்படி நூல் : (1892) பாடல் 45. பக்கம் - 28.
((குறிப்பு : இச்சொல்லாக்கம் அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது)



## Room - சிற்றில்

அறை – அடி, சொல், சிற்றில் (Room) திரை, பாறை, மறை, மலையுச்சி.

நூல் : தமிழ் வித்தியார்த்தி விளக்கம் (1894) முதற் பாகம், பக். 2
நூலாசிரியர் : பு. த. செய்யப்ப முதலியார் (சென்னை செண்ட் மேரீஸ் காலேஜ் தமிழ்ப் பண்டிதர்,)
(தமிழ்நாட்டில் பயிற்சிமொழி தமிழாகத்தான் இருக்கவேண்டும் என்றவர்)



## விசாலாட்சி - அழகிய கண்ணையுடையவள்

நூல் : தமிழ் வித்தியார்த்தி விளக்கம் (1894) பக்கம் : 78.
நூலாசிரியர் : பு.த. செய்யப்ப முதலியார் (சென்னை செண்ட் மேரீஸ் காலேஜ் தமிழ்ப் பண்டிதர்).

Phaeton – புரவி வண்டி (புரவி – குதிரை)
மோட்சம் – நல்வீடு
நிகேதனம் – வீடு

நூல் : ஸ்ரீ பத்மநாப ஸ்வாமி சந்திரகலாஷைமாலை (1894) பக்கங்கள் : 7, 11, 16.
நூலாசிரியர் : அபிநவ காளமேகம் அநந்த கிருஷ்ணையங்கார் (ஸ்ரீ வானமாமலை மடம், ஆஸ்தான வித்துவான்)



## மருபூமி - பாலை நிலம்

அதனிடத்தில் (பிரமத்தினிடத்தில்) மருபூமியில் (பாலை நிலத்தில்) ஜலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையிற் புருஷன், ஸ்படிகத்தில் வர்ண முதலியவைபோல் சிவப்பு, வெளுப்பு, கறுப்பு இந்தக் குணமயமானதும் ஏறக்குறைவன்றி ஒவ்வொன்றும் சமமாயிருக்கிற குணசுரூப மானதும் வாக்குக் கெட்டாததுமாகிய (என்றால், மித்தையானதுமாகிய) மூலப் பிரகிருதி யிருந்தது.

நூல் : மாயாவாத சண்ட மாருதம் (1895)பக்கம் - 137.
நுலாசிரியர் : ஓர் இந்து



## பைண்டிங் - கட்டடம்

அநேக வருடங்களாய்ப் பாடசாலைகளிற் கற்கப்பட்டு வருகின்ற மகாலிங்க ஐயர் இலக்கணச் சுருக்கமானது, பலரால் பலவித மச்சிடப்பட்டு, எழுத்து சொன் முதலிய பிழைகளுடன் கூடி நிற்பதைக் கண்டு, தக்க பண்டிதர்களைக் கொண்டு பரிசோதித்து, நந்தேயபாஷைகளின் அக்ஷரங்களிற்கு மிகவுஞ் சிறந்த எஸ்.பி.ஸி.கே. என்னும் யந்திர சாலையிற் பதிப்பித்ததுடன், ஒவ்வோரியலின் கடையிலிலும் அவ்வவ் வியலையெட்டிய பரீக்ஷை வினாக்களுங் கூட்டியுளோம். குஜ்ஜிலிக்கடைப் பதிப்பிற்கும் இதற்கும் விலையில் வேற்றுமை சிறிதேயாயினும், காகிதம், அச்சு, திருத்தம், கட்டட முதலியவைகளில் மிகவும் சிறந்ததாயிருக்குமென் றறிவிக்க நாடுகின்றோம்.

இப்படிக்கு,
அரங்கநாத முதலியார் அண்ட் கம்பனி
சென்னை மே மீ 1உ. 1–5–1896

நூல் : மழவை, மகாலிங்க ஐயர் இயற்றிய இலக்கணச் சுருக்கம் (1861) பக்கம் - 1,



## ஆண்டிமொனி - நிமிளை

அச்செழுத்து எப்படி உண்டாகிறது?

நாலு பங்கு ஈயத்துக்கு ஒரு பங்கு நிமிளை (ஆண்டிமொனி) கூட்டுவார்கள்.

நூல் : மூன்றாம் ஸ்டாண்டர்டு புத்தகம் பதப்பொருளும் வினா விடையும் (1897)
நூலாசிரியர் : எத்திராஜ முதலியார்.



## அம்போதரங்கம் - நீரின் அலை

அம்போதரங்கம் (நீரின் அலை) அல்லது அசையடி – இது கடல் அலைகள்போல அடிகள் அளவடியாய்ப் பெருத்தும், சிந்தடியாய்ச் சிறுத்தும், குறளடியா யதனினும் சிறுத்தும் தாழிசைக்குப் பின் வருவது; நாற்சீராலாகிய ஈரடியால் இரண்டும், ஓரடியால் நான்கும், முச்சீரடியால் எட்டும், இரு சீரடியால் பதினாறுமாக வருவது சாதாரணம்.

நூல் : தமிழ் இலக்கணத் தெளிவு (1897); பக். 273.
நூலாசிரியர் : டேவிட் ஜோஸெப், பி,ஏ.,
முதுநிலை விரிவுரையாளர், ராஜாமுந்திரி கல்லூரி.



அனுடம் – பனை
கேட்டை – துளங்கொளி
ஆயிலியம் – கட்செவி
மிருகசீரிடம் – மான்றலை

மேற்படி நூல் : பக்கம் - 334.
குறிப்பு : இச்சொல்லாக்கங்கள் அடிக்குறிப்பில் உள்ளவை).



## Hero - பெருமான்
## Heroine - பெருமாட்டியார்

இந்துக்கள் அதிர்ஷ்டவசமென்றும், திசாபலம் ராசி நட்சத்திரங்களின் பலமென்றும், ஊழ்வினைப் பலமென்றும் பலவகையில் இந்நடவடிக்கைகட்கு நியாயம் சொல்வதால், கவி எடுத்துக்கொண்ட பெருமான், பெருமாட்டியார் (Hero, Heroine) பெருமை இவ்வித இவ்வித சம்பவங்களால் அலங்கரிக்கப்பட்டு விசித்திரமாவது பற்றி, இதை ஒரு அணியென வகுத்தல் தமிழாசிரியர் பெற்றியாம்.

மேற்படி நூல் : பக்கம் : 414.



## சூரிய நாராயண சாஸ்திரியார் -பரிதிமாற்கலைஞன்

இதுகாறும் புலவர் குழாம் பயின்றுவரும் இடைநிலை யிலக்கியங்களொடு மறுதலைப்பட்ட இலக்கணங்களை யுடையதென இந்நூல் சிற்சிலவிடங்களிற் புலப்படினும் நூற்கருத்துணரு முன்னர் இதனையன்னதென்கறி சுழற்க. நூலினை முற்றுமுணர்ந்த பின்னரும் இந்நூல் புரையுடைத்து இந்நூல் தக்கின்று என வாளாது கூறலிற் பெரும் பயனின்றாம். இவ் விக் காரணங்களான் இஃது அப்பெற்றித்தெனச் சிறியேனைத் தெருட்டா வழி.

இனி யிந்நூலினை வெளிப்படுத்தும் வழி எனாதுண்மைப் பெயரை மறைத்துப் பரிதிமாற்கலைஞன் எனப் புனைவுப் பெயர் நிறுத்தி வெளிப்படுத்துகின்றேன்.

நூல் : தனிப்பாசுரத் தொகை பக்கம் : 8. (6-12-1899)
நூலாசிரியர் : பரிதிமாற் கலைஞன் (வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், பி.ஏ.,)



## Aquvarium - நீர்நிலைக் கண்ணாடிக் கூடு

நீர்நிலைக் கண்ணாடிக் கூடு (Aquarium) – நீரில் வாழும் சிறு பூண்டுகளும் செந்துக்களும் வாழும்படி கண்ணாடியினால் செய்யப்பட்டு நீர் பெய்யப்பட்டுள்ள கூடு.

நூல் : (வித்தியா தீபிகை என்னும்) கல்வி விளக்கம் (1899) பக்கம் - 73.
மொழி பெயர்ப்பாளர்கள் : எஸ்.வி. கள்ளப்பிரான் பிள்ளை. சி, அப்பாவு பிள்ளை. வி.பி. சுப்பிரமணிய முதலியார்.



## Light House - விளக்குக் கூடு

விளக்குக் கூடு கப்பலோட்டிகளுக்குக் கண்ணொளி போன்றது. இது அவர்கள் கப்பலை இரவுக் காலத்தில் பரந்த கடலில் செலுத்தி வரும்போது வழியில் இருளில் மறைந்து கிடக்கும் பாறையில் தாக்கியாகிலும், மணற்றிடரில் செருகியாகிலும் அழிந்து போகாதபடி காக்கின்றது. அதாவது விளக்குக்கூடுள்ள விடத்தைச் சுற்றிலும் மேற்கண்ட அசந்தற்பங்கள் இருக்கின்றனவென்று எச்சரிக்கை செய்கின்றது போலாம். பண்டைக் காலத்தில் இக்கூடுகள் அபுரூபமாயிருந்தன. முதலில் 2200 – வருடங்களுக்கு முன்பு பாரோஸ் (Pharos) என்பவர்களால் அலெக்ஸான்டிரியாவில் கட்டப்பட்டிருந்தன வென்று சரித்திரஞ் சொல்லுகின்றது.

இதழ் : ஜீவரத்நம் (1902) வகை - 1, மணி - 1, பக்கம் - 15.
இதழாசிரியர் : T.R. சந்திர ஐயர், சென்னை.



## இரசாயன நூல் - பொருட்டிரிவு நூல்

யாம் மதநூலைக் குறித்துச் சொல்லிய நியாயமே யிவற்றிற்கெல்லாம் பொருந்தும். நூலென்னும் பெயர்க்குச் சில வுளவே யன்றி முறை வழுவாது எளிதிற்றெளிவாக விளங்கும்படி யெழுதிய நூல்கள் அரிதினுமரிதா யிருக்கின்றனவே. தற்காலத்தாசிரியர் ஒருவர், இரசாயன நூல் என்பதனைப் பொருட்டிரிவு நூலெனப் புதுப்பெயரிட்டழைத்தனர். (ஞானபோதினி – Sept. 1902)

இதழ் : யதார்த்த பாஸ்கரன் (1902) சம்புடம் - 1. இலக்கம் - 5. பக். 136.
இதழாசிரியர் : வி. முத்துக்குமாரசாமி முதலியார் B.A. சென்னை.



## கர்வம் - தற்பொழிவு

தற்பொழிவும் டம்பமும் – பூமியிலுள்ள பல ஜாதிகளில் இந்துக்களே அதிக அகந்தைக்காரர். ஆனால் சீனர் இவர்களைவிட ஜாஸ்தி அகந்தைக்காரர் என்று தெரிய வருகிறது. ஐரோப்பியரை வெளியூர் மிலேச்சர், அன்னிய பிசாசுகள் என்று அவர்கள் சொல்லுவார்கள். ஆனால் அவர்களைக் கைகொடுத்தாட்டி அவர்களோடு குந்திச் சாப்பிடுவதால் தாங்கள் தீட்டுபட்டுப் போகிறோம் என்பதைச் சீனர் உணர்கிறதில்லையாம். இவ்வித கர்வம் சீன படிப்பாளிகளிடத்தில் அதிகமாய் உண்டு. தாங்கள் கற்றுணர்ந்த ஒன்பது கலைஞானங்கள் நீங்கலாக வேறு கலைகள் இல்லவே யில்லையென்பது அவர்கள் சாதனை. இந்துப்

பண்டிதரைப்போல ஒரு வார்த்தைக்காக ஐம்பது வீண் நியாயங்கள் கொண்டு வந்து அவர்கள் வழக்காடுவார்கள்.

நூல் : சீனம். சீனருடைய சித்திரப்படச் சரிதைகள் (1902) பக். 57.

குறிப்பு : நூலின் முதல் பக்கம் கிடைக்காததால் ஆசிரியர் பெயர் குறிக்கவில்லை).



## விரதம் - காப்பது

இப்போது செய்யும் விரதானுட்டானங்களெல்லாம் ஒவ்வொரு கடவுளுக்குரிய, திதி, வாரம், நக்ஷத்திரங்களில், உபவாசம், பால், பழம், பலகாரம், அவிசு, ஏகவார போசனஞ் செய்தலே அனுஷ்டானமாக இருக்கிறது. இப்படிச் செய்வதில் அந்தந்தக் கடவுளுக்குரிய வந்தனம், வழிபாடு, ஜபம், தியானம், அக்கடவுளுக்குரிய புராண சிரவணம் ஒன்றும் செய்கிறதில்லை. ஆகார பேதங்களும் நீராகாரமும் பல காரணங்களால் ஏற்படும். அவைகள் எல்லாம் விரதங்களாகா.

விரதம் என்னும் பதத்திற்குக் காப்பது விரதமென்பது பொருள். அதாவது இன்ன காரியத்தை யின்ன விதமாகவே செய்து முடித்த பிறகு போசனம், தைலம், தீட்சை, இவைகளைச் செய்து கொள்ளுகிறதென்று நியமித்து, நியமித்தபடியே செய்து முடிப்பதே விரதமென்பார்கள்.

நூல் : சைவ சித்தாந்தப் பிரசங்கக் கோவை (1902) விரதமான்யிம், பக்கம்-7

சொற்பொழிவாளர் : சோ. வீரப்ப செட்டியார் (நாகை வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபைச் சொற்பொழிவு)



## Junction - சேர்க்கை

சென்னப்பட்டணத்திலிருந்து தென் மேற்கே தூத்துக்குடிக்குப் போகிற தென் இந்தியா ரயில்வேத் தொடரில், விழுப்புரம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், மாயூரம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும் உள்ள ரயில்வே.

நூல் : சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம் (1903) பக். 1

நூலாசிரியர் : சாலிய மங்கலம் மு. சாம்பசிவ நாயனார்.



## பக்ஷி

பக்ஷி – பக்ஷமுடையது (பக்ஷம் – இறகு)

நூல் : குசேலோபாக்கியாநம் மூலமும் உரையும் (1904)
நூலாசிரியர் : வித்வான் - காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு



## ஆறு பகை

காமம் – ஒரு பொருளின் மீது செல்லும் விருப்பம், குரோதம் – அப்பொருள் கிடையாத போதுண்டாகும் கோபம், உலோபம் – தானும் அநுபவிக்காமல் பிறர் கொடாமலிருக்கும் குணம், மோகம் – மாதர் மீதுண்டாகுமிச்சை, மதம் – செருக்கு, மாற்சரியம் – பொறாமை, இவ்வாறும் பிறவிக்கேதுவாய், ஆன்மாக்களுக்குத் துன்பம் விளைத்தலால் இவற்றை ஆறு பகை என்றார். இவற்றை வடநூலார் அரிஷட் வர்க்கம்' என்பர்.

மேற்படி நூல் : பக்கம் : 105, 106



## மீகான்

மீகான் – கப்பலோட்டுகிறவன். இச்சொல், மேலிடத்துள்ளானெனப் பொருள்படும். மீயான் என்பதன் மரூஉ வென்றாயினும், மீகாமன் என்பதன் விகாரமென்றாயினும், மீயான் என்ற பெயர் பகுதி விகுதிகளினிடையே குச்சாரியை பெற்றதென்றாயினும் கொள்க.

மேற்படி நூல் :



## Parliment - பாராளுமன்று

ஓராத காட்சி பல உண்ட கண்கள் தேக்கு; மந்தப்
பாராளு மன்று தனைப்
பார்த்த கண்ணோ தேக்காது.

நூல் : விவேக ரஸ வீரன் கதை (1904)
நூலாசிரியர் : பாலசுப்பிரமணிய பிள்ளை



## Train - ஆவிவண்டி

தெம்ஸ் நதிக்கீழ் ஆவி வண்டி
சேர்கின்ற தாங்கிலரின்
வம்சப்பேர் எக்காலும்
மாறா அடையாளம்.

ஆவிக்கப்பல் மேலோட
ஆவி வண்டி கீழோட
மேவச் செய் ஆங்கிலர்வி
சித்திரத்தை யாதுரைப்பேன்?

நூல் : விவேக ரஸ வீரன் கதை (1904)



## Great world's Fair - உலகத்துப் பெருஞ்சந்தை

ஹிந்துமதத்தையும் ஹிந்துக்களின் தத்துவ ஞானத்தையும் பிற தேசங்களிலுள்ளவர்ளுக்குக் கற்பிக்க வேண்டுமென்ற அவா இவருக்கு மிக விருந்தது. இவ்வெண்ண மேற்கொண்டு 1893 ஆம் வருஷத்தில் இந்தியாவினின்றுங் கிளம்பி அமெரிக்கா கண்டத்தை நோக்கிச் சென்றார். சிக்காகோ என்னும் நகரத்தையடைந்து ஆங்கு நடந்த 'உலகத்துப் பெருஞ்சந்தை' (Great World's Fair)க்குச் சென்றனர். உலகத்திலுள்ள மதங்கட்கான சபையில் இவரை ஹிந்து மதத்திற்கும் வேதாந்த நிலைமைக்கும் பிரதிநிதியாக அங்குள்ளார் ஒப்புக் கொண்டனர். 1894ஆவது வருஷம் முழுவதும் ஆங்காங்குப் பிரசங்கங்கள் செய்தனர்.

நூல் : மகாஜன மண்டலி (1904) பக். 36,37)
நூலாசிரியர் : டி.ஏ. ஸ்வாமிநாத ஐயர் (ஆர்யா பத்திரிகை ஆசிரியர்)



## TRANSLATER - மொழிபெயர்ப்பாளர்

முதன்முதலில் அவர் செங்கற்பட்டுக் கலெக்டர் ஆபீசில் டிரான்ஸ்லேட்ராய் (மொழிபெயர்ப்பவராய்) அமர்ந்தார். படிப்படியாய் உத்தியோகத்திலுயர்ந்து. சீக்கிர காலத்திலேயே நெல்லூர் ஜில்லாவிற் பிரதான சிரேஸ்தேதாராயினர்.

மேற்படி நூல் : பக். 155



## Mortgage - பெந்தகம், ஒற்றி

Mortgage பெந்தனம், ஒற்றியென்பவைள் முறையே பெந்தகம், ஒத்தியென வழக்கச் சொற்களாகிவிட்டன. இவைகளைப் பற்றி இங்கிலீஷ் கவர்ண்மெண்டார் 1798—ஞ் லத்திய 1—வது ரெகுலேஷன், என்றும், 1806—ஞ் லத்திய 17—வது ரெகுலேஷன் என்றும், இருவகைச் சட்டங்கள் ஆதியில் ஏற்படுத்தியிருந்தார்கள்.

இதழ் : விவகார போதினி (1904) புத்தகம் - 1 இலக்கம் - 1, பக். 1,2

ஆசிரியர் : எ. நடேசபிள்ளை (திருவாரூர் டிஸ்ட்ரிக்ட் முன்சீப் கோர்ட்டு பிளீடர்)



| | | |
|---|---|---|
| ஆசாரம் | – | ஒழுக்கம் |
| வியவகாரம் | – | வழக்கு |
| பிராயச்சித்தம் | – | கழுவாய் |
| பிரத்தியட்சம் | – | கண்கூடு |
| வானப்பிரஸ்தநிலை | – | புறத்தாறு |
| சுதந்தரம் | – | உரிமை |
| அவயவம் | – | உறுப்பு |
| அமிர்தம் | – | சாவா மருந்து |
| நீதி | – | நடுவு |
| முத்தி பெறுதல் | – | வீடுபேறு |
| தரித்திரன் | – | வறியன் |
| நிந்தை | – | வசை |
| சுரோத்திரம் | – | செவி |
| சட்சு | – | கண் |
| சிங்குவை | – | நாக்கு |
| புருஷார்த்தங்களைக் கூறும் சாஸ்திரங்கள் | – | உறுதி நூல்கள் |
| அவமானம் | – | இளிவரவு |
| விரோதம் | – | மாறுபாடு |
| பராக்கிரமம் | – | ஆண்மை |

| | | |
|---|---|---|
| முனிவர் | – | அறவோர் |
| ஆதாரம் | – | பற்றுக்கோடு |
| கர்வம் | – | பெருமிதம் |
| தாட்சண்ணியம் | – | கண்ணோட்டம் |
| அருத்த சாஸ்திரம் | – | பொருணூல் |
| தருமசாஸ்திரம் | – | அறநூல் |
| பதா[illegible]க | – | பெருங்கொடி |
| பகுதி | – | முதனிலை |
| பூரண விசுவாசம் | – | தலையளி |

நூல் : திருக்குறள் மூலமும் பரிமேலழக ருரையும் (1904). தெளிபொருள் விளக்கமும் கருத்துரையும் குறிப்புரையும் : கோ. வடிவேலு செட்டியார் (சென்னை இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்).

பேராசிரியர் : டாக்டர் தெ.பொ.மீ. அவர்களின் ஆசிரியர்)



## யோகநித்ரை - அறிதுயில்

அறிதுயில் எல்லாவற்றையு மறியா நின்றே துயிலல். இதில் அறிதலும் துயிறலும் ஒருங்கு நிகழ்தலான் இது துணைவினையெனப்படும். இதனை யோக நித்ரையென்பர் வடநூலார்,

நூல் : குசேலோபாக்கியாநம் மூலமும் உரையும் (1904)
பக்கம் : 55



## ஆசி - வாழ்த்து

ஆசி – ஆஸிஸ் என்னும் வடசொல்லின் விகாரம். வாழ்த்து என்பது பொருள்.

மேற்படி நூல் : பக்கம் - 285
உரையாசிரியர் : வித்வான் - காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு



## க்ஷெளரம் - மழித்தல்

முகத்திடை நீண்டவுரோமம், நீண்ட முகரோமம் (தாடி மீசை முதலாயின) நீண்ட என்றதனால், வபநமில்லாமை விளங்குகின்றது. வபநம் – மழித்தல் (க்ஷெளரம்)

நூல் : குசேலோபாத்தியாநம் மூலமும் உரையும்



## ராஜநீதி - கோவியல்

ஓவியத் தொழில்வல் லாருக்
கொண்பொருள் வெறுப்ப வீசி
நாவியற் கருமென் கூந்தல்
நங்கைமா ரெழுதி வைத்த
பூவியற் படமாங் காங்குப்
பொலிவது காணுந் தோறும்
கோவியற் கண்ண னென்றுட்
கொண்டுபின் தெளிவ னம்மா.

வியல் – பெருமை, கோவியல் – அரசியல் (ராஜ நீதி)

நூல் : குசேலோபாக்கியாநம் (1904) பக்கம் : 388
நூலாசிரியர் : பெங்களூர் வல்லூர் தேவராஜ பிள்ளை



| | | |
|---|---|---|
| லெளகிகம் | – | உலகிதம் |
| சம்பிரத வாழ்க்கை | – | மாய வாழ்க்கை |
| சேமத்திரவியம் | – | வைப்பு |
| பாவ வார்த்தை | – | மறவுரை |

நூல் : அறநெறிச் சாரம் (1905)
நூலாசிரியர் : முனைப்பாடியார்
பதிப்பாசிரியர் : தி. செல்வக்கேசவ முதலியார், எம்,ஏ., (சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர்)



## பாரகாவியம் - பெருநூல்

நூல் : திருவிளையாடற் புராண மூலமும் அரும்பதக் குறிப்புரையும் (1905)

குறிப்புரை : முத்தமிழ் ரத்னாகரம் ம.தி. பானுகவி வல்லி - ப. தெய்வநாயக முதலியார் சென்னை சிந்தாதிரிப் பேட்டை ஆங்கிலோ வர்ணகுலரி ஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்



| | | |
|---|---|---|
| புலித்தோலாசனம் | – | வேங்கையதள் |
| சோமவாரம் | – | மதிநாள் |
| சரஸ்வதி | – | வெள்ளைச் செழுமலர்ந்திரு |
| வியாக்கிரபாதன் | – | புலிக்காலோன் |
| ஆவிநாயகன் | – | உயிர்த்தலைவன் |
| மேஷம் | – | தகர் (சித்திரை) |
| மகரம் | – | சுறவு (தை) |
| கடகம் | – | அலவன் (ஆடி) |
| தேவதச்சன் | – | கம்மியப் புலவன் |
| சூரிய வம்சம் | – | பரிதிமரபு |
| வெளிமார்க்கம் | – | புறத்துறை |
| சூரிய காந்தக்கல் | – | எரியிறைக்குங்கல் |
| சந்திர காந்தக்கல் | – | நீரிறைக்குங்கல் |
| இந்திரிய வழி | – | புலநெறி |
| சதுக்கம் | – | நாற்சந்தி |
| உத்தரீயம் | – | மேற்போர்வை |
| கஸ்தூரி | – | காசறை |
| அபிப்பிராயம் | – | உட்கோள் |

நூல் : பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் (1905). அரும்பதக் குறிப்புரை முத்தமிழ் ரத்தினாகரம் ம.தி. பானுகவி வல்லி - ப. தெய்வநாயக முதலியார்



| | | |
|---|---|---|
| அஸ்தமயம் | – | ஞாயிறுபடுதல் |
| அற்பம் | – | சிற்றளவை |
| அநுராகம் | – | தொடர் விருப்பு |
| கவி | – | புலவன் |
| கல்யாணம் | – | மணவினை |
| விபரீதம் | – | மாறுபாடு |

நூல் : சேந்தன் செந்தமிழ் (1906)
நூலாசிரியர் : பாம்பன் குமர குருதாச சுவாமிகள்



| | | |
|---|---|---|
| மத்யஸ்தன் | – | நடுவோன் |
| லாபம் | – | பேறு |
| துர்கதி | – | பொல்லா நெறி |
| கர்மபந்தம் | – | வினைக்கட்டு |
| லாப நஷ்டம் | – | பேறு இழவு |

நூல் : பகவத் கீதை வெண்பா (1906)
நூலாசிரியர் : வாதிகேஸரி ஸ்ரீ அழகிய மணவாள ஜீயர்
பதிப்பாளர் : ஜே.கே. பாலசுப்பிரமணியம்



| | | |
|---|---|---|
| புருஷார்த்தம் | – | தக்க நலம் |
| பரிசுத்த ஸ்தானம் | – | தூய நிலம் |
| துர்கதி | – | பொல்லா நெறி |

நூல் : பகவத்கீதை வெண்பா (1906)
நூலாசிரியர் : வாதிகேஸரி ஸ்ரீ அழகிய மணவள ஜீயர்



| | | |
|---|---|---|
| Cultivators | - | பயிரிடுகிறவர்கள் |
| Sea Custom | - | கடல்வரி |

இதழ் : விவகாரி (1906); புத்தகம் : 1 இலக்கம் : 1
இதழாசிரியர் : ஏ. நடேசபிள்ளை, வக்கீல், மாயவரம்



## GLAND - உமிழ்நீர்க் கோளம்

கீழ்த்தாடை என்பு, மேல்தாடை என்பு இவைகளில் உமிழ்நீர்க் கோளங்கள் ஒவ்வொன்றிலும் மும்மூன்றாக அணைந்திருக்கின்றன.

நூல் : சரீரவியவக்ஷேத சாஸ்திரம் என்னும் அங்க விபாக சுகரண வாதம் (1906) பாகம் : 15
நூலாசிரியர் : டி.ஆர். மகாதேவ பண்டிதர்



| | | |
|---|---|---|
| தத்தம் | – | கொடுக்கப்பட்ட பொருள் |
| சூதிகாகாரம் | – | பிள்ளைப் பெறும் வீடு |
| திகுதிகு | – | சுடுசுடு |

நூல் : ஸ்ரீ பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை (1907)
நூலாசிரியர் : அனந்த பாரதி ஸ்வாமிகள்



## மீமாம்சை - ஆராய்ச்சி

பூர்வ மீமாம்சை தருமமீமாம்சை யெனவும், உத்தரமீமாம்சை பிரம மீமாம்சை யெனவும் சொல்லப்படும். எதில் தருமத்தின் மீமாம்சை இருக்கிறதோ அது தரும மீமாம்சையாம். எதில் பிரமத்தின் மீமாம்சை யிருக்கிறதோ அது பிரமமீமாம்சையாம். மீமாம்சை – ஆராய்ச்சி

நூல் : வேதாந்த சூளாமணி மூலமும் உரையும் (1908) சிறப்புப் பாயிரம், பக்கம் - 17
விரிவுரை : பிறைசை அருணாசல சுவாமிகள் (திருத்துருத்தி, இந்திரபீடம் - கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்)

குறிப்புரை: கோ. வடிவேலு செட்டியார் (சென்னை ஹிந்து தியலாஜிகல் காஹஸ் கூல்தமிழ்ப் பண்டிதர்)



| | | |
|---|---|---|
| அசாதாரண தருமம் | – | சிறப்பியல்பு |
| ஆசீர்வாத ரூபம் | – | வாழ்த்து |
| திருக்கு | – | அறிவு |
| நாநா | – | பல |
| பரஸ்பரம் | – | ஒன்றற் கொன்று |
| பத்தியம் | – | பாடல் |
| பிரதியோகி | – | எதிர்மறை |
| பிராக பாவம் | – | முன்னின்மை |
| விசேஷம் | – | அடைகொளி |
| விட்சேபம் | – | புடைபெயர்ச்சி |

நூல் : வேதாந்த சூளாமணி மூலமும் உரையும் (1908)
குறிப்புரை : கோ. வடிவேலு செட்டியார்



## தேசிய கீதம் - நாட்டுப் பாட்டு (1908)

பரலி சு. நெல்லையப்பர்.

| | | |
|---|---|---|
| அஞ்சலி | – | கும்பிடல் |
| அதீதம் | – | எட்டாதது |
| அபிநயம் | – | கைமெய் காட்டல் |
| சம்மதம் | – | உடன்பாடு |
| சுதந்தரம் | – | உரிமை |
| கனிட்டர் | – | இளையவர் |
| நிருத்தம் | – | கூத்து |
| இரத்தம் | – | புண்ணீர் |
| விவாகம் | – | மணம் |

நூல் : மார்க்கண்டேய புராணம் வசன காவியமும் அரும்பத விளக்கமும் (1909).

நுலாசிரியர் : உபயகலாநிதிப் பெரும்புலவர் தொழூவூர் வேலாயுத முதலியார்.



| | | |
|---|---|---|
| சுக்கிலம் | – | வெண்மை |
| கிருஷ்ணம் | – | கருமை |
| பீதம் | – | பொன்மை |
| இரக்தம் | – | செம்மை |
| அரிதம் | – | பசுமை |
| கபிலம் | – | புகைமை |
| இரத்தினம் | – | மணி |

நூல் : தருக்க கௌமுதியும் நியாய பதார்த்தம் பதினாறும் (1909) பக்கம் : 8.

நூலாசிரியர் : தஞ்சை மாநகரம் வெ. குப்புசாமி ராஜு.



| | | |
|---|---|---|
| அநுபந்தம் | – | பின்வருவது |
| அபிதானம் | – | பெயர் |
| அபிநயம் | – | கைமெய்காட்டல் |

| | | |
|---|---|---|
| அவிழ்தம் | – | மருந்து |
| இலக்குமி | – | தாக்கணங்கு |
| இலக்கு | – | குறிப்பு |
| சுபாவம் | – | இயற்கை |
| கோமளம் | – | இளமை |
| சுதந்தரம் | – | உரிமை |
| திலகர் | – | மேம்பட்டவர் |
| வருணாச்சிரமம் | – | சாதியொழுக்கம் |

நூல் : மார்க்கண்டேய புராணம் வசன காவியமும் அரும்பத விளக்கமும் (1909) (இரண்டாம் பதிப்பு)

நூலாசிரியர் : உபய கலாநிதிப் பெரும்புலவர் - தொழுவூர் வேலாயுத முதலியார்.



விசித்திரம் – பேரழகு

நூல் : அமிச சந்தேசம் (சித்திரபானு, பங்குனி)

நூலாசிரியர் : கவித்தலம் துரைசாமி மூப்பனார்.



ப்ரசண்ட் மாருதம்: பெருங்காற்று (1909)

இதழ் : செந்தமிழ், சௌமிய ஸ்ரீ மார்கழி, தொகுதி : 8 பகுதி : 2. பக்கம் : 71

கட்டுரையாளர் : வீராசாமி ஐயங்கார்



| | | |
|---|---|---|
| சந்திபாதம் | – | முதலிற்பிடித்துப் பஞ்சாப் போடுதல் |
| அவதூதம் | – | புறங்கையாற் கீழே தள்ளுதல் |
| பரக்கேபணம் | – | இழுத்துத் தளளுதல் |
| முட்டி | – | கைகுவித்து இடித்தல் |
| கீலநிபாதம் | – | முழங்கை, கணைக்கைகளினால் இடித்தல் |
| வச்சிரநிபாதம் | – | கைவிளிம்புகளால் இடித்தல் |
| பாதோத்தூதம் | – | நடுவிரல் ஆழிவிரல் என்பவற்றினடுவே பெருவிரல் வைத்துக் குத்தல், காலாற் றூக்கியெறிதல் |
| பிரமிருட்டம் | – | உடம்பெல்லாம் இறுகப் பிடித்துத் தள்ளியுழக்குதல் |

மற்போராவது : ஆயுதமின்றித் தத்தம் உடம்பினாற் செய்யும் போர், அது சந்நிபாதம், அவதூதம், பிரக்கேபணம், முட்டி, கீலபாதம், வச்சிரநிபாதம், பாதோத்தூதம், பிரமிருட்டம் என எண் வகைப்படும். இவை முறையே முதலிற் பிடித்துப் பஞ்சாப் போடுதல்.



## DEG - நீண்ட சதை

மன்னன் வருகிறான் என்பது கேட்டுணர்ந்த ராஜகுமாரத்தி தனக்கு நேரக்கூடிய அகௌரவம் ஒன்றையே பெரிதெனக்கருதித் தன் ஆசை மணாளனை, ஆங்கிருந்த (DEG) என்ற நீண்ட சமையல் பாத்ரத்தில் புகுந்து மறைத்தாள்.

| | | |
|---|---|---|
| இதழ் | : | செந்தமிழ் (1910) தொகுதி - 8, பகுதி - 10<br>சாதாரண ௵ ஆவணி ௴ |
| கட்டுரை | : | ஸெபன்னிஸா |
| கட்டுரையாசிரியர் | : | வீ. சுப்பிரமணிய ஐயர் (தமிழ்ப் பண்டிதர்) |



## Cheeks - கதுப்புகள்

குசாக்ர புத்தியுள்ள மேனாட்டு வித்வானொருவர் இம் முத்தமிடும் வாடிக்கை பூர்வத்தில், மனிதர்கள் மாம்ஸ பக்ஷணிகளாய் (Cannibals) இருந்த காலத்தில், புருஷன்தான் ஸ்த்ரீயொருத்தியினிடம் கொண்ட விசேஷப் பிரியத்தை அவளுக்குச் செவ்வனே தெரிவிப்பதற்காக தன்னுடைய பற்களினால் அவள் உதடுகளிலும் கதுப்புகளிலும் (Cheeks) கடித்து, அவளை ரஸமுள்ள மாம்பழம் போல விழுங்க வேண்டுமென்ற தன்னுடைய அவாவைக் காட்டும் அவ்வாடிக்கையிலிருந்து மாறி நாகரீகத்தினால் உண்டான அனுஷ்டானமே இம் முத்தமிடுதல் எனக் கூறுகின்றார்.

| | | |
|---|---|---|
| இதழ் | : | செந்தமிழ் (1910) தொகுதி - 8, பகுதி -10, பக்கம் 508 |
| கட்டுரை | : | முத்தமிடலின் வரலாறு |
| கட்டுரையாசிரியர் | : | வீ. சுப்பிரமணிய ஐயர் (தமிழ்ப் பண்டிதர்) |



| | | |
|---|---|---|
| அங்குஷ்டம் | – | பெருவிரல் |
| தர்ஜனி | – | சுண்டுவிரல் |
| மத்தியமம் | – | நடுவிரல் |
| அனாமிகை | – | ஆழிவிரல் |
| கனிஷ்டம் | – | கடை விரல் |

நூல் : கொக்கோலம் (1910)
அத்தியாயம் : 5, சுரதலட்சணம், பக்கம் - 163
உரையாசிரியர் : கொற்றமங்கலம் இராமசாமிப்பிள்ளை



## பண்கள்

| | | |
|---|---|---|
| சட்ஜம் | – | குரல் |
| ரிஷபம் | – | துத்தம் |
| காந்தாரம் | – | கைக்கிளை |
| மத்திமம் | – | உழை |
| பஞ்சம் | – | இளி |
| தைவதம் | – | விளரி |
| நிஷாதம் | – | தாரம் |

நூல் : கொக்கோகம் (1910) பக்கம் : 106
நூலாசிரியர் : அதிவீரராம பாணடியன்
உரையாசிரியர் : கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளை



## தழுவுதல்

| | | |
|---|---|---|
| லதாவேஷ்டிதாலிங்கனம் | – | கொடிபோலக் சுற்றித் தழுவுதல் |
| விருக்ஷாதிருடாலிங்கனம் | – | மரத்தைப் போலேறித் தழுவுதல் |
| திலதண்டுலாலிங்கனம் | – | எள்ளும் அரிசியும் போலக்கலந்து தழுவுதல் |
| சீர நீராலிங்கனம் | – | பாலும் நீரும் போல ஒன்றுபடத் தழுவுதல் |
| ஊருப்பிரகூடாலிங்கனம் | – | தொடையால் நெருக்கித் தழுவுதல் |
| சகனோபசிலேஷாலிங்கனம் | – | குறிகள் சேரத் தழுவுதல் |
| ஸ்தனாலிங்கனம் | – | கொங்கையழுந்தத் தழுவுதல் |
| லாலாடிகாலிங்கணம் | – | நெற்றிபொருந்தத் தழுவுதல் |

நூல் : கொக்கோகம் (1910) பக்கம் : 141
நூலாசிரியர் : அதிவீரராம பாண்டியன்
உரையாசிரியர் : கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளை



## உடலசைவுகள் : 5

| | | |
|---|---|---|
| உத்தானிதம் | – | மல்லாத்தல் |
| திரியக்கு | – | குறுக்கு அல்லது ஒருகணித்தல் |
| ஆசிதகம் | – | உட்காத்தல் |
| ஸ்திதம் | – | நிற்றல் |
| ஆன்மிதம் | – | குனிதல் |

நூல் : கொக்தோகம் (1910) பக்கம் : 171



## மஹாவித்வான் - பெரும்புலவர்

மார்க்கண்டேய புராணம்
வசனகாவியமும் அரும்பத விளக்கமும்

இஃது

சென்னை பிரஸிடென்ஸி காலேஜில்

தமிழ்ப்புலமை நடாத்திவரும்

சமரசவேத சன்மார்க்க சங்க வித்வான்களிலொருவராகிய

உபயகலாநிதிப் பெரும்புலவர்

தொழுவூர் வேலாயுத முதலியார்

மொழிபெயர்த்தது

நூல் : மார்க்கண்டேய புராணம்
வசனகாவியமும் அரும்பத விளக்கமும் (1909)

நூலாசிரியர் : தொழுவூர் வேலாயுத முதலியர் (1909)

பரிசோதித்தவர் : தொழுவூர் வே. திருநாகேஸ்வர முதலியார்
(தொழுவூர் வேலாயுத முதலியாரின் மூத்த புதல்வர்)



| | | |
|---|---|---|
| சாமானியம் | – | பொதுமை |
| விசேடம் | – | சிறப்பு |
| இரசம் | – | சுவை |
| பரிமாணம் | – | அளவு |
| பேதம் | – | வேற்றுமை |
| பிரயத்தனம் | – | முயற்சி |

சத்தம் – ஓசை

நூல் : தருக்க கௌமுதி (சௌமிய ஸ்ரீ (1910)

நூலாசிரியர் : தஞ்சை மாநகரம் வெ. குப்புஸ்வாமி ராஜு



## Atoms - உயிரணு

பூமியில் எங்கு பார்த்தாலும் பதார்த்தங்கள் நிறைந்திருக்கின்றன. இப்பதார்த்தங்களை ரசாயன சாஸ்திரிகள் பலவிதமாகச் சோதனை பண்ணிக் கடைசியில் அவைகள் துண்டு பண்ண முடியாமலிருக்கும்படியான நிலைமையை அடைகின்றன என்று ஸ்தாபித்திருக்கிறார்கள்.

அப்பேர்ப்பட்ட நிலைமையை உடையன ஏறக்குறைய எண்பது விதமானவை. அவைகளை உயிரணு (Atoms) என்று சொல்வது வழக்கம்.

நூல் : வியாஸப்ரகாசிகை (1910), பக். 97.

பதிப்பாளர் : பி.எஸ். அப்புசாமி ஐயர்

(உரிமையாளர் : சக்ரவர்த்தினி பத்திரிகை)



## ப்ரசண்ட மாருதம் - பெருங்காற்று (1909)

பின்பு அவ்வணிகன் புறப்படும்போது சக்திதேவன் தானும் கூட வருவதாகச் சொல்ல அவனும் சம்மதித்து தாங்களிருவர்க்கும் வழிக்கு வேண்டும் உணவு பதார்த்தங்களை நிரம்ப வெத்துக் கொள்ள இருவரும் கப்பலின் மீதேறிக் கடல்மார்க்கமாகப் பிள்ளை பிரயாணமானார்கள்.

பின்னர் அக்கப்பலானது நெடுந்தூரங்கடந்து அந்த உத்தலத் வீபத்தை யடைவதற்குச் சொற்ப தூரத்திற் செல்லுங்கால் மின்னற் கொடியாகிய நாவுடன் கூடி முழங்குகின்ற கரிய மேகமாகிய இராக்கத வடிவம் ஆகாயத்திற் கிளம்பிற்று. அச்சமயத்தில் இலேசான பொருள்களை உயரவெடுத்தெறிகின்றதும், கனத்த பொருள்களைக் கீழே கொண்டமிழ்த்துகின்றதுமாகிய ப்ரசண்டமாருதம் (பெருங்காற்று) விதியின் ஆரம்பம் போல வீசிற்று.

இதழ் : செந்தமிழ் (1910). தொகுதி -8, பகுதி - 2, பக்கம் -71
கட்டுரை : கதாசரித் சாசரம்
மொழிபெயர்ப்பாளர் : வீராசாமி ஐயங்கார்



## அலிட்ரேஷன் - முற்றுமோனை

நளன்சீர் நவிலுநல நல்கும் என்பதில் நகர முற்று மோனையால் வந்திருப்பதைக் கவனிக்க. அங்கில முடையார் இதை அலிட்ரேஷன் என்பர்.

நூல் : நள வெண்பா மூலமும் அகல உரையும் (1910)
நூற் சிறப்புப் பாயிரம், பக்கம் - 4
உரையாசிரியர் : தமிழ்வாணர் - மதுரகவி ம. மாணிக்கவாசகம் பிள்ளை



## சர்வசுதந்தரம் - முற்றூட்டு

இராசநீதிகளையும், ஆசாராதிகளையும், வழக்கங்களையும், தெய்வத்தையும், புண்ணிய பாவ மோக்ஷ நரசாதிகளையும், சிவஞானத்தையும் யாவர்க்கும் உணர்த்துவதும், பூர்வ சரிதங்களை விளக்குவதும் இவ்வியற்புலமையன்றோ? இத்தகைய உயர்வு தாழ்வுகளை யறிந்தே பூர்வ அரசர்களில் எத்தனையோ பேர், இயற்புலவர்கட்கு முற்றூட்டாகப் (சர்வசுதந்தரம்) பல கிராமங்களைத் தானஞ்செய்தும் பற்பல ஆடையாபரண வாகன முதலிய விசேஷ மரியாதைகளைச் செய்தும் பாதுகாத்ததுடன் தமக்கு முக்கிய மந்திரிகளாகவும், உயர்ந்த துணைவர்களாகவும், தம்மினுமிக்க மரியாதையுடன் எப்போதுந்தம்முடன் (இவ்வியற்புலவர்களையே) வைத்து, அவர்கள் சொல்வழி நின்று புவிபுரந்து புகழ்புனைந்து வாழ்ந்தார்களென்பது புறநானூறு முதலிய பழைய நூல்களால் நன்கு புலப்படுவதாகும்.

நூல் : இயலிசைப்புலவர் தாரதம்மியம் (1911) பக்கம் - 3
நூலாசிரியர் : மு. ரா. கந்தசாமிக் கவிராயர்



## Photo - நிழல்படம்

ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் 5—மணியோடு கண்காட்சி சாலை முடிந்ததும் அன்றிரவு 8மணி முதல் 10 மணி வரை செயின்டு மேரி ஹைஸ்கூல், போனரே சாமியார் அவர்கள் நிழல்படம் காட்ட ம—ள—ள—ஸ்ரீ N.S. ஜெம்புனாதய்யர் அவர்கள், ஊர்வன ஜாதி,பட்சி ஜாதி இவைகளைப் பற்றி ஒரு உபந்நியாசம் செய்தார்.

இதழ் : விவேக போதினி (நவம்பர் 1911) எண்,5. பக்கம் - 223
சொல்லாக்கம் : சி. வி. சாமிநாதையர்



## Vote - வாக்கு

மேற்றிசை மதங்கள் தற்காலத்திய 'ஸயன்ஸ்' என்னும் சாஸ்திர வாராய்ச்சியின் எதிர்நிற்கச் சத்தியற்று, படு சூரணமாய் மண்ணோடு மண்ணாய் மாறியும்; குருட்டு நம்பிக்கையையும் மூட விசுவாசத்தையும் மிஷனரி சபைகளில் (Vote) வாக்கின்பேரில் முடிவாகும் சித்தாந்தங்களையுமே பிரமாணமாகக் கொண்டிருக்கும் மேற்றிசை மேற்பூச்சு மதங்களெல்லாம் சாஸ்திர வாராய்ச்சியாகிற பெருஞ் சம்மட்டியால் மொத்துண்டு இருந்தவிடந் தெரியாமல் பஸ்பமாகியும்; சாஸ்திர ஆராய்ச்சி விர்த்தியாக ஆக, அவைகளை யனுசரித்து அத்தேசத்திய மத நூல்களுக்கெல்லாம் பொருள் செய்தும், கடைசியில் அதுவும் சரிப்படாமற் போகவே, அம்மத நூல்களெல்லாம் குப்பை கூளங்கள் நிறைந்த அறைகளுக்கு அலங்கார சாமான்களாக மாற நேரிட்டும், மேற்றிசையில் உண்மையாய் மதவிசாரணை செய்பவர் தங்கள் மதத்தின் உபயோகமற்ற தன்மையைக் கண்டு, அதைத் துறந்து தீர்க்க சந்தேகிகளாகவும் இருந்து வருகிற இச்சமயத்தில் உண்மையாய் உயிருடன் இருக்கும் மதங்கள் அமிருத கலசங்களென்னும்படியான வேதங்களில் ஞானாமிர்தத்தைப் பானம் பண்ணிய இந்துமதமும் பௌத்த மதமுமே என்பது ஓர் அதிசயமல்லவா?

நூல் : விவேகானந்த விஜயம் (1912). பக்கங்கள் : 124, 125
நூலாசிரியர் : மஹேச குமார சர்மா



## Boarding House - விடுதி வீடு

ஆங்கிலம் கற்றற்கு நமது பிள்ளைகள் கொழும்பு, மதுரை, சென்னை, புதுக்கோட்டை முதலிய விடங்களுக்குப் போய் அசௌகரியத்தோடு படிப்பதைப் பார்க்கிலும் நம்மவர் வசிக்கிற பெரிய ஊர்களான தேவி கோட்டை, காரைக்குடி, கானாடு காத்தான் முதலிய விடங்களில் உயர்தர வித்தியாசாலை (High School) களும் அதையொட்டி மாணவர் விடுதிவீடு (Boarding House) களும், ஏற்பட்டுவிட்டால் நிரம்ப சௌகரியமாக விருப்பத்தோடு ஜாஸ்தியான பிள்ளைகள் படிக்கவும் ஏதுவாகும்.

நூல் : வியாசங்களும் உபந்நியாசங்களும் (1913)
இரண்டாம் பதிப்பு; பக்கம் : 31
நூலாசிரியர் : மு. சின்னையா செட்டியார், மகிபாலன்பட்டி



## ஏழிசை ஒலிகள்

| | | |
|---|---|---|
| ச, சட்சம் | – | மயிலொலி |
| ரி, ரிடபம் | – | எருத்தொலி |
| க, காந்தாரம் | – | யாட்டொலி |
| ம, மத்திமம் | – | கிரவுஞ்சவொலி |
| ப, பஞ்சமம் | – | குயிலொலி |
| த, தைவதம் | – | குதிரையொலி |
| நி, நிடாதம் | – | யானையொலி |

நூல் : மொழிநூல் (1913) பாயிரவியல், பக்கம் -15

நூலாசிரியர் : மாகறல் கார்த்திகேய முதலியார் (சைதாப்பேட்டை, கண்டி வெஸ்லேனியன் மிஷன் தியலாஜிகல் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்)



## அபிமானம் - பற்றுள்ளம்

ஆரியம் வேதமுதலியன நிறைந்துள்ள தெய்வமொழி என்று அடிப்படுகின்றமையின், தெலுங்கு முதலியன அதினின்று பிறந்தன எனின் அவ்வம்மொழியார் கனிவு காட்டுதலும், தமிழினின்று அவை பிறந்தனவெனின் முனிவு காட்டுதலும், பற்றுள்ளமேயன்றி முறைமையாகாது. அப்பற்றுள்ளத்தினின்றும் நீங்கி யுண்மை யெதுவென ஆராய்ந்து தெளிதல் வேண்டும். பற்றுள்ளம் – அபிமானம்.

நூல் : மொழிநூல் (1913) பாயிரவியல், பக்கம்-34

நூலாசிரியர் : மாகறல், கார்த்திகேய முதலியார்



## கிரகபதி - கோளரசு

செந்தமிழ் நிலம் நடுவிலும், அதனைச் சூழப் பன்னிரண்டு கொடுந்தமிழ் நாடும், அக்கொடுந்தமிழ் நாட்டைச் சூழச் சிங்களம் சோனக முதலிய நாடுகளும் வைத்துக் கூறினதை யுய்த்துணரின் செந்தமிழ்க்குப் பன்னிரண்டு கொடுந்தமிழ் மொழியும் அணுக்கவியையுடையன என்பதும், சிங்களம் சோனக முதலியன சேய்மை யியையுடையன என்பதும் பெறப்பட்டமை காண்க. ஏனைய கோள்களுக்கும் அக்கோள்களி னடுவிலுள்ள சூரியனுக்கும் இயைபுண்மை போல, ஏனையமொழிகளுக்கும் அம்மொழிகளி னடுவிலுள்ள செந்தமிழ்க்கும் இயைபுண்மை பெற்றாம். சூரியன் கோளரசென்பது போலத் தமிழ் மொழியரசென்பது பெறப்படுகின்றது. கோளரசு – கிரகபதி.

நூல் : மொழிநூல் (1913) பாயிரவியல், பக்கம் - 38
நூலாசிரியர் : மாகறல் கார்த்திகேய முதலியார்



## Museum - பல பொருள் காட்சி சாலை

மியூஸியம் : பல பொருள் காட்சி சாலை, இது எழும்பூரிலிருக்கும் ஓர் நேர்த்தியான கட்டடம். நானாவிதமான நூதன வஸ்துக்களையும் விநோதப் பொருள்களையும் கொண்டு வந்து சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு நாடக சாலையும், பெரியதொரு புஸ்தக சாலையும் இருக்கின்றன.

நூல் : விஷ்ணு ஸ்தல மஞ்சரி (1908-1913)
இரண்டாம் பாகம். பக்கங்கள் 89-93
நூலாசிரியர் : மயிலை கொ. பட்டாபிராம முதலியார்



## Cycle - மிதிவண்டி

நிமிஷத்தில் நூறு மையிலோடும் நேர்த்தியுள்ள ரயில்வண்டி, முந்நூறு கப்பல், நாலஞ்சுகப்பல் தப்பமுடன் மிதிவண்டி ஒவ்வொரு கப்பல், தப்புகள் வராமலே உயர்வான மோட்டார் கார்வண்டி,...

நூல் : சந்தியா வந்தனம் (1913); பக்கம் - 35
நூலாசிரியர் : கோ. வெங்கிடாசல ஆச்சாரியார், திருச்சிராப்பள்ளி



## மகாநாடு (மாவட்ட) மாநாடு

I அமெரிக்க மதுரை மிசினில் உள்ள கிறித்துவ ஆலயங்களின் மாவட்ட மாநாட்டின் மூன்றாவது ஆண்டு அறிக்கை : முதற்பதிப்பு; II சாமுவேல் ஜோசப் அய்யர், அருப்புக்கோட்டை; லெனாக்ஸ் பிரஸ், பசுமலை; ஜுலை, 1913

நூல் : அமெரிக்க மதுரை மிசினில் உள்ள கிறித்துவ ஆலயங்களின் மாவட்ட மாநாட்டின்மூன்றாவது ஆண்டு அறிக்கை (1913)
நூலாசிரியர் : ஏ.எஸ். அப்பாசாமி பிள்ளை
தமிழ்நூல் விவர அட்டவணை (1911-1915)
மூன்றாம் தொகுதி - மூன்றாம் பகுதி பக்கம் - 34
பொதுப் பதிப்பாசிரியர் கொண்டல் மகாதேவன், பி.எஸ்ஸி., எம்.ஏ.,



சூரியன், சிருஷ்ட்டி தெளிந்தருளிய ஸ்ரீமது பஞ்சமுக விஸ்வப்ரம்மாண்ட பிரம்மிதே சத்ரு சாகர பரியந்தம் தேவப்பிறாம்மணோப்யோ சுபம்பவந்து மாந்தூர் கிண்ணந்தூர்.

மாகா ஆசீர்வாதம் சம்பூர்ணம்
அ. பட்டனாச்சாரி அவர்கள் எழுதிய பஞ்சப்றம்ம கப்பல்

பாறுலகில், எமநுவிஸ்வப்றம்மா, தேசிகா, மனுவிஸ்வப்பிரம்மா பவுசுடனேசானகரிஷி கோத்ரம் தேசிகா, ரிஷிகோத்ரம் சூஸ்திரமா ஆஸ்வலாயனமா தேசிகா, ஆஸ்வ லாயனமா ப்ரவரயாம் ஜத்யோ ஜாதமது தேசிகா, சத்யோ ஜாதமது, பண்புடனே அமுதரிந்த கார்முனைகள் ஏழு கப்பல், தேசிகா, ஏழுகப்பல், கலப்பை நாலுகப்பல் கூர்மையுள்ள எழுத்தாணி சந்திவி, தேசிகா எழுத்தாணி, குணமுடனே ஏழு கப்பல் சீருடனே ரிக்வேதம் தேசிகா சிறந்தபடி, வேதபாறாயணமும் தேசிகா வேதபாறாயணமும்.

**முடுவு**

அய்யும், ஒம குண்டமும், அவ்பாசனமும், அநுக்கிரக சித்தியும் ருத்ரன் சிருஷ்ட்டியும் தயவான மனுநீதியும் தண்டமிள் விளங்க அகராதி நன்னூலும் டொப்பிகளறுக்கவே கத்தியொரு கப்பல் துள்ளிபமான கூர்மண் வெட்டியும், பொர்பணிகள் போலவே வங்கிசமுதாடு புகளான கட்டாரி கன்றகோடாலி அப்பு வெளியாகவே பிக்காசு குந்தாளம், அடவுடனே வருகிறது அஞ்சாறுகப்பல் துப்பாக்கி பீரங்கி பன்னிரண்டு கப்பல் துஷ்ட்டர்களை வெட்டவே கத்தி யொருகப்பல் குப்பரத்தள்ளி குத்தி மலத்தும் கூர்மையுள்ள ஈட்டி வேல் வல்லயமனந்தம் செப்பமுள கைதோட்டா, வெடிகளொருகப்பல் சீறானசுருட்டு கைபிடி அருவாள்.

பற்பல ஆயுதம் அனேகங்களுண்டு பண்புடன் சொல்ல என்னாவு காணாது சொர்ப்பமாய் சொல்லுகிறேன் தந்தியொரு கப்பல் சுகம்னகெடிகாரம் முவெட்டு கோடி நிப்பரம் நிமிஷத்தில் நூறுமயிலோடும் நேர்த்தியுள்ள ரயில்வண்டி முன்னூறு கப்பல் நாலஞ்சுகப்பல் தப்பமுடன் மிதிவண்டி ஒவ்வொரு கப்பல் தப்புகள்வறாமலே உயர்வான மோட்டார்கார் வண்டி யொருகப்பல் தப்புகள் வறாமலேறகங்ளெல்லாம் தானாகப்பாடுகின்ற புவனகறாப்பெட்டி கற்பகம் போலவே அரண்மனைகள் செய்ய கதவுநிலைக்கெல்லாம் கொப்புக்கண சில சாமான் அற்ப்புதமாய் மனுவேலை அளவிட்டு சொல்ல ஆதிசேடனாலும் முடியாது சாமி இப்படியே இவ்வளவும் ஏற்றுமதியாகி இனமான மாந்தை நகர் விட்டேகி வருகுதையா கப்பல் ஏலேலோ ஏலேலோ தேசிகா ஏலேலோ.



## விவாஹவேஷம் - மணக்கோலம்

குறமடந்தை – குறச்சிறுமி, (வள்ளி நாயகி) மணக்கோலம் – – விவாஹவேஷம், மணக்கோலமானவன் செங்கீரை யாடியருள் எனவும், தெய்வங்கள் மணவாளன் செங்கீரை யாடியருள் எனவும் முடித்துக் கொள்க.

நூல் : முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் (1914), பக்கம் - 26
உரையாசிரியர் : காஞ்சி. மகாவித்வான் இராமசாமி நாயுடு



| | | |
|---|---|---|
| விதூஷகன் | – | கோமாளி, கோணங்கி |
| உரோகணி | – | உருளி |
| தேசோமயம் | – | பேரொளி |
| பரிபாகம் | – | ஏற்ற பக்குவம் |
| அஞ்சுகம் | – | அழகிய கிளி |
| அபரஞ்சி | – | புடமிட்ட பொன் |
| கருடன் | – | பறவைக்கரசு |

நூல் : சதகத்திரட்டு (1914) சென்னைமதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டது.



சராசரம் = சரம் + அசரம் : அசையும் பொருள் அசையாப் பொருள்

| | | |
|---|---|---|
| கமனம் | – | நினைவு |
| கனடம்பம் | – | மிக்க பெருமை |
| பட்சண வர்க்கம் | – | பலவித சிற்றுண்டி |
| சரித்திரம் | – | வரலாறு |
| விவேகிகள் | – | மதியுள்ள பேர் |

நூல் : வடிவேலர் சதகம் (1915)
நூலாசிரியர் : உடுமலைப்பேட்டை முத்துசாமிக் கவிராயர் (திரைப்படப் பாடலாசிரியர் உடுமலை நாராயண கவியின் ஆசிரியர் )



## Visitor's Book - பார்வையீடு புத்தகம்

ஸ்ரீமான் காந்தியும் அவரது பாஷாபிமானமும் – ஸ்ரீமான் காந்தியவர்கள் சென்னைக்கு விஜயம் செய்தபோது ஸ்ரீராமகிருஷ்ண மாணவர் இல்லத்தைப் பார்க்கப் போயிருந்தனர். அங்குள்ள ஏற்பாடுகள் எல்லாவற்றையும் கண்டு

திருப்தியடைந்து தம் அபிப்பிராயத்தை அங்குள்ள பார்வையீடு புத்தகத்தில் (visitor's Book) குறிப்பிட்டார். ஸ்ரீமான் காந்தி ஆங்கிலத்தில் நிபுணரா யிருந்தயோதிலும் அப்புத்தகத்தில் குறிப்பிட்டுள்ள அபிப்பிராயங்க ளெல்லம் ஆங்கிலத்தில் இருந்தனவேனும் அவையொன்றையும் கவனியாதவர் போல் தம் அபிப்பிராயத்தைத் தாய்பாஷயாகிய குஜராத்தியில் குறிப்பிட்டது பலருக்கு வியப்பை உண்டு பண்ணிற்று.

| | | |
|---|---|---|
| இதழ் | : | விவேக பேதினி (1915) தொகுதி; பகுதி -11 பக். - 409, |
| சொல்லாக்கம் | : | சி.வி. சாமிநாதையர். |



## சுவாமி வேதாசலம் - மறைமலை அடிகள்

**(1916)**

பொதுநிலைக் கழக மாளிகை அழகிய பூங்காவினாற் சூழப்பெற்றிருந்தது. உள்ளமும் உடலும் நலமுறக் காலையினும் மாலையினும் அடிகளார் தம் அருமருந்தன்ன மகளுடன் உலாவி வருவார். தம் மகளையுந் தம்மைப்போலவே இன்னிசையிலே பயிற்றுவித் திருந்தனர் அடிகள். 1916இல் ஒருநாள் மாலை இராமலிங்க அடிகள் பாடிய,

'பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந்த தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சங் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்குமென்
நமச்சி வாயத்தை நான்மற வேனே'

என்னும் இப்பாடலை உள்ளமுருக உயிருருக ஓதி முடித்தனர் அடிகள். அப்பொழுது அடிகளின் உள்ளம் அப்பாடலின் இன்னோசையிலே மூழ்கியது.

'நீலா! இப்பாடலிலுள்ள 'தேகம்' என்ற வடசொற்கு மறாக, 'யாக்கை' என்னுந் தமிழ்ச்சொல் ஆளப்பட்டிருப்பின் சொல்லோசை மேலும் இனிமையாக இருக்குமன்றோ? வடசொற்களும் ஏனை அயன்மொழிச் சொற்களுந் தமிழிற் கலப்பதால், தமிழ்மொழியின் இனிமை குறைவதுடன், தமிழ்ச் சொற்கள் பலவும் நாளடைவில் மறைய, அயன்மொழிச் சொற்கள் ஏராளமாகத் தமிழில் நிலைபெற்று விடுகின்றன. இதனாற், காலஞ் செல்லச் செல்லத் தமிழ்ச்சொற்கள் சிறுகச் சிறுக மறைந்தழிகின்றன. இவ்வாறே நிகழ்ந்து கொண்டிருந்தால், தமிழ்மொழியும் இறந்துபோன மொழிகளில் ஒன்றாகிவிடுமன்றோ? என்று கூறினர் அடிகள்.

நீலாம்பிகையார், 'அங்ஙனமானால், இனி நாம் தனித்தமிழிலேயே பேசவும் எழுதவும் வேண்டும்' என்று உணர்ச்சி ததும்ப உரைத்தனர்.

அன்று முதல் அம்மையார் தனித்தமிழ்ச் சொற்களையே அமைத்துப் பேசவும் எழுதவும் முற்பட்டார். அடிகளும் தம் மகளாரின் முற்போக்குக்கிணங்க, 'சுவாமி வேதாசலம்' எனுந் தம் பெயரை 'மறைமலை அடிகள்' எனவும், தம் 'ஞானசாகரத்தை 'அறிவுக் கடல்' எனவும், மாற்றியமைத்தனர்.

மற்றும் தாம் எழுதிய புதிய நூல்களைத் தனித்தமிழிலேயே எழுதியும், பழைய நூல்களை மறுமுறை பதிப்பிக்கும்போது வட சொற்களைத் தனித்தமிழ்ச் சொற்களாக மாற்றிப் பதித்துந் தனித்தமிழ் தொண்டு புரிந்து வந்தனர்.

நூல் : மறைமலையடிகள் (1951) பக்கங்கள், 77, 78.
நூலாசிரியர் : புலவர் அரசு.



## காயசித்தி - உள்ளுடம்பு

உள்ளுடம்பு (காயசித்தி) பெறுதலையே பெறற்(கரும்) பேறாகவும், சித்தி முத்தியாகவும், மற்ற யாதனா சரீரங்களை விட்டு இந்த உள்ளுடம்பைப் பற்றுதலொன்றையே 'கடைப்பிடி'யாகவும் பிடித்துழைக்கிறவர்கள் உலகத்தில் உண்டென்பது விளங்கும்.

நூல் : நாத-கீத-நாமகள் சிலம்பொலி (1916) பக்கம் - 118.
ஆசிரியர் : சி.வி. சாமிநாதையர்.



## நவநீதகிருஷ்ணன் - வெண்ணெய்க்கண்ணன்

இது, மகா—ள—ள—ஸ்ரீ பிரசங்க வித்வான் நவநீதகிருஷ்ண பாரதியென்றும் கண்ணபுரத்துக் கவுணிய வெண்ணெய்க் கண்ணனார் இயற்றியது.

நூல் : சத்திய அரிச்சந்திரப் பா (1916) பக்கம் - 4.
நூலாசிரியர் : மதுரை, தல்லாகுளம் சி. முத்திருள முதலியார்.
நூலைப் பரிசோதித்தவர் : பிரசங்க வித்வான் நவநீத கிருஷ்ண பாரதியார்.



## தரித்திரம் - நல்கூர்வார்

இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்

என்னும் இக்குறளைக் கவனியுங்கள். உலகத்தில் செல்வர்கள் சிலராக, நல்கூர்வார் (தரித்திரர்) பலராதற்குக் காரணம் யாதென் றாராய்ந்துழி; அது தவஞ்செய்வார் சிலராகவும் செய்யாதார் பலராதலும் போல வென்றார்.

நூல் : தவம் (1917) பக்கம் - 4.
நூலாசிரியர் : ச. தா. மூர்த்தி முதலியார் (தமிழ் நாட்டில் தமிழனே ஆளவேண்டும்; தமிழ்க்கொடி பறக்கவேண்டும் என்று முதன்முதல் கவிதை பாடியவர்)



## களந்தை கிழான்

சைவ சித்தாந்த சமாஜத்தின் பன்னிரண்டாவது அண்டுவிழா இச்சமாஜத்தின் பன்னிரண்டாவது ஆண்டு நிறை விழா 1917ம் வருடம் டிசம்பர் மீ 23, 24, 25ம் தேதிகளில் சென்னைக்கடுத்த பிரம்பூர் செம்பியத்தில் அமைத்துள்ள ஓர் நாடகக் கொட்டகையில் க்ஷ சமாஜத்தின் நிர்வாக சபை அங்கத்தவரில் ஒருவராய் வெம்பியம் கிராம முனிசீப் ஸ்ரீமான் – பண்டித ரத்தினம் புழலை – திருநாவுக்கரசு முதலியாரவர்கள் (Honorary Magistrate) பெரு முயற்சியாய் மிகச் சிறப்பாக நடைபெற்றது. சித்தாந்த சரபம் – அஷ்டாவதானம் சிவயூ கலியாண சுந்தர யதீந்திர சுவாமிகள் அத்திராசனம் வகித்து விழாவை அணிபெற நடத்தினர்.

களந்தை கிழான் (கி. குப்புச்சாமி

இதழ் : சித்தாந்தம் (1918 ஜனவரி) தொகுதி - 7, பகுதி - 1,, பக்கம் - 17.



## கலியாண சுந்தரம் - மணவழகு

1917இல் டிசம்பர் மாதம் 24உ செம்பியத்தில் கூடிய மகாசமாஜக் கூட்டத்தில் நடந்த தீர்மானங்கள்.

1. இவ்வருடத்து அறிக்கைப் பத்திரம் அங்கீகரிக்கப்பட்டது.

2. ஸ்ரீமான் – கி – குப்புச்சாமி முதலியார் அவர்கள் ஐந்து வருஷமாகப் புரிந்த உதவிக்காக சமாஜம் நன்றி பாராட்டுகின்றது.

சபைத்தலைவர் : சித்தாந்த சரபம் - அஷ்டாவதானம் சிவபிரீ - கலியாண சுந்தர யதீந்திர சுவாமிகள், சென்னை

உதவி சபைத் தலைவர் : ஸ்ரீமான் ஜெ.எம். நல்லசாமிப் பிள்ளையவர்கள், B.A; B.C; High Court Vakil, மதுரை

ஸ்ரீமான் T. நல்லசிவன் பிள்யைவர்கள், B.A., B.L., High Court Vakil சென்னை

காரியதரிசி : ஸ்ரீமான் கே. சுப்பிரமணியப் பிள்ளை. அவர்கள் எம்.ஏ., எம்.எல்., பொக்கிதார் : ஸ்ரீமான் W.T. கோவிந்தராஜ முதலியார் அவர்கள், சென்னை

பத்திராசிரியர் : சித்தாந்த சரபம் - அஷ்டாவதானம் சிவஸ்ரீ - கலியாண சுந்தர யதீந்திரரவர்கள் சென்னை (மணவழகு)

இதழ் : சித்தாந்தம் (1918) தொகுதி - 7. பகுதி - 1; பக்கம் - 21, 22



## கலியாண சுந்தரம் - மணவழகு (1918)

ம—ள—ள —ஸ்ரீ ஸ்ரீபெரும் பூதூர் குமார வேலாயுத முதலியார் என்பவர் சிவானந்தச் செல்வராகிய தாயுமான சுவாமிகள் பாடலுக்கு ஒரு தக்கவுரை எழுதி யுபகரிக்கின் சஞ்சிகை ரூபமாக வெளிப்படுத்திக் கொள்வே னென, அவர் வேண்டுகோளுக் கியைந்து சைவாசார துல்யரான தாயுமான சுவாமிகள் திருவடித் தியானத்தால் திருவருளை முன்னிட்டு ஆசிரியர் இருதயத்துண்மை சூழ்ந்து, பர பிரம சூத்திரமாகிய சித்தாந்த மகா சூத்திரம் என்று அறிஞரானுய்த் தோதப் பெறூஉம் வடமொழிச் சிவஞான போத மொழி பெயர்ப்பாகிய தென்மொழிச் சிவஞான போதமாதி மெய்கண்ட சாஸ்திரங்கட்கும் திராவிட திராவிட மகா பாஷ்யாதிகட்கும் இணங்கப் பலவரிய பெரிய சுத்தாத்துவித சித்தாந்த சாஸ்திரப் பிராமாணங்கள் எண்ணில காட்டி, மெய்கண்ட விருத்தியுரை என வொன்றியற்றினான்.

ஆன்மாவிற்கு இயற்கையாக வமைந்துள்ள திரோதானத்தால் ஏதாகிலும் மாறுபாடு விளைந்திருக்குமேல் முன்பின்னாராய்ச்சியால் முறைப்படுத்தி வாசித்துக் கொள்ளும்படி சன்மார்க்கர்களை வந்தனத்துடன் கேட்டுக் கொள்ளுகின்றனன்.

— மணவழகு

சென்னைப் பட்டணம் 1918
கீலக ஸ்ரீ கன்னி ரவி

நூல் : தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு முதலிய மூலமும் சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் பூவை - கலியாண சுந்தர முதலியார் மெய்கண்ட விருத்தியுரையும். பக்கம்-2.



## Tamil Cyclopedia - தமிழ்க் களஞ்சியம்

தமிழ்க்களஞ்சியம் (Tamil eyelopedia) இப்பெயர் கொண்ட நூலொன்று மாத சஞ்சிகையாக வெளிவருகிறது. பகுதி ஒன்று வெளி வந்தது. இதில் தமிழின் உற்பத்தி, தமிழின் தொன்மை, தமிழின் பதப்பொருள், தமிழ்ச்சிறப்பு (தமிழ் உயர்தனிச் செம்மொழி, தமிழ்த் தெய்வ பாஷை, தமிழ் மூலபாஷை) தமிழ்ச் சங்கம், தலைசங்கம் முதலிய விஷயங்க ளடங்கியிருக்கின்றன. சஞ்சிகையொன்றுக்கு விலை அணா 8. வேண்டியவர்கள் சென்னை பிரம்பூர் தமிழ் சைக்ளோபீடியா ஆபீசுக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

இதழ் : சித்தாந்தம் (1918 ஜனவரி) தொகுதி 7; பகுதி-1 பக்கம், 16.
சொல்லாக்கம் : பூவை கலியாண சுந்தர முதலியார்



## Double Pneumonia - அள்ளு மாந்தம்

என் குழந்தைகளில் 4 பிராயமுள்ள குழந்தை ஒன்றுக்கு அள்ளு மாந்தம் (Double Pneumonia) என்னும் கொடிய வியாதியால் வருந்தும் போது அவரது தேவி சித்த பூரணச் சந்தி ரோதயத்தின் பெருமையையும், அது அக்கொடிய வியாதியைக் குணப்படுத்தினதையும் முக்கியமாய்த் தெரிவிக்கப் பிரியப்படுகிறேன். இவரது சித்தவைத்தியத்தின் திறமையை என்னால் சொல்லத் திறமல்ல.

ஜி. ஆர். ஆதிகேசவலு நாயுடு,
Shrodtriathar, Monicipal Commissioner



## Weaver's Loom - தறிமரம்

தறிமரம் : தறியின் மரம் (தறி = A weaver's Loom)

நூல் : ரிப்பன் ஐந்தாம் வாசக புத்தகம் (1918) பக்கம் - 56
நூலாசிரியர் : தி. செல்வக் கேசவராய முதலியார். எம்.ஏ., (சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்)



## Company - கூட்டம்

இங்க்லண்டிலிருந்து சில இங்க்லிஷ்காரர் வர்த்தகம் செய்யும்படி ஒரு கூட்டமாக (கம்பெனியாக) இந்தியாவுக்கு முதலில் வந்தனர். தங்கள் வர்த்தகச் சரக்குகளைப் பத்திரப்படுத்தி வைக்கும் பொருட்டு அவர்கள் பொம்பாய், கள்ளிக்கோட்டை, சென்னை, கல்கத்தா முதலான பட்டினங்களில் கொஞ்சங் கொஞ்சம் இடம் சொந்தமாகச் சம்பாதித்து, அங்கங்கே சரக்கறைகளைக் கொஞ்சம் இடம் சொந்தமாகச் சம்பாதித்து, அங்கங்கே சரக்கறைகளைக் கட்டிக் கொண்டார்கள்.

மேற்படி நூல் : ரிப்பன் ஐந்தாம் வாசக புத்தகம் (1918) பக்கம் - 2



| | |
|---|---|
| அனுசரன் | – ஏவற்காரன் |
| சந்திரசாலை | – நிலா முற்றம் |
| சாரம் | – பொருள், உள்ளீடு |
| பிரதாபம் | – மேன்மை |
| விமானம் | – ஏழடுக்கு வீடு |

நூல் : மேகதூதக் காரிகை (1918) (காளிதாச மகாகவி)
மொழி பெயர்த்தியற்றியவர் : சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை



| | |
|---|---|
| காவி வஸ்திரம் | – துவராடை |
| தவசிகளின் ஆசிரமம் | – நோன்புப்பள்ளி |
| இயந்திரம் | – பொறி |
| முத்திரை மோதிரம் | – பொறியாழி |
| விவாகச் சடங்கு | – மணவினை |
| நக்ஷத்திரம் | – விண்மீன் |

நூல் : சித்தார்த்தன் (1918)
நூலாசிரியர் : அ. மாதவையர்
அருஞ் சொல் உரை : அ. மாதவையர்



## ஸ்வதேச கீதங்கள் - நாட்டுப்பாட்டு

1907 – ஏப்ரல் – தமிழகத்தின் தலைநகரான சென்னையில் இந்தியா என்ற வார ஏடு உதயம். அதன் ஆசிரியரானார் பாரதியார். 'பாலபாரதம்' என்ற ஆங்கில இதழையும் பொறுப்பேற்று நடத்தினார்.

1908 – தாம் பாடிய 'ஸ்வதேச கீதங்கள்' என்ற பாடல் தொகுதியை வெளியிட்டார்.

1918 – பரலி சு. நெல்லியப்பர் 'சுதேச கீதங்க'ளை நாட்டுப் பாட்டு என்ற பெயரால் பிரசுரம் செய்தார்.

நூல் : பாரதியார் கவிதைகள். செப்டம்பர் - 1993
தொகுப்பாளர் : சுரதா கல்லாடன்



| | | |
|---|---|---|
| பரிணாமம் | – | திரிபு |
| கிரியா | – | தொழில் |
| பரிமாணம் | – | அளவு |
| அனுக்கிரகம் | – | அருளுதல் |

நூல் : நாநாஜீவவாதக் கட்டளை (1917)
நூலாசிரியர் : ஸ்ரீ சேஷாத்திரி சிவனார்
குறிப்புரை : கோ. வடிவேலு செட்டியார் (லோகோபகாரி பத்திராசிரியர்)



## Ticket - பயணச் சீட்டு

பூலோக நரகம் என்பதைப் பலர் பலவாறு கொள்வர். பூலோகத்திலும் நரகம் உண்டோ? என்று சிலர் கருதுவர். அந்நகரம் யாது? அஃது இருப்புப் பாதை (ரெயில்வே) மூன்றாம் வகுப்பு வண்டித் தொடர். மூன்றாம் வகுப்பு வண்டிகளில் சிறப்பாகத் தென்னிந்திய ரெயில்வே மூன்றாம் வகுப்பு வண்டிகளில் ஏழைச் சகோதரர்கள் படும் துன்பத்துக்கு அளவு உண்டோ? மூன்றாம் வகுப்புப் பயணச் சீட்டு (டிக்கட்) பெறுவது பெருங் கஷ்டம்.

இதழ் : தேச பக்தன் - நாளிதழ், சென்னை 2. 1. 1918
ஆசிரியர் : திரு.வி.க.



நிர்க்கந்தரூபம் – திருவுருவம்

மேருமந்தர புராணம் மூலமும் உரையும் (1918)



## Conductor - நடத்திக்கொண்டு போகிறவன்

மின்சாரம் சாதாரண உலர்ந்த காற்றின் வழி சுலபமாகச் செல்வதில்லை, ஜலத்தின் வழியும் ஈரமான வஸ்துக்களின் வழியேயும் இரும்பு முதலான உலோகங்களின் மூலமாயும் சீக்கிரம் செல்லும்.

ஜ வந்துக்களின் உடம்பின் வழி அதி சுலபமாய் மின்சாரம் பாயும். கண்ணாடியின் வழியும் உலர்ந்த தரையின் வழியும் செல்லாது. முன் சொன்ன வகை வஸ்துக்களுக்கு கண்டக்டர்கள் என்று பெயர், (கண்டக்டர் – நடத்திக் கொண்டு போகிறவன்).

ஆதலால் மழை பெய்து இடி இடிக்கும் காலத்தில், மரங்கள் மேலும் உன்னதமான வீடுகளின் மேலும், இடி விழுகின்றது.

| | | |
|---|---|---|
| இதழ் | : | தமிழ்நேசன் (1919) தொகுதி - 2, பகுதி - 2, |
| கட்டுரை | : | மின்சாரமும் மின்னலும் |
| கட்டுரையாளர் | : | M.C.A அநந்த பத்மநாபராவ், M.A. L.T., (சென்னை பிரஸிடென்ஸி கலாசாலை பௌதிக சாஸ்திர போதகர்) |



## சிலேடை - பல்பொருட் சொற்றொடரணி

சிலேடையென்பது ச்லேஷா வென்னும் ஆரியமொழியின்றிரிபு; இங்ஙனம் வரல் தற்பவம்.

இதனைத் தமிழணி மரபுணர்ந்தார் பல்பொருட் சொற்றொடரணியென்றும் வடநூலார் ச்லேஷாலங்கார மென்றுங் கூறுவர். சிலேடையென்பதன் பொருள் தழுவுதலுடைய தென்பது.

அஃதாவது உச்சரிப்பில் ஒரு தன்மைத்தா நின்ற சொற்றொடர் ஒன்றற்கு மேற்பட்ட பொருளைத் தழுவுதல்.

| | | |
|---|---|---|
| நூல் | : | கலைசைச் சிலேடை வெண்பா மூலமும் உரையும் (1920) பக்கம்.1 |
| உரையாசிரியர் | : | சதாவதானம் தெ. கிருஷ்ணசாமி பாவலர் |



## Scarlet Fever - செம்பொட்டுச் சுரம்

1870வது வருஷம், ஆலிஸ் இராஜகுமாரியார் சரித்திரத்திலும், ஐரோப்பாவின் சரித்திரத்திலும் அதிக முக்கியமானது. இவ்வருஷ முதலில் லூயிஸ் இராஜகுமாரரும் அதற்கு மேல் விக்டோரியா இராஜகுமாரியும் சிறு இராஜகுமாரனும் செம்பொட்டுச்சுரம் (Scarlet Fever என்னும் வியாதியால் வருந்தினார்கள்.

நூல் : பன்னிரண்டு உத்தமிகள் கதை (1920) பக்கம். 147
தமிழாக்கம் : திவான் பகதூர் வி. கிருஷ்ணமாச்சாரியார்.



## Legal Advice - புத்திமதி

நியாயாதிபதி : பாரிஸ்டரே, நல்லது நீர் கைதியிருந்த கூட்டிற்குள் போவீர்.

பாரிஸ்டர் : ஐயா, எனக்குக் கைதியைத் தப்பித்து விடப் புத்திமதி சொல்ல அதிகாரம் கிடையாதா என்று சொல்லிக் கொண்டே கூட்டிற்குள் சென்றார்.

நூல் : சிறுமணிச்சுடர் (1920) பக்கங்கள் : 14, 15
நூலாசிரியர் : மதுரை எஸ்.ஏ. சோமசுந்தரம்



## திலகம் - பொட்டு

திலகம் என்பது திலதம் எனவும் வழங்கும். இது வடசொல். இதனைத் தமிழர் பொட்டு என்பர். இது, 'பொட்டணியா னுதல் போயினு மென்று பொய்போலிடை' என மணிவாசகர் கூறலானு மினிது விளங்கும்.

நூல் : சீகாளத்திப்புராணம் மூலமும் உரையும் (1920) பாயிரம், பக். - 3
உரையாசிரியர் : மகாவித்வான் காஞ்சிபுரம் இராமாநந்தயோகிகள்



கண்யம் – மேம்பாடு
குதவருத்தம் – மூலநோய்
அந்தரியாமி – உள்ளீடா யிருப்பவன்
பாவம் – அறன்கடை
சம்பத்து – செல்வம்

| | | |
|---|---|---|
| தோஷம் | – | பீடை |
| சகா | – | துணை |
| தந்திரம் | – | சூழ்ச்சி |
| உபாசனை | – | வழிபாடு |
| கிரகப்பிரவேசம் | – | குடிபுகல் |
| விசித்திரம் | – | கற்பனை |

நூல் : கலங்காதகண்ட விநாயகர் விண்ணப்பமாலை (1920)
நூலாசிரியர் : தேவி கோட்டை சிதம்பரச் செட்டியார்



| | | |
|---|---|---|
| ஈமம் | – | சுடுகாடு |
| சந்தோஷம் | – | உவப்பு |
| குங்குமம் | – | செந்தூள் |
| கிருபை | – | தண்ணளி |
| காவி வஸ்தீரம் | – | துவராடை |
| மந்திரி | – | தேர்ச்சித் துணைவன் |
| இமயமலை | – | பனிவரை |
| இயந்திரம் | – | பொறி |
| விவாகச்சடங்கு | – | மணவினை |
| மந்திரம் | – | மறையுரை |
| வேத்தியல் | – | அரசியல் |
| யாகம் | – | வேள்வி |

நூல் : சித்தார்தன் (1918)
நூலாசிரியர் : அ. மாதவையர்



## வித்தியாரம்பம் செய்தல் - பள்ளிக்கூடத்தில் வைத்தல்

கிராமத்தில் தம் குழந்தைகளுக்கு வித்தியாரம்பம் செய்ய விரும்புவோர் பெரும்பாலும் விஜயதசமியன்று அவர்களைப் பாடசாலைக்கு அனுப்புவது வழக்கம். வித்தியாரம்பம் செய்தல் என்பதற்குப் பள்ளிக்கூடத்தில் வைத்தல் என்று சொல்வது வழக்கம்.

இதழ் : நல்லாசிரியன். செப்டம்பர், 1919 வயது- 15, மாதம் - 4, பக். 98
ஆசிரியர் : கா. நமச்சிவாய முதலியார் (1919)



## EVOLUTION THEORY - இயற்கைத் திரிபு

உலகின்கணுள்ள தோற்ற பேதங்களெல்லாம் ஒன்றின் ஒன்றாகக் காலந்தோறும் பரிணமித் தமையுமென வாதிப்பார் பரிணாம வாதிகள். இந்தப் பரிணாமவாதமே இக்காலத்திலே மேலைத் தேசங்களிலே (Evolution Theory) இயற்கைத் திரிபு என்னும் பெயர் கொண்டு பெரிது பாராட்டப்படுவது.

நூல் : பிரபஞ்ச விசாரம் (1919) 4- பரிணாம வாதம், பக்கம் - 31
நூலாசிரியர் : யாழ்ப்பாணம் - குகதாசர் - ச. சபாரத்தின முதலியார்



| | | |
|---|---|---|
| விபூதி | – | வெண்பொடி |
| அகத்துவசம் | – | மாடக் கொடிகள் |
| திவசம் | – | நாள் |
| குரோசம் | – | கூப்பிடுதூரம் |
| சங்கிலி | – | தொடர் |

நூல் : திருக்கருவைத் தலபுராணம் (1919)
ஆசிரியர் : எட்டிசேரி ச. திருமலைவேற் பிள்ளை



| | | |
|---|---|---|
| உப்ரிகை | – | மேல்வீடு |
| விமானம் | – | ஏழடுக்கு வீடு |
| இரமியம் | – | மகிழ்வைக் கொடுப்பது |
| சாரம் | – | பொருள், உள்ளீடு |

நூல் : மேகதூதக் காரிகை (1919)
நூலாசிரியர் : காளிதாச மகாகவி மொழிபெயர்த்தியற்றியவர் : சுன்னாகவும் அ. குமாரசுவாமிப் பிள்ளை



## Cholera - வாந்திபேதி

கலராவின் காரணப் பெயர்கள் :

விஷபேதி, பெரு வாரி, கொள்ளை நோய், கசப்பு

வாந்திபேதி யென்பது அதனால் பீடிக்கப்படுகிற மனிதர் எடுக்கிற வாந்தி அவர்களுக்கு ஆகிற பேதி ஆகிய இவ்விரு காரியங்களையும் ஒருமிக்க உணர்த்த வரும் ஒருவகை வியாதிக்கு வழங்கும் பெயராகும். வாந்தி பேதி

ஆங்கிலத்தில் கலரா என்று கூறப்படும். வாந்தி பேதி அதன் விஷத்தன்மையால் விஷபேதி யெனவும், பிணங்குவிக்கும் பெற்றியால் பெருவாரியெனவும், கொல்லுங் கொள்கையால் கொள்ளை நோயெனவும், மனிதர் கூறவும் வெறுப்படைவதால் கசப்பெனவும் இவ்வாறு வெவ்வேறு பெயர்களால் விளம்பப்படுகிறது.

இதழ் : நல்லாசிரியன் 1919 ஜூன். வயது 15, மாதம் 1.
கட்டுரையாளர் : சி.வே. சண்முக முதலியார். உபத்தியாயர், செஷனல் ஸ்கூல், காரியதரிசி, உபாத்தியாயர் சங்கம், திருவள்ளூர்



## Governer - காவலர்

விசுவநாதரின் ராஜ விசுவாசமும் வீரமும் புயவலியும் இத்தன்மையவென உணர்ந்த ராயர் மகிழ்ச்சியுற்று அவர் வேண்டும் வரங்களைக் கொடுப்பதாகச் சொன்னார். நாயக்கர் தமது பிதாவிற்கு உயர்ப்பிச்சை கொடுக்க வேண்டுமென்று தாய் உயிர்வேண்டிய பரசுராமரைப் போற் கேட்க, அவரும் மனமுவந்து ஈந்தனர். அன்றியும் விசுவநாதரைப் பாண்டி நாட்டுக்குத் தலைமுறை தத்துவமாய்க் காவலர் ஆக்கினர்.

காவலர் என்ற பதம் Governer என்ற ஆங்கில மொழியின் பெயரில் இந்நூலில் பிரயோகிக்கப்பட்டுள்ளது.

நூல் : பாண்டிய தேச நாயக்க மன்னர் வரலாறு (1919), பக். 7,
நூலாசிரியர் : நெ.ரா. சுப்பிரமணிய சர்மா, அமெரிக்கன் மிஷன், (பசுமலை உயர்தர கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்)



## அன்னகோசம் - தீனிப்பை

விஷபேதி ஒருவகை மோசமான நாசகால வியாதி. கலரா கண்ட இடத்தில் அநேகர் மரித்துப் போவார்கள். ஆகையால் இப் பெருவாரிக்குச் சனங்கள் பெரிதும் பயந்து இடம் பெயர்ந் தோடுவார்கள். கலராவை ஒருவகைத் தொத்து வியாதியென்றே கருதுகிறார்கள். விஷபேதி அன்னகோசத்தில் (தீனிப்பை) எவ்வகை ஆகாரத்தையும் இருக்கவொட்டாமல் அதைக் கீழுக்கும் மேலுக்குங் கிண்டிக் கிளப்பிவிடுகிறது.

இதழ் : நல்லாசிரியர், 1919 ஜூன்; வயது-15 மாதம் - 1, பக்கம் - 8
கட்டுரையாளர் : சி.வே. சண்முக முதலியார் உபாத்தியாயர், செஷனல் ஸ்கூல், காரியதரிசி, உபாத்தியாயர் சங்கம், திருவள்ளூர்.



## மீனாட்சி - கயற்கண்ணி

### தமிழே சிறந்தது

*இராகம் – பியாகு, தாளம் – ஆதி*

**பல்லவி**

தமிழே சிறந்ததென உனது நாமம் விளங்கச்
சாற்றும் அந்தப் பொருளை யாரறிவார் – அம்மா (தமிழே)

**அநுபல்லவி**

அமிழ்தினிற் சிறந்தது ஆரியத் துயர்ந்தது
அகத்திய னார்சிவ னிடத்தினி லுணர்ந்தது
அடிசீர் மோனை எதுகை தொடைசேர் தளையின்வகை
ஆகும் பாவினம் சந்தமா விரிந்தது – வண்ணத் (தமிழே)

**சரணம்**

திணைபால் காட்டும் விகுதி சிறப்புப் பொதுப் பகுதி
சேர்ந்த விதங்களெல்லாம் தென்மொழிக் கே தகுதி
இணையெனும் வடமொழி இருமொழியின் பேர்வழி
இசைக்கும் எழுதுவ தெல்லாம் வலஞ்சுழி – அதால் (தமிழே)

அகரத்தோ டகரஞ்சேர் வடமொழி தீர்க்க சந்தி
ஆகுமென் றுரைப்பார்கள் அறியார்கள் புத்தி நந்தி
மகரவொற் றழிவிதி மார்க்கமென் பதைப் புந்தி
வைத்தவர்மரு வென்றாரே முந்தி – அதால் (தமிழே)

கயற்கண்ணி மொழிபெயர்ப் பதற்கென உரைசெய்வார்
கந்தப் புராணமதின் காப்புச் செய்யு ளறியார்
இயற்படப் புணரியல் என்னுடன் வாதாடுவார்
இசை மராடி என்பதற் கென்புகல்வார் – அதால் – (தமிழே)

வடமொழி வழக்கில்லை வழங்குவர் தமிழ்ச் சொல்லை
மலைவேங் கடங்குமரி மற்றிரு கடல் எல்லை
இடமாக வகுத்தவர் இன்றுள்ளார் களுமல்லை
இயம்பும் மீனாட்சியென்ற பெயர்வல்லை – அதால்– (தமிழே)

– சங்கரதாஸ் சுவாமிகள்

நூல் : சங்கரதாஸ் சுவாமிகள் பக்திரசக் கீர்த்தனை (1920)



## கீர்த்தனை - பாட்டு

கீர்த்தனை என்பது வடமொழிச் சொல்லாயினும் தமிழில் பாட்டென்னுஞ் சொல்லோடு வேற்றுமையின்றிப் பயின்று தொன்றுதொட்டு வழங்கி வருகிறது. பாட்டென்னுஞ் தமிழ்ச் சொல்லோ இசைத் தமிழின் பாகுபாட்டையுணர்த்தும் தேவபாணி என்பது முன்னோர் ஆட்சி.

நூல் : பரமானந்தப் பக்திரஸக் கீர்த்தனை (1920) முகவுரை' - பக்கம் - 5
நுலாசிரியர் : தூத்துக்குடி டி.டி. சங்கரதாஸ் சுவாமிகள் (தமிழ்நாடகத் தலைமை நாடகாசிரியர்)



## பாலசுந்தரம் - இளவழகனார் (1920)

### குருகுலம் அழகரடிகளார்

### வாழ்க்கைக் குறிப்புக்கள்

பிறந்த ஊர் : மதுராந்தகத்தை அடுத்த மாம்பாக்கம்
ஆண்டு : 1904 ஏப்ரல்
பெற்றோர் : திரு. சுப்பராய பிள்ளை திரு. மாணிக்கம்மாள்
மரபு : வள்ளலாரைத் தோற்றுவித்த 'சீர் சுருணீகர்'
பெயர் : பெற்றோரால் அமைந்த பெயர் பாலசுந்தரம் ஆசிரியரால் அமைந்த பெயர் இளவழகனார் தீக்கையால் அமைந்த பெயர் அழகரடிகள்

1920. 16 ஆம் வயதில் தமிழ்க் கடல் மறைமலையடிகளார்க்கு மாணவர்.

நூல் : குருகுலம் - திருக்குறள் பீடம், அழகரடிகள் வாழ்க்கை வரலாறு
நூலாசிரியர் : த. ஆறுமுகம் பக். 53, 54.



ஞானவாசகம் – அருட்பா
சித்தவிருத்தி – நெஞ்சிற் பரப்பு

நூல் : திருவாதவூரடிகள் புராணம் (1923) (கடவுள்மாமுனிவர்)
குறிப்புரை : பிரசங்க பாநு கா. இராஜாராம் பிள்ளை



## ஞான சாகரம் - அறிவுக் கடல் (1923)

'ஞான சாகரம்' (1902) இதுவே பின்னர் அறிவுக் கடல் எனத் தனித் தமிழ்ப் பெயர் சூட்டப்பட்டது! ஆசிரியர் நாகை வேதாசலம் பிள்ளை எனும் மறைமலையடிகளாவர். ஞான சாகரம் முதலிய தனது பெயருக்குத் தகுந்தாற் போல் பதுமம் – 1, இதழ் – 1 என்று வெளிவந்தது. பின்னர் 1923 இல் அறிவுக் கடலாகப் பெயர் மாற்றப்பட்ட பின்பு திருமலர், இதழ் என்று வெளிவரலாயிற்று.

நூல் : தமிழ் இதழியல் வரலாறு (1977) பக்கங்கள் 60, 61
ஆசிரியர் : மா. சு. சம்பந்தன்



| | | |
|---|---|---|
| தரித்திரர் | – | இல்லார் |
| காந்தன் | – | நாயகன் |
| அந்தரியாக பூசை | – | உட்பூசை |

நூல் : அட்டாங்க யோகக்குறள் வருத்தமற வுய்யும் வழி (1923)
பரிசோதித்தவர் : சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர்
(திருவாவடுதுறை ஆதீன வித்துவான்)



## விவாக முகூர்த்தப் பத்திரிகை - மண இதழ் (1924)

நாட்கள் உருண்டோடின. நம் பேராசிரியர் (மயிலை சிவமுத்து) முப்பத்திரண்டாம் அகவையைக் கடந்து முப்பத்து மூன்றாம் அகவையைக் கண்டார். அப்போது அவருக்குத் திருமணம் செய்வது பற்றி பேச்சு எழுந்தது. நம் பேராசிரியரின் ஆசிரியராகிய மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களால் மண இதழ் என்னும் தலைப்போடு திருமண அழைப்பிதழ் எழுதப் பெற்றது. நம் பேராசிரியர் 10.9.1924 இல் உற்றார் உறவினர் அனைவரும் மனங்களிக்கப் பேராசிரியர் மணி திருநாவுக்கரசு முதலியார் அவர்கள்.

எண் குணத்து முத்தாய் எழிலிற் குமரனாய்
வண்தமிழிற் சாமியாய் வாழ்காளை – பெண்குணத்து
மங்கையர்க்குப் பேரரசாம் மானுடனே பல்லாண்டு
மங்கலமாய் வாழ்க மகிழ்ந்து.

என மனமகிழ்ந்து வாழ்த்த மங்கையர்க்கரசியார் என்னும் அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார்.

தமிழ்நெறிக் காவலர் பேராசிரியர் மயிலை சிவமுத்து நினைவு மலர். மாணவர் மன்ற வெளியீடு, சென்னை.



## Cinema - படக்காட்சி

இவ்வழகிய நகரத்தில் நானாவித வியாபார ஸ்தலங்களும், கைத்தொழிற் சாலைகளும், நீதிமன்றங்களும், உயர்தர கலாசாலைகளும், நாடக மேடைகளும்; சினிமா (படக்காட்சி) நிலையங்களும், கண்காட்சித் தோட்டங்களும், கடற்றுறைமுக வசதிகளும்), மற்றும் மக்கள் தத்தம் மனதிற் கேற்றவாறு களிப்பூட்டும் விநோத விசித்திரங்களும், இன்னும் பல்வேறு செளகரியங்களும் ஒருங்கே அமைந்திருப்பதால் பற்பல தேயத்தினரும் இச்சென்னை மாநகரை வாஸஸ்தானமாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றார்கள்.

நூல் : குடியால் கெட்ட குடும்பம் (1921). பக்கம் - 4
நூலாசிரியர் : 'தமிழ் நாவலர்' எஸ்.கே. கோவிந்தசாமிப் பிள்ளை.



| | | |
|---|---|---|
| சகப்பாங்கு | – | உலகநடை |
| அன்னமயம் | – | சோற்றுருவம் |
| சலதாரை | – | சாக்கடை |

நூல் : சின்மயதீபிகை (1921)
நூலாசிரியர் : முத்தைய சுவாமிகள், குமாரதேவராதீனம்
விருத்தியுரை : காஞ்சிபுரம் இராமாநந்த யோகிகள்



## பாலசுப்பிரமணிய முதலியார், ம. B.A., B.L., - இளமுருகனார் (1921)

இவர் 1944இல் பள்ளத்தூரிலும், 1948இல் யாழ்ப்பாணத்திலும் சைவ சித்தாந்த சமாஜ ஆண்டு விழாக்களில் தலைமை வகித்தவர். சமாஜச் செயலாளராக (1921–1943) 22 ஆண்டுகள் தொடர்ந்து தொண்டாற்றியவர்.

சைவ சித்தாந்த மகா சமாஜம் பொன் விழா மலர்



## Mathematics professor
## - கணித நூற்புலவர்

அக்காலத்தில் சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் மாத மெடிக் புரொபெஸராக (கணித நூற்புலவர்) இருந்து காலஞ்சென்ற இராயபஹதூர் பூண்டி அரங்கநாத முதலியாதொருவர்தான், இவ்வாசிரியர் சிவபதம் பெற்றதும், இவரது ஜேஷ்ட குமாரனாகிய அடியேனுக்குத் தாம் மேற்பார்த்து வந்த தமிழ் டிரான்ஸி லேட்டர் ஆபீஸில் உத்தியோகஞ் செய்வித்து, அதன் மூலமாய் எமது குடும்பத்தைத் தமது நண்பரைப் போல் பாவித்துக் காப்பாற்றினவர். அந்நன்றி யென்றும் மறக்கற்பாலதன்று.

நூல் : ஸ்ரீ சங்கர விஜயம் (1921) 3வது பதிப்பு -பக். 14
முகவுரை : தொழுவூர் வே. திருநாகேஸ்வரன்
(தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்களின் புதல்வர்



## நமோ, நம - வணக்கம்

நமோ, நம என்பவைகள் மந்திரங்களி னீற்றில் வணக்கத்தை யுணர்த்தற்பொருட்டு, வருஞ்சொற்கள்; இவற்றிற்கு 'வணக்கஞ் செய்கிறேன்', 'நமஸ்கரிக்கின்றேன்' என்பன பொருள்களாம்.

நூல் : கந்தர் சஷ்டி கவசம் மூலமும் உரையும் (1921) பக்கம் 24
நூலாசிரியர் : மதுரை ஜில்லா, செம்பூர் - வித்வான் வீ. ஆறுமுகஞ் சேர்வை



## Station Master - தங்கு நிலையத்தவர் (1922)

டி. எம். அச்சுக்கூடம் ஓம் பல்லாவரம், 23.1.1922

அன்பிற்கோர் உறையுளாய்த் திகழும் திருவாளர் வே. நாகலிங்கம் பிள்ளையவர்கட்குச் சிவபெருமான் திருவருளால் எல்லா நலன்களும் உண்டாகுக!

தங்கள் அன்பின் திறத்தாலும் திருவருள் வலத்தாலும் பையனும் நானும் நலமே இங்கு வந்து சேர்ந்தோம். வரும்போது தனுக்கோடித் தங்கு நிலையத்தவர் (Station Master) வேண்டுகோளுக்கிணங்க அங்கே, 'தமிழரின் கடவுள் நிலை' என்பதைப் பற்றி ஒரு விரிவுரை நிகழ்த்தினேன்.

அதனை ஆரியப் பார்ப்பனர் பலரும் வந்து கேட்டனராயினும், எவருங் குறை சொல்லாமல் மகிழ்ந்து வியந்தனர்.

அன்புள்ள
மறைமலையடிகள்

நூல் : மறைமலையடிகள் (1951) பக்கம் 211.
நூலாசிரியர் : புலவர் அரசு



## Hammock - வலையேணி

அப்பொழுதுதான் கனகவல்லி பாட்டை முடித்தாள். மாடியின் நடுவே, இரண்டு மரத்துண்டுகளிடையே கட்டப்பட்டிருந்த வலையேணி (Hammock) ஒன்றில் அவள் படுத்திருந்தாள். கடுமையும் செம்மையும் கலந்த அவ்வலையேணியில், ஒல்லியும் உயரமுமான அப் பொன்மேனிப் பாவை நல்லாள் வெண்சிவப்புப் பட்டாடை யுடுத்துப் படுத்திருந்த காட்சி, நீல வானத்திடையே மின்னற்கொடி யொன்று நிலையாய்க் கிடப்பதுபோ லிருந்தது.

நூல் : சதானந்தர் (ஓர் அரிய தமிழ் நாவல்) (1922)
அதிகாரம் -4; துறவியின் துறவு, பஷகம் - 79
நூலாசிரியர் : நாகை. சொ. தண்டபாணிப் பிள்ளை
(மறைமலையடிகள் மாணவர்)



## Biology - உயிர் நூல்

'போதுமான மட்டுஞ் சுறுசுறுப்பாயிருப்பவனே பிராணதாரணப் பிரயத்தனத்தில் (Struggle For Existence) ஒழிந்துவிடாது தங்கி நிற்பான்' என்று உயிர் நூல் (Biology) முறையிடுகின்றது.

நூல் : தமிழ் வியாசங்கள் (1922) பக்கம் -6
நூலாசிரியர் : வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி.ஏ., (சென்னைக் கிறிஸ்தவ கலாசாலை முன்னாள் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்)



## Psychology - உளநூல்
## Political Economy - செல்வ நூல்

ஈண்டுக் குறித்த நூல் என்பது உயிர்நூல். உளநூல் (Psy-- chology) மனித நூல் (Anthropology) ஒழுக்க நூல், செல்வநூல் (Political Economy) பெவுமிய நூல். (Geology) முதலியவற்றின் பொதுப்பெயர்.

நூல் : தமிழ் வியாசங்கள் (1922) பக்கம் - 9
நூலாசிரியர் : வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி.ஏ.,



## முன்னடை, பின்னடை

எம்.ஏ. வரதராஜ பிள்ளை, பி.ஏ.,பி.எல், எப்.டி.எஸ். எல்லோருக்கும் பொதுவாக உரிமையான, 'ஸ்ரீமான்' என்னும் முன்னடையும், அவர்கள் என்னும் பின்னடையும் இல்லாமலே தமது பெயர் கிட்டத் தட்ட ஒரு சாண் இருந்தது. வக்கீல் அதைப் பார்த்து மனம் பூரித்தார்.

நூல் : சதானந்தர் (ஓர் அரிய தமிழ் நாவல்) (1922)
அதிகாரம் - 2 - பித்தோ பேயோ, பக்கம் - 38
நாவலாசிரியர் : நாகை. சொ. தண்டபாணிப் பிள்ளை



| | | |
|---|---|---|
| அபிவிருத்தி | – | மேம்பாடு |
| புண்ணியம் | – | நல்வினை |
| பராக்கிரமம் | – | வல்லமை |
| அனுமதி | – | கட்டளை |
| வித்தியாசம் | – | வேற்றுமை |
| சம்மதித்தல் | – | உடன்படல் |
| ஆடம்பரம் | – | பெருமை |
| திடீரென்று | – | தற்செயலாய் |
| அதிசயம் | – | விந்தை |
| கர்வம் | – | செருக்கு |

நூல் : ஜீவகன் சரிதை (1922)
நூலாசிரியர் : ஆ.வீ. கன்னைய நாயுடு
(சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர்)



## Fine Arts - நற்கலை

மனோபிவிர்த்தியினுக்குப் பிரதான சாதனங்களாயுள்ளன முறைப்பட்ட சாத்திரக்கல்வி (Scientific culture)யும் இலக்கியப்பயிற்சியும், நற்கலைத் (Fine Arts) தேர்ச்சியுமேயாம்.

நூல் : தமிழ் வியாசங்கள் (1922) பக்கம் -8

நூலாசிரியர் : வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி.ஏ.,



Foot-Ball – உதைப் பந்தாட்டம்

Tennis – சல்லடைப் பந்தாட்டம்

Cricket – மரச்சட்டப் பந்தாட்டம்

வேலை செய்ய வேண்டாதவன் உடல்விருத்தி விளையாட்டுக்களாகிய உதை பந்தாட்டம் (Foot-Ball), சல்லடைப் பந்தாட்டம் (Tennis), மரச் சட்டப் பந்தாட்டம் (Cricket) முதலியனவாதல் ஆடல் வேண்டும்.

நூல் : தமிழ் வியாசங்கள் (1922) பக்கம் - 7

நூலாசிரியர் : வி. கோ. சூரிய நராயண சாஸ்திரியார், பி.ஏ.,



திரு. அ. சுப்ரமண்ய பாரதி

செந்திலாண்டவன் திருவடி துணை

மார்க்கண்டேயர்

வரகவி. திரு. அ. சுப்ரமண்ய பாரதி இயற்றியது,

ப. ராமா அண்டு கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை (1923)



## Mount Road - மலைச்சாலை

திருக்குறள் வீட்டின்பால் – இது பதினான்கு சைவ சித்தாந்த நூல்கட்கு ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பும் விரிவுரையும் ஆக்கியோராகிய திரு. ஜே.எம். நல்லசாமி பிள்ளை பீ.ஏ., பி.எல்., அவர்களால் எழுதப்பட்டது. மலர் –2, பல்கலைக்கழகப் பதிப்பு நிலையம், மலைச்சாலை, சென்னை. 1923, விலை அணா இரண்டு.

நூல் : திருக்குறள் வீட்டின்பால் - முதற்பதிப்பு (1923) பக்கம் -1

நூலாசிரியர் : ஜே. எம். நல்லசாமி பிள்ளை, பீ.ஏ., பி.எல்.,



## பதிகம் - பத்து

*மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்*
*புற்றி டத்தெம் புராண னருளினாற்*
*சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்*
*பெற்ற நற்பதி கந்தொழப் பெற்றதால்*

என்னுந் திருப்பாவின்கண் பதிகம் என்னும் வடசொல் ஈரிடத்துளது. முன்னது 'பிரதீகம்' என்னும் வடசொற்றிரிபு. 'பிரதீகம்' என்னுஞ் சொல் 'பிண்டம் அஃதாவது சரீரம்' என்னும் பொருட்டு பின்னது, 'பதிகம்' என்னும் வடசொற்றிரிபு இப்'பங்திகம்' என்னுஞ் சொல்லிற் 'பங்தி' என்பது 'பத்து' என்னும் பொருட்டு; இராவணனுக்குப் 'பங்தி கண்டன்' என்னும் பெயரிருத்த லறிக.

நூல் : பெரிய புராண வாராய்ச்சி (1924) பக்கம் 127

நூலாசிரியர் : வா. மகாதேவ முதலியார் (கிறித்தவ கலாசாலைத் தமிழாசிரியர்)



## சுப்பிரமணி - வெண்மணி

தந்தையின் சிறிய தாயாராகிய சண்முகத்தம்மாள் சில காரணங்களால் இக் குழந்தையினிடத்தில் பற்றுடையவளாய் சிரத்தையுடன் குழந்தையைப் பாதுகாத்து வளர்த்து வரிவாளாயினாள். இம்மைந்தனுக்குத் தந்தையின் தந்தையராகிய பேரணார் சுப்பிரமணி (வெண்மணி, என்னும் பிள்ளைத் திருநாமம் அமைந்தது.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி.செ. சுப்பிரமணியபிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924) பக். 4

நூலாசிரியர் : மு.பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை (திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழாசிரியர்)



## Unlimited Bank - மட்டிடப் பெறாத பணக்கூடம்

நம் நண்பர் பெரிது முயன்று செய்த இப் போது நலம் ஊருக்கும் நாட்டுக்கும் நன்மை தருவமன்றி அவர் தங் குடும்பத்துக்கும் நன்மை பயப்பதாயிற்று. நாளடைவில் நமது நண்பர் இந்நகரத்துச் சிறந்த செல்வர்களில் ஒருவராயினார். அப்பால் தாம் சொந்தத்தில் பணக்கூடம் ஒன்று அமைத்து வைக்கும் தகுதியுடைய ராயினார். 1087ம்ஞூ தமக்கு உற்ற நண்பராகிய திருவாளர் P.M. கைலாசம் பிள்ளையவர்களைத் துணைக்கொண்டு K.S. பாங்க் என்னும் பெயரால் மட்டிடப் பெறாத (Unlimited) பணக்கூடம் ஒன்றை அமைத்து வைத்தனர்.

மேற்படி நூல் : பக். 45



## Municipality - நகரப் பாதுகாப்புச் சங்கம்

இனி நமது நண்பரின் பொதுநல விருப்பும் உழைப்புங் கண்டறிந்த பல பொதுநலச் சங்கங்களில் இவர் உதவியை நனி விரும்பிக் கொண்டார்க்ள். திருநெல்வேலி நகரப் பாதுகாப்புச் சங்க (முன்சிப்பாலிட்டி)த்தில் நெடுங்காலம் அங்கத்தினர் (கவுன்சிலர்) ஆக இருந்து ஊரார் உவக்குமாறு உழைத்து வந்தார்.

மேற்படி நூல் : பக்கம் - 59



## உபகரணங்கள் துணைக்கருவிப் பொருள்

சேதுபதியவர்கள், மற்ற ஆடம்பரமான வரவேற்பு முதலியவை விரும்பிலரேனும், வைதீகமான சிவபூசை வழிபாட்டில் மிகப் பற்றுடையவர் என்பதும், அதனைச் சிறக்கச் செய்வதில் கருத்துடையவர் என்பதும் தெரிந்துகொண்ட நண்பர், அதற்குரிய துணைக் கருவிப் பொருளை (உபகரணங்களைச்) சிறப்பாக செய்து வைத்திருந்தார்.

மேற்படி நூல் : பக்கம் - 63



## பரமானந்தம் - பேரின்பம்

பக்தியிற் சிறந்த சேதுபதியவர்கள், திருக்கைலாசம் போல் தோன்றிய பூசை மடத்தின் அமைப்பும் சிறப்புங் கண்டு வியந்து பேரின்பத்தில்

(பரமானந்தத்தில்) மூழ்கினவராய் ஐம்புலனும் ஓர் புலனாக ஒடுங்கிய மனத்துடன் உள்ளமுருகிச் சிவ வழிபாடு செய்து முடித்தார்.

மேற்படி நூல் : பக்கம் - 64



## தருமசங்கடம் - அறவழியிடர்

நண்பர் தம்முடைய மூத்தமகனாகிய துரைசாமி பிள்ளைக்கு திருமண முயற்சி தொடங்குங்கால் இருதலையிடரில் அகப்படலுற்றார். ஆயினும் இது உலகத்தில் புதியதன்று. இடை இடையே நிகழ்வதொன்றாம்.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் திரு.செ. சுப்பிரமணிய பிள்ளை யவர்களின் சரித்திரச்சுருக்கம் (1924) ப.73

நூலாசிரியர் : மு.பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை (திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழாசிரியர்)



## சங்கீத வித்வான்கள் - இசைப் புலவர்கள்

தற்கால வழக்கிலுள்ள சுமார் 40 சாதாரண இராகங்களை இனங்கண்டு பெயர் சொல்லத் தெரிந்தவர். மேலும் பாட்டுக் கச்சேரிகளை ஆதரிப்பதுண்டு. பாடகர்களின் தராதரங்களைச் சரியாய் மதிக்க வல்லவர். நாக சுரங்களையும் நன்றாய்க் கேட்டுச் சுவையுணர்வார். ஆகையால் இசைப்புலவர்களும் (சங்கீத வித்வான்களும்) இவர் தம் நட்பையும் ஆதரவையும் பெரிதும் விரும்பினார்கள்.

மேற்படி நூல் : பக். 73



## சம்மெரி வியாச்சியம் - தொடுத்துரை வழக்கு
## கிரிமினல் கேஸ் - தண்ட வழக்கு

அக்குடிகள் முந்திய ஏற்பாட்டின்படி அறுப்புக்களத்தில் வாரம் பிரித்தளக்க வேண்டிய நெல் தீர்வையை முறைப்படி செலுத்தாமலும், அதனால் வருங்கேடு இன்னதென்றறியாமலும் ஒழுங்கீனமாய் நடக்கத் துணிந்து விட்டார்கள். கலவரம் செய்யவும் தொடங்கினார்கள். ஆகையால் குடிகளுக்கும் ஜமீனுக்கும் தொடுத்துரை வழக்கும் (சம்மெரி வியாச்சியம்) தண்ட வழக்கும் (கிரிமினல் கேசும்) ஏற்பட்டன.

மேற்படி நூல் : பக். 81.



## விசேஷங்கள் - சிறப்புச் செயல்கள்

இன்னும் ஜமீன் குடிகளில் வீடுகளில் நடக்கும் நன்மை தீமைகளாகிய சிறப்புச் செயல் (விசேஷங்கள்)களுக்கு அவரவர்கள் தகுதிக்கேற்ப நன்கொடை அளித்து வரும்படி ஏற்பாடு செய்தார்.

மேற்படி நூல் : பக்கம் - 83



## Appeal - அப்பீல் மேல்வழக்கு

## Preview Council - பேராச் சங்கம்

அப்பால் சென்னை உயர்தர நியாயமன்றில் (ஜில்லாக்கோர்ட்டில்) ஜமீன் பொருட்டாக மேல் வழக் (அப்பீல்) கிட்டதில் ஷை மலைகளின் முழு உரிமையும் ஜமீனுக்குத்தான் உண்டென்றும் சர்க்காருக்கு எவ்வித உரிமையும் கிடையாதென்றும் உறுதி கூறப்பட்டது (சித்தாந்தம் செய்யப்பட்டது.) அப்பால் சர்க்கார் பொருட்டாக, பேராச் சங்கத்தில் (பிரிவி கவுன்சில்) எதிர்வாதம் செய்யப்பட்டது.

மேற்படி நூல் : பக்கம் - 86



## சர்வ சுதந்தர பாத்தியம் - முழு உரிமை

விசாரணை முடிவில், வழக்கிடப்பட்ட மலைகள், நீடித்த காலமாகச் சமீன் ஆளுகையில் இருந்து வந்திருக்கிறதென்றும் ஆனால் முழு உரிமை (சர்வ சுதந்தர பாத்தியம்) ஜமீனுக்குக் கிடையாதென்றும், முழு உரிமை சர்க்காருக்குத்தான் உண்டென்றும், சர்க்காருக்குட்பட்டுச் சில உரிமையுடன் ஜமீன் அனுபவிக்கலாம் என்றும் சில்லா நீதிபதியால் தீர்ப்புச் சொல்லப்பட்டது.

மேற்படி நூல் : பக்கம் - 86



| | | |
|---|---|---|
| Major | - | தகுந்த வயது வந்தவர்கள் |
| Minor | - | இளைஞர்கள் |
| Registrar | - | பதிவாளர் |

அவருடைய பிள்ளைகளில் தகுந்த வயது வந்தவர்களும் (மேஜர், இளைஞர்களும் (மைனர்) இவர்களெல்லாரும் நல்ல குணமுடையவராகையால்

தந்தையின் கையெழுத்துக்குறையை பொருட்படுத்தாமல் தந்தையாரின் நோக்கத்தின்படி நடப்பதே தங்கள் கடமையென்றுணர்ந்து, பதிவாளர் (ரிஜிஸ்டரார்) முன்பு, மரண சாதனத்தை ஒற்றுமையுடன் ஒப்புக்கொண்டு பதிவு செய்து கொண்டார்கள்.

மேற்படி நூல் : பக்கம் - 75



## அபிப்பிராயம் - கருத்துகள்

இனி, நான் நேரில் ஒருவாறு தெரிந்து வைத்திருந்த காரியங்களில் அநுமான வகையும் சேர்த்து முற்றுற எழுதி வெளியிட்டிருக்கிற என் கருத்துகள் (அபிப்பிராயம்) சரிதானா என்று தெரிந்து கொள்ளும் பொருட்டு தலைவரோடு அவ்வக் காரியங்களில் தொடர்புற்றிருந்தோர் இடங்கள் தோறும் சென்று, அவரவர்க்கு உரிய பாகங்களை வாசித்துக் காட்டியபோது அன்னோர் முற்றிலும் சரி என்று ஒப்புக்கொண்டு என்னை மகிழ்வித்தார்கள்.

மேற்படி நூல் : பக்கம் - 4



## புத்திக்கூர்மை - அறிவு நுணுக்கம்

பேதை பெதும்பைப் பருவங்களில் அறிமுகமில்லாத அந்தப்புரக் கன்னிகையான ஒரு பெண்ணினுடைய குலநல முதலியவைகளைத் தெரிந்து கொள்ளுதல் எளிதன்று. ஆயினும் குலநலம் உடல் நலம் அழகு படிப்பு பணம் முதலிய காரியங்களை பிறர் பலர் மூலமாய் வெவ்வேறான வழிகளில் முயன்றால் பெரும்பாலும் உண்மை தெரிந்து கொள்ளக்கூடும். ஆனால் வீடடங்கி அந்தப் புரத்திலிருக்கும் கன்னிகையின் குணம் செயல்களையும் அறிவு நுணுக்க (புத்திக்கூர்மை)த்தையும் பற்றி பிறர் மூலமாய்த் தெரிந்து கொள்ளுவது அரிதினும் அரிதேயாம்.

மேற்படி நூல் : பக்கம் - 10, 11



| | | |
|---|---|---|
| சங்கீத ஞானம் | – | பண்ணறிவு; |
| சாரீரம் | – | ஒலிநயம் |

நமது நண்பருக்கு இயல்பாகவே பண்ணறிவுண்டு. சிறிது கேள்விப் பயிற்சியுமுண்டு. ஆனால் ஒலிநயம் (சாரீரம்) இல்லை. ஆயினும் அவர் பாக்களை வாசிக்கும் போதெல்லாம் சந்தத்தைத் தழுவியே வாசிப்பது பழக்கம்.

மேற்படி நூல் : பக்கம் - 73



## பிரமாணம் - மேற்கோள்

பிரிந்திருக்க வொண்ணாத இரு பொருள்களில் ஒன்றை உண்மையான நெறியில் ஆராய்ந்தறியப் புகுந்த இடத்தில் மற்றதையும் ஒருவாற்றேனும் அறியாதிருக்க முடியாது. சிறிதேனும் அறியும்படி இயல்பாகவே நேரிடும். சீவனும் சிவனும் பிரிந்திருப்பதில்லை என்பதற்கு மேற்கோள் (பிரமாணங்கள்)

உலகமும் பல்லுயிரும் ஒன்றி நிறைந்தோங்கி
இலகும் சிவன் எம்மிறை

மேற்படி நூல் : பக்கங்கள் - 33, 34



## குமாஸ்தா - எழுத்தாளர்

இவர், இல்வாழ்க்கையில் திரும்பத் திரும்ப தாரமிழத்தலும், மறு தார மடை_தலும் ஆகிய காரியங்களால் பலவாறு துன்பப்பட்டவரெனினும், இன்னொரு வகையில் சிறந்த பாக்கியவானாயிருந்தார். நண்பர் நியாயவாதியாயிருந்த நிலைமைக்கேற்ற உற்ற நற்றுணையாகவும், எழுத்தாளராகவும் (குமாஸ்தா) அமைந்துள்ள ஒருவரே தொடக்கத்திலிருந்து நண்பரின் வாழ்நாள் முடிவுரை உதவியாக இருந்தார்.

மேற்படி நூல் : பக்கம் - 23



## Treasurer - பொருளாளர்

சுமார் 18 ஸு்க்குமுன் பாளையங்கோட்டை நூற்றாண்டு மண்டபத்தில் (சென்றி நெறி ஹாலில்) மாகாண மகாநாடு கூடியது. அதில் கைத்தொழிற் பொருட் காட்சியும் நடைபெற்றது. திருநெல்வேலி சில்லா, சிக்கனத்திற்குப் பேர்ப்போன தாகையால், பொருட்காட்சி முதலிய காரியங்களுக்குரிய முன் முயற்சியில், நமது நண்பரைப் பொருளாளர் (Treasurer) ஆக நியமித்துக் கொண்டால் குறித்த காரியங்கள் எவ்வழியினும் இடர்ப்பாடின்றி இனிது முடியும் என்று சிலர் தூண்டினார்கள்.

மேற்படி நூல் : பக். 61, 62.



## Manager - பொறுப்பாளர்

கல்விச் சாலைகளில் புதிதாய் வந்த ஆசிரியரை சில மாணவர்கள் ஆழம் பார்க்கத் துணிவது போல், புதிதாகப் பட்டத்துக்கு வந்திருக்கிற ஜமீன்தாரவர்களையும் உதவியாக வந்திருக்கும் புதிய பொறுப்பாளரை (மானேஜர்) யும் குடிகள் பதம் பார்க்க முயன்றார்கள்.

மேற்படி நூல் : பக்கம் - 81



## Records - ஆதரவுகள்

## Circular - சுற்றுத்தரவு

இந்த மலை வழக்கை மலையினும் பெரிதென்று சொல்வது பெரிதும் தகும். வேலியே பயிரை மேய்வதுபோல், இவ்வழக்கில் துரைத்தனத்தார் எதிரியாயிருந்து மன்றி இடையூறாகவும் இருந்தார்கள். ஷை வழக்குக்கு வேண்டும் ஆதரவுகள் (Records) பலவற்றிற்கும் அரசாட்சியாரிடம் (ஆபீசுகளில் இருந்து நகல்கள் எடுக்க வேண்டியதாயிருந்தது. ஜமீன்தாரவர்கள், வகையரா கேட்கும் நகல்கள் கொடுக்கக் கூடாதென்று சில்லாக் கலைக்டர் பொதுவான ஒரு சுற்றுத்தரவு (Circular) அனுப்பியிருந்தபடியால், சர்க்கார் கட்சிக்கு மாறான ஆதரவுகள் கிடைப்பது அரிதினும் அரிதாயிற்று.

மேற்படி நூல் : பக்கம் - 88



## Tutor - தனியாசிரியர்

அப்பால் 17வது வயதில் முதலாவதாக 17 ரூபாச் சம்பளத்தில் தாம் படித்த கல்விச் சாலையிலேயே கீழ் வகுப்புகளில் ஒன்றிற்கு ஆசிரியராக நியமிக்கப் பெற்றார். அதில் சிறிது காலம் சென்றபின் சிங்கம்பட்டி ஜமீனைச் சேர்ந்த சொத்துக்கள் சர்க்கார் மேற்பார்வையில் இருந்து வருகையில், ஷைஜமீன் மைனர் துரையவர்களுக்குத் தனியாசிரியராக (Tutor) நியமிக்கப் பெற்றார்.

மேற்படி நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி.செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924), பக்கம்

நூலாசிரியர் : மு.பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை (திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழாசிரியர்)



## Professors & Lecture - சொற்பெருக்காசிரியர்கள்

பரீக்ஷைகளில் தேறி வேலை சம்பாதித்துக் கொண்டவர்களில் சிலர், முக்கியமாகக் கல்லூரிகளில் அமர்ந்திருக்கும் சொற்பெருக்காசிரியர்கள் (Professors & Lecturers) நல்ல சௌகரியம் வாய்ந்த நிலைமையில் வாழ்நாளை யாரம்பிக்கின்றனர். அவர்கள்தாம் ஆங்கிலத்தில் கற்றதையும் தமது ஆராய்ச்சியின் பயனையும் இதரர்களுக்கு உபயோகப்படுமாறு தேச பாஷைகளில் தெரிவிக்க வேண்டிய சாவகாசமும் பொருளும் அவர்களுக்குண்டென்று தோன்றுகின்றது. ஆனால் அவர்களில் பெரும்பான்மையோர் இத்தகைய ஊக்கமும் கவலையும் மேற்கொள்வதில்லை. எஞ்சிய சிலர் ஆங்கிலத்தில்தான் தம்முடைய கல்வித் தேர்ச்சியைக் காட்ட வேண்டும் என்று அபிப்பிராயப்படுகின்றனர்.

நூல் : தமிழ்நூற் பெருக்கம் (1924) பக்கம் - 18
நூலாசிரியர் : வை. சூரியநாராயண சாஸ்திரி, எம்.ஏ.,எல்.டி.,



| | | |
|---|---|---|
| Hair Pin | – | தலைமயிர் ஊசி |
| Nail Brush | – | நகக்குச்சு |
| Mons Veniris | – | அல்குலின் மேடு |
| Labia Majora | – | அல்குலின் பெரிய உதடுகள் |
| Abortion | – | கருவழிவு |
| Stop Cork | – | அடைப்புக்குழாய் |
| Cancer | – | பிளவைக் கட்டி |

நூல் : மருத்துவ மாணாக்கியர்களுக்கு உபயோகமான கைப்புத்தகம் (1924)
நூலாசிரியர் : கோ.கி. மதுசூதன் ராவ் (மதராஸ் கவர்ன்மெண்ட் பிரசவ வைத்தியசாலையில் மருத்துவ மாணாக்கியர்களின் உபாத்தியாயர்)



## Wrist Watch - மணிக்கட்டு கெடியாரம்

நல்லொழுக்கம் நாட்டிலில்லை. சூதே சொந்தமாயிற்று. வாதே வழக்கமாயிற்று. தீதே தேடலாயிற்று சட்டையுடன் சாப்பிடுதலே சகஜமாயிற்று. அரைக்கை சட்டை அபரிமிதமாயிற்று. மணிக்கட்டு கெடியாரமே ரிஸ்டுவாச்சே (Wrist Watch) பெஸ்ட்வாட்ச் (Best Watch) சாயிற்று.

நூல் : தமிழ்க் கல்வி (1924) பக்கம் 66
நூலாசிரியர் : மணத்தட்டை. எஸ். துரைசாமி அய்யர்



| | | |
|---|---|---|
| அவகாசம் | – | இயைந்த காலம் |
| அவதரித்தல் | – | பிறத்தல் |
| ஆராதனை | – | வழிபாடு |
| வாகனம் | – | ஊர்தி |
| சரசுவதி | – | சொற்கிறைவி |
| சரசுவதி | – | பனுவலாட்டி |
| இரத்தம் | – | புண்ணீர் |
| பிரசவ வீடு | – | மகப்பெறும் இல்லம் |
| விவாகச் செயல் | – | மணவினை |
| விவாகச் சிறப்பு | – | மணவிழா |
| ஆகாய வாணி | – | விட்புலச் சொல் |

நூல் : உதயண சரிதம் (1924)
மொழி பெயர்ப்பு : பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்.



## கோஹினோர் - ஒளிமலை

தென்னிந்தியாவில் வஜ்ரகருவூர் என்னும் ஒரு க்ராமம் உண்டு. அப்பெயர், வைரக்கற்களைத் தன் வயிற்றுள் அடக்கியிருக்கும் ஊர் என்று பொருள்படும். அவ்வூரின் சுற்றுப்புறமெங்கும் பண்டை நாளில் வைரக்கற்கள் புதைந்திருந்த சுரங்கங்கள் பல இருந்தன.

ஆப்பிரிக்கா அமெரிக்கா முதலிய கண்டங்களில் வைரக்கனிகள் கண்டுபிடிக்கப்படு முன்னர் வைரக்கற்களுக்காக உலகெங்கும் பேர்பெற்றது இவ்வூர்தான்.

மொஹலாய அரசர்கள் வீற்றிருந்ததும், விலைமதிக்க முடியாதபடி சிறந்து விளங்கியதுமான மயிலாஸனத்தின் மேலிருந்த வைர மணிகளெல்லாம் இங்கிருந்து போனவைகளே. இப்போது இங்க்லாந்து அரசர் முடியில் அணிபெறத் திவ்விய ஒளி வீசும் கோஹினோர் அல்லது 'ஒளிமலை' எனப்படும் உயர்தர வைரமணியும், இவ்வூரில் முதன்முதல் அகப்பட்டு, பின் ஆப்கானியர் சீக்கியர் முதலியவர் கைமாறி, கடைசியில் ஆங்கிலேயர் கைப்பட்டது.

நூல் : பத்மினி (1924); பக்.41,42.
நூலாசிரியர் : வே. முத்துஸாமி ஐயர், எம்.ஏ., எல்.டி.,
(சென்னைத் தமிழர் கல்விச் சங்கத்தின் அங்கத்தினர்)



## ருத்திர பூமி - சுடுகாடு

கல்லாதார் முகம் ருத்திரபூமி (சுடுகாடு)யை ஒக்குமெனவும், கல்லாதார் உருவம் மரத்துக் கொம்பெனவும், கல்லாதார் கண்கள் இரண்டும் புண்களை யொக்குமெனவும், கற்றார் சபையில், கல்லாதார் சுவானத்துக் கொப்பாவார் எனவும், கல்லாதார் உடம்பு பாழ்நிலத்தை யொக்குமெனவும் அறிஞர் கூறியிருக்கின்ற 'தனக்குப் பாழ் கற்றறிவில்லா உடம்பு' என்பதனாலு மறிக.

நூல் : தமிழ்க் கல்வி (1924) பக்கம் 96
நூலாசிரியர் : மணத்தட்டை எஸ் துரைசாமி அய்யர்



## Liquor Amnii - முன்நீர், பனிநீர்

வாஸ்தவமாகவே கருப்பையானது கர்ப்ப காலத்தில் 20 நிமிஷத்திற்கொருதரம் சிறுத்துக் குறுகிப் பிற்பாடு தளர்ச்சியடையும் பிண்டம் சிதைந்து போகாமலிருப்பதற்காக அதைச் சுற்றிலும் ஓர்வகை நீர் ஏற்பட்டிருக்கிறது. அதை (Liquor Amnii) முன்நீர், பனிநீர் என்பார்கள்.

நூல் : மருத்துவ மாணாக்கியர்களுக்கு உபயோகமான கைப்புத்தகம் (1924) பக்கம் –5
நூலாசிரியர் : கோ.கி. மதுசூதன ராவ்
(மதராஸ் கவர்ன்மென்ட் பிரசவ வைத்திய சாலையில். மருத்துவ மாணாக்கியர்களின் உபாத்தியாயர்)



## Cells - கண்ணறை

கருத்தரித்த முட்டையானது அதிசீக்கிரமாய் வளர்ந்து அநேக விதங்களான நுண்ணிய கண்ணறைகளாக மாறுகிறது. பிண்டத்தைச் சுற்றிலும் நீருடன் மூடியிருக்கும் இரண்டு ஜவ்வுத் தோல்களுற் பத்தியாகின்றன. வெளித்தோலுக்கு 'கோரியன்' என்றும், உள் தோலுக்கு 'ஆம்னியன்' Amnion என்றும் பெயர்.

மேற்படி நூல் : பக்கம் - 4



## Budget - அரசிறை கணக்கு

நூல் : லோகமான்ய பாலகங்காதர திலக் (1924) பக்கம் : 69
நூலாசிரியர் : கிருஷ்ணஸ்வாமி சர்மா



## வியாக்ரபாதர் - புலிக்கால் முனிவர்

மழமுனி என்னும் இயற்பெயர் கொண்ட வியாக்ரபாத (புலிக்கான்) முனிவர்க்கும், வசிட்ட முனிவர் உடன் பிறந்தாளுக்கும் மகவாய்த் தோன்றிக் குழுவிப் பருவத்திற் பசிக்குப் பாற்கடல் பெற்ற உபமந்யு மாமுனிவர் பல்லாயிர முனிவரும், யோகியரும் தம்மைப் புடை சூழத் திருக்கைலை மலையின் தாழ்வரையின் கட்சிவத்யான பரராய்ச் சிவானந்த பலிதராய் எழுந்தருளியிருப்புழி அங்கு ஆயிரஞ் சூரியரொரு காலத்து உதித்தாற் போல்வதொரு பேரொளி தோன்றிற்று.

நூல் : பெரிய புராண வாராய்ச்சி (1924) பக்கம் : 2
நூலாசிரியர் : வா. மகாதேவ முதலியார்
(கிறித்தவ கலாசாலைத் தமிழாசிரியர்)



## நாயன் - வழிகாட்டி

அன்பின் பெருமை வலிமை பயன் இவை அங்கையினெல்லிபோல இனிதின் விளங்கவும், அற்புச் சுவை ததும்பி வழிந்தோங்கவும் ஏனைச் சுவைக ளாங்காங்குத் தோன்றவும் அமைந்த அறுபான் மூவர் நாயன்மார் அருஞ் சரிதை நூற்பொரு ளென்க. அடியார்கள் இப்புராணத்துள் நாயன்மா ரென்று வழங்கப் பெறுவர். 'நாயன்' என்னும் வடசொற்குப் பொருள் 'வழிகாட்டி' அல்லது நடத்துவோன் என்பது; வடமொழியில் 'கோநாய', 'அசுவநாய' முதலிய பிரயோகங்கள் இருத்தல் காண்க.

மேற்படி நூல் : பெரிய புராண வாராய்ச்சி (1924) பக்கம் 15



## உக்தவேதீசுவரர் - சொன்னவாறறிவார்

திருத்துருத்தி யென்னுந் திருப்பதியிற் பெருமான் வடமொழிப் பெயர் உக்தவேதீசுவரர் என்பது தமிழின் அதற்கு நேர் 'சொன்னவா றறிவார்' என்பது.

மேற்படி நூல் : பக்கம் - 52



## வியாச்சியம் - மன்றாட்டு வழக்கு

அதுவரை மாணவராயிருந்த மைனர் ஜமீன்தாரவர்களுக்கு தக்க பருவமாகிய வயது வந்தவுடனே அரசாங்கத்தார் ஜமீன் ஆட்சியை உரியவர்

இடத்தில் ஒப்பிக்கும்போது, சிங்கம்பட்டி மலை சம்பந்தமான மலை போன்ற மன்றாட்டு வழக்கை (வியாச்சியம்)யும் கூடவே ஒப்பித்தார்கள்.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி. செ. சுப்பிரமணிய பிள்ளை யவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924) பக்கம்-78
நூலாசிரியர் : மு. பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை



## Passport - வழிச்சீட்டு

ஸ்ரீ திலகர் சீர்திருத்த விஷயமாகப் பார்லிமெண்டார் சட்டமாக்குவதற்கு முன் இங்கிலாந்தில் பெரிய கிளர்ச்சி செய்து பொது சனங்களை எழுப்பி இந்தியாவுக்குச் சுய ஆட்சி கொடுக்கத் தொழில் கட்சி மெம்பர்களை விட்டு பார்லிமெண்ட் மகாசபையில் கேட்கும்படி செய்ய வேண்டுமென்ற எண்ணத்தைக் கொண்டு ஸ்ரீ திலகர், விபின சந்திர பாலருடனும் கேல்காருடனும் இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். அவர், சென்னைக்கு வந்து, சென்னையிலிருந்து ஸிலோன் சென்று, அங்கிருந்து நேரே செல்வதற்கு ஆயத்தமாயிருந்தார்.

சென்னையில், ஸ்ரீ திலகருக்குப் பெரிய ஊர்வலம் நடத்தப்பட்டது. பல்லாயிரம் பேர் கூடின ஒரு பெரிய மகா நாட்டில் ஸ்ரீ திலகர் இங்கிலாந்துக்குச் செல்லும் நோக்கத்தைப் பற்றிக் கூறினார். சென்னையை விட்டு ஸிலோன் போய் சேர்ந்து, கப்பல் பிரயாணஞ் செய்ய ஆயத்தமாயிருக்கையில், ஸ்ரீ திலகர் முதலானோர், செல்லக்கூடாதென்று வழிச்சீட்டு (passport) ரத்து செய்யப்பட்டது. இவ்வுத்திரவு இந்தியா கவரன் மெண்டார் செய்ததே.

நூல் : லோகமான்ய பாலகங்காதர திலகர் (1924) பக்கம் : 247
நூலாசிரியர் : கிருஷ்ணஸ்வாமி சர்மா



## Bank - பணக்கூடம்

சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலிச் சில்லாவில், துறைமுகப் பட்டணமாகிய தூத்துக்குடி ஒன்றைத் தவிர, வேறு எவ்விடத்திலேனும் பணக்கூட்டுத் தொழிற் சங்கம் என்பதே கிடையாது. காசுக்கடைக்காரரும், நாட்டுக்கோட்டைச் செட்டிமாரும், சில பெரும் பணக்காரர்களும் தனித்தனியே பணங்கொடுக்கல் வாங்கல் செய்வதுண்டு. ஆனால் பொது ஜனங்களுக்குப் போதுமான வசதிகள் ஏற்படாதிருந்தது. இது விஷயத்தில் சனங்களுக்குள்ள குறைகளை நீக்கும் பொருட்டும், பணமுடையார் பலரும் அப்பயனை நிரந்தரமாயடைய வேண்டியும், முதலில் இவர் (வக்கீல் பண்டாரம் பிள்ளை

என்னும்திருவாளர் தி.செ. சுப்பிரமணிய பிள்ளை) செய்த அரும் பெரும் முயற்சிகள் மிகவும் பாராட்டத்தக்கன.

உள்ளூரிலும் வெளியூரிலுமுள்ள பல தனவான்களிடத்திலும் தனித்தனியாகவும் கூட்டங்கூடியும் பேசி, திருநெல்வேலிக்கு பணக்கூடம் (பாங்க்) ஏற்படுத்த வேண்டிய அவசியத்தையும் அதனால் அடையக் கூடிய நற்பயன்களையும் ஒவ்வொருவரும், அறிந்துணரும்படி எடுத்துக் கூறிவந்தார்.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி.செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924) பக். 40,41.



## Bunglow - நல்லகம் கொலுவிருக்கை
## Durbar Hall - மண்டபம்

அரண்மனையின் பழைய கட்டிடங்கள் பண்டைக் காலத்து நாட்டுப்புறப் பாங்கில் அமைக்கப்பட்டிருந்த படியாலும் இக்காலத்துக்கு அது போதாத தாயிருந்தபடியாலும் நமது நண்பர் சில கட்டிடங்கள் அதிகமாய் வேண்டுமென்று கருதினார். ஜமீன்தாரவர்கள் உபயோகத்திற்கு ஒரு நல்லகமுமே (பங்களா), கலியாணமாலும், கொலுவிருக்கை மண்டபமும் (தர்பார் ஹால்), ஜமீன் அரசாட்சிக்குரிய பலதுறைவேலைகளும், தனித்தும் சேர்த்தும் நடைபெறுதற்குப் பொருத்தமான மாளிகையும் ஆகிய முக்கியமான மூன்று கட்டிடங்களையும் மென்மையாகக் கட்டுவித்தார்.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி.செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924) ப. 92

நூலாசிரியர் : மு.பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை (திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழாசிரியர்)



## உரையாடல் - சம்பாஷணை

இவர் உரையாடலில் (சம்பாஷண) ஆழ்ந்த கருத்துக்கள் அடங்கிக்கிடக்கும்; நுண்பொருள் நயம்பட விளங்கும்; சொன்னயம் சிறந்து துலங்கும். சமயத்துக் கேற்ற விநயமும், விகடமும் இயல்பாகவே வரும். புன்சிரிப்பிற் புலவராகவும், பெருஞ்சிரிப்பிற் பேராசிரியராகவும் இருந்தாலும், மிக விகடமாகப் பேசும்போதும், தான் முதலிற் சிரிப்பதில்லை. அப்பாற் சிரிப்பதும் அடக்கமாகவே யிருக்கும்.

மேற்படி நூல் : பக்கங்கள் - 27, 28



## பிரசங்கம் - விரிவுரை

ஒருநாள் மாலை 6 மணிக்கு ஒரு பெருங் கழகக் கூட்டத்தில் அரும்பொருள் ஒன்றைப் பற்றி ஓர் விரிவுரை (பிரசங்கம்) செய்ய உடம்பட்ட ஒரு நாவலர் அன்று பகலில் தம்முடம்புக்குரிய வசதிகளைக் கவனியாது அசட்டை செய்திருந்த படியால் அவர் பேசத் தொடங்கி முகவுரை முடியுமுன் அவருக்குத் தொண்டைப் புகைச்சல் வந்து மேற்பேச வொட்டாமல் தடுத்துவிட்டது.

மேற்படி நூல் : பக்கங்கள் : 37, 38



## Director - தலைமையோர்

தூத்துக்குடியில் சுதேசிக் கப்பற் கழகம் ஏற்பட்டிருந்த காலத்தில் நமது நண்பர் அதைத் தொடங்கினோர்க்கு வேண்டும் உதவிகளை நெல்லையிலிருந்து புரிந்து வந்தபடியாலும், பொதுவாக உலக நடையில் சிறந்த அநுபவமுடையவரா யிருந்தபடியானும், மேற்படி காரியங்களை நிகழ்த்தும் தலைமையோர் (டைரக்டர்)களில் இவரும் ஒருவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்.

மேற்படி நூல் : பக்கம் - 60



அரித்துவாரம் - சிங்கத்துளை

நூல் : பிரமானந்த நான்மணி மாலை (1924) பக்கம் : 13
நூலாசிரியர் : B.B. நாராயணசாமி நாயுடு (திருநெல்வேலி சிந்துபூந்துறை பென்சன் போலீஸ் இன்ஸ்பெக்டர்)



## வசன நடை - ஒழுக்கம்

பத்மினி பெயர்க்கிணங்க நல்லொழுக்கம் நன்கமைந்தது; (ஒழுக்கம்—வசனநடை என்பதும் ஒருபொருள்) எவர்க்கும் எளிதில் பொருள் விளக்கும் எழிலது; செந்தமிழணங்கின் கீர்த்தியைத் தெரிவிப்பது; நடந்தே நவில்வது.

நூல் : பத்மினி (1924) பக்கம் : 6
தலைப்பு : சில தமிழ் அபிப்பிராயங்கள்.
சொல் விளக்கம் : திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்து ஸ்வாமிகள்



## பிரஸவம் - பிள்ளைப்பேறு

பூர்ணமான பிண்டாண்டத்தில் (1) குழந்தை அல்லது பிண்டம், 2) குழந்தை மிதந்து கிடக்கும் பனிநீர், 3) பனிநீரையடக்கஞ் செய்து கொண்டிருக்கும் ஜவ்வுகள், 4) மாயை, கொப்பூழ் கொடி, இவைகளடங்கி யிருக்கின்றன. ஜனன வாய்க்காலின் வழியாய்ப் பிண்டாண்டமானது வெளியில் தள்ளும் சக்திகளால் வெளியாகும் விதானத்திற்குப் 'பிரஸவம்' அல்லது 'பிள்ளைப்பேறு' என்று சொல்லப்படும்.

நூல் : மருத்துவ மாணாக்கியர்களுக்கு உபயோகமான கைப்புத்தகம் (1924) பக்கம்., 15.
நூலாசிரியர் : கோ. கி. மதுசூதன ராவ்



## Typewriting - கையச்சு

கும்பகோணத்தில் முனிசிபாலிடியார் ஒரு சித்திர பாடசாலை வைத்திருக்கிறார்கள். அதில் சுமார் 100 பிள்ளைகள் உயர்ந்த சித்திர வேலை செய்யக் கற்றுக் கொள்ளுகிறார்கள். டைப்ரைட்டிங் என்ற கையச்சு வேலையில் பயில பல பாடசாலைகள் எங்குப் பார்த்தாலும் இருக்கின்றன.

நூல் : தஞ்சாவூர் ஜில்லாவின் வரலாறு (1924) பக்கம் : 87
நூலாசிரியர் : ஆர். விஸ்வநாத ஐயர்
(Assistant Govt., Model High School, Saidapet)



## கஸ்பா - அகநகர்

இவர் திருநெல்வேலி அக நகரிலே (கஸ்பா) கீழப் புதுத் தெருவிலே குடியிருப்புடையார். 'குப்ப குறிச்சிச் செல்லம்பிள்ளை' என்று இவர் பெயர் மிகச் சிறப்பாய் வழங்கிவரலாயிற்று.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி.செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924) பக்கம் - 2
நூலாசிரியர் : மு. பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை.



## மார்க்க சகாயர் - வழித்துணைவர்

தனபாலன் என்னும் வணிகற்குக் குதிரைச் சேவகனாய் வழித்துணை சென்றமையாற் றிருவிரிஞ்சைப் பெருமாற்கு 'மார்க்க சகாயர்' என்னுந் திருப்பெயர்

வழங்குதலின் அது நோக்கி ஈண்டு வழித்துணைகியுள்ளார் என்றிடத்திற்கேற்பக் கூறினா ரென்பாருமுளர்.

நூல் : பெரிய புராண வாராய்ச்சி (1924) பக்கம் : 84



## நியாயவாதி - வழக்கறிஞர்

முன் 'மேற்படிப்பு'யென்னும் 7—வது பிரிவில் கூறியபடி (பக்கம் 14) நமது நண்பர் சட்டப்பரீட்சையில் தேறி, வழக்கறிஞர் (நியாய வாதி) ஆன காலத்தில் ஜமீனைவிட்டுப் பிரிய நேரிடும் போலிருந்த சமயத்தில் ஆசிரியருக்கும் மாணவருக்குமுள்ள அன்பின் தகைமைக்கேற்ப இருவரும் பிரிந்தும் பிரியாதிருப்பதற்கு வேண்டியதற்குரிய ஏதுக்கள் திருவருளால் அமைந்துள்ளன என்பது இங்கு இப்பொழுது வெளியிடப்போகும் செய்திகளால் இனிது விளங்கும்.

நூல் : வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் திருவாளர் தி.செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் (1924 பக்கம்-78)



## ராஜ சம்பிரதாயம் - அரசர் வழக்கு

'நிலைபெற்ற உலகின்க ணுண்டாக மந்திரிகள் வழக்கு மொழிந்தீர்களென்றான்' என்றும், 'நிலைபெற்ற உலகின்க ணுண்டாக மொழிந்தீர்கள், இங்ஙனம் மொழிவது மந்திரிகளுக்கு வழக்கமென்றான்' என்றும் பொருள் கூறி மந்திரிகள் வழக்கு, என்றதனால் இஃது அரசர் வழக்கு அஃதாவது ராஜ சம்பிரதாயம் ஆகாதென்னுங் குறிப்புப் பொருளுங் கூறுப.

நூல் : பெரிய புராண வாராய்ச்சி (1924) பக்கம் : 94
நூலாசிரியர் : வா. மகாதேவ முதலியார்



## Novel நாவல் - புதுக்கதை (1925)

தமிழிலே ஆங்கில நுண்ணூல்களை மொழிபெயர்க்கவும், வடமொழியிலும் பிறமொழியிலுமுள்ள அரிய நூல்களை மொழி பெயர்க்கவும், தமிழ்நாட்டில் பல இடங்களிலுமுள்ள பல்வகைக் கலைத்துறைகளுக்குரிய ஏடுகளி யாவற்றையுஞ் சேர்த்து அவற்றை ஒத்துப் பார்த்து அச்சியற்றவும், தமிழிலே புதுக்கதை (நாவல்)களாகப் பிழையோடு எழுதப்படுகின்ற புத்தகங்களைத் திருத்தஞ் செய்யவும், பிழை மிக்கனவற்றைக் கண்டித்து

ஒதுக்கவும், தமிழில் இலக்கணம், சங்கநூல், நீதிநூல், பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள், சமயநூல், சோதிட நூல் நீதிநூல், மருத்துவநூல், யோகநூல், இசைநூல், கணக்கு நூல், ஓவியம், சிற்பம், முதலியவற்றைத் தனித்தனி செம்மையாக ஆராய்ச்சி செய்யவும், ஆங்கிலத்திலே யுள்ளபடி பலவகைப் பேரகராதிகள் அமைக்கவும் வேண்டிய நிலையங்கள் ஏற்படுகின்றவரை தமிழ் வளர்ச்சி செம்மையாக நடைபெற முடியாது.

வி. சங்கரலிங்கம்பிள்ளை

இதழ் : செந்தமிழ்ச் செல்வி
சிலம்பு 3 : பரல், 9. 1925 செப்டம்பர். பக்கம் - 493, 494



## ICE - நீர்கட்டி

ரூன்மீ௨ சத்தியநேசனில் பிரசுரிக்கப்பட்ட வைத்திய சாத்திரக் குறிப்புக்களைப் படித்துப் பார்த்தேன். அவற்றில் இலங்கையில் பல்வலியைக் குறித்துப் பேசப்பட்டிருக்கிறது. இந்த விசனத்துக்குரிய நோய் நம்மூரில் புதிதாக உற்பத்தியாகி விட்டது. இதற்குக் காரணம் (Ice) நீர்கட்டி பாவித்தலே. கொழும்பிலும் கண்டியிலும் தெருக்களிலும் வீடுவீடாகவும் ஒரு சதத்துக்கு வாங்கக்கூடிய (Ice Cream) வியாபாரிகள் திரிகிறார்கள். இந்தக் குளிர்ந்த தித்திப்பு குழந்தைகளுடைய பற்களை முதலாய் கெடுத்துப் போடுகிறது.

இதழ் : சத்தியநேசன் (1926-ஜூலை)
தொகுதி - 1; பகுதி - 7; பக்கம் - 280;
சொல்லாக்கம் : பிறாஞ்சீஸ்கு - சூ. அந்தோனி



## சொற்பொழிவு

சிவனடியார் திருக்கூட்டம்

இஃது

திருக் கற்குடிச் சிவனடியார் திருக்கூட்டத்தின் 5, 6, 7—வது ஆண்டுகளின் நிறைவு விழாவில் (இருக்தாட்சி ஸு ஆவணி மீ 9உ) தலைமை வகித்த பஞ்சாட்சரபுரம் உயர்திரு. வாலையானந்த சுவாமிகள் முன்னுரையாகச் செய்த சொற்பொழிவு.

சென்னை திருவல்லிக்கேணி சோல்டன் கம்பெனியாரால் அச்சிட்டு வெளியிடப் பெற்றது.

நூல் : சிவனடியார் திருக்கூட்டம் (1925) பக்கம் - 1



## பார்லிமெண்ட் - பாராளுமன்றம்

பாரதமாதாவின் திருத்தொண்டர்களுள் முதன்மையானவரும், தேச பக்தர்களுக்கெல்லாம் பெருங்குருவானவரும், நம் நாட்டுத் தலைவர்களுள் சிரோமணியென விளங்குபவருமாகிய ஸ்ரீமான் தாதாபாய் நௌரோஜி பாராளுமன்றத்தி (பார்லியமெண்டி)ற்கு ஓர் அபேட்சகராக நின்றார்.

| | | |
|---|---|---|
| நூல் | : | தேசபந்து விஜயம் (1925) பக்கம் - 11 |
| நூலாசிரியர் | : | ம. க. ஜயராம் நாயுடு |



## Cartoon - விநோதப்படம்

| | | |
|---|---|---|
| இதழ் | : | ஒற்றுமை (1925) தொகுதி IV, சஞ்சிகை 2, பக்கம் : மேலட்டை |
| இதழாசிரியர் | : | மு.ஏ. வீரபாகு பிள்ளை, பி.ஏ., எல்.டி., |



## சத்து - உள்பொருள் (1925)

சத்திலிருந்து ஒரு பொருள் தோன்றியதென்றால் அஃது அதனிடத்திருந்தே வந்ததென்றுதானே கொள்ள வேண்டும். இப்படி யொத்துக் கொண்டால் திரிபு என்பது பொய்யென்றுதான் ஏற்படும். அஃதாவது, ஒரு பொருள் மற்றொன்றாய் மாறுவதில்லை. உள்பொருள் (சத்து) எப்போதும் உள்பொருளே. ஆகவே நிலையானதும், ஒன்றின் பற்றுக்கோடற்றதும், திரிபற்றதுமாய பொருளொன்றே மெய்ப்பொருள்.

| | | |
|---|---|---|
| நூல் | : | ஞானபோதினி அல்லது சிவப்பிரகாசம் (1925) பக். 15, 16 |
| நூலாசிரியர் | : | சோழ. கந்த. சச்சிதானந்தனார் |



| | | |
|---|---|---|
| Watch | - | மணிக்கூடு |
| Latrine | - | மலசலக்கூடம் |
| dash | - | கீறல் |
| Ifen | - | இணைமொழிக்குறி |

| | | |
|---|---|---|
| நூல் | : | தற்கால தமிழ்ச் சொல்லகராதி (1925) |
| நூலாசிரியர் | : | திவான்பஹதூர் ச. பவானந்தம் பிள்ளை ஐ.எஸ்.ஓ., எப்.ஆர்.எச். எஸ். (லண்டன்), எம்.ஆர்.ஏ.எஸ். (லண்டன்) |



## சுயராஜ்யம் : உரிமை அரசாட்சி

1917ம் ஆண்டிற்கு முன்னரே பல ஆண்டுகளாக இந்தியாவிலுள்ள அரசியல் நிபுணர் அனைவரும் சுயராஜ்யம் அல்லது உரிமை அரசாட்சிக்காக மன்றாடி நின்றனர்.

நூல் : தேசபந்து விஜயம் (1925) பக்கம் - 29
நூலாசிரியர் : ம. க. ஜயராம் நாயுடு



## Mayor - தலைவர்

அந்நாளில், கல்கத்தா நகரபரிபாலன (முனிசிபல்) சபையின் தேர்தலில் சுயராஜ்ய கட்சியினரே வெற்றி பெற்றனர். இதுகாறும் சட்ட சபையில் பக்கத்துணையின்றி அல்லலுற்ற சுயராஜ்ய கட்சியினர், இப்பொழுது கல்கத்தா நகரபரிபாலன சபையின் தேர்தலில் எல்லாம் சுயராஜ்யமயமே யாக்கினர். அவ்வாறு வெற்றி பெற்ற சுயராஜ்ய கட்சியினர், தேசபந்து சித்த ரஞ்சன தாசரையே அந்தச் சபையின் தலைவ (மேய)ராகத் தேர்ந்தெடுத்தனர்.

நூல் : தேசபந்து விஜயம் (1925) பக்கம் - 86
நூலாசிரியர் : ம. க. ஜயராம் நாயுடு



## Skylights - வானவெளிச்சங்கள்

அந்த வீட்டின்மாடியில் நேர்த்தியான ஓர் அறை இருந்தது. அதில் சன்னல்களும் வானவெளிச்சங்களும் (Skylights) தேவையான மட்டும் அமைக்கப்பட்டிருந்த படியால் காற்றும் வெளிச்சமும் தட்டில்லாமல் வந்தன.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் 2 - வீரனின் வியாகுலம், பக்கம் - 9
நூலாசிரியர் : பாஸ்கர என். நாராயணய்யா, பி.ஏ., பி.எல்.,எல்.டி.,



## Sky Scrapers - ஆகாயச் சுறண்டிகள்

அத்தேசத்தின் கட்டிடங்களோ, மஹோன்னதமானவை. அவைகளில் அனேகம் ஆகாயச் சுறண்டிகள் (Sky-scrapers) என்ற பெருமையான பெயரைப் பெற்றவைகளாயிருந்தன. அதாவது, அவை கள் இருபத்தைந்து அல்லது முப்பது மெத்தைகள் வைத்துக் கட்டப்பட்டு, ஆகாயத்தையளாவி நின்றன.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் 3 - மேற்கரங்கச் செய்திகள், பக்கம் - 22



## Crescent City - பாதிமதிப் பட்டினம்

அன்று முழுதும் டாலாஸில் இருந்துவிட்டு, மறுநாள் புறப்பட்டு பாதிமதிப்பட்டினம் (Crescent city) என்னும் ந்யூ ஆர்லியாங் (New Orleans) துறைமுகத்தைப் போய்ச் சேர்ந்தார்கள். அதன் வியாபாரமும், ஏற்றுமதி இறக்குமதிகளும், ஜனாகாரமும் அளவிலாதிருந்தன. அதில் இரண்டு மூன்று தினங்கள் தாமதித்தார்கள். அதை விட்டுப் புறப்படுவதற்கு முதல் நாள் அங்குமொரு அதிசயத்தைக் கண்டார்கள்.

நூல் : நாகரீகப் போர் (1925) பக்கம் - 32



## Smelling Salt - முகருப்புக் குப்பி

அம்மையார் மூர்ச்சை போனதை ஸ்தயவ்ரதனும் அங்குள்ள மற்றவரும் கண்டு, அவளுக்கு மூர்ச்சை தெளிதற்குரிய சிகித்ஸைகளைச் செய்தார்கள். ஸத்யவ்ரதன் அன்று ஷோக்கில் வெளிக்கிளம்பியிருந்தானகையால், அவள் கையில் ஓர் முகருப்புக் குப்பியை வைத்திருந்தான். அதை அம்மையாரின் மூக்கில் காட்டவும், அம்மையா ரெழுந்திருந்து உட்கார்ந்தாள்.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் : 4 - மாயா மித்திரம், பக்கம் 46, 47



## Secondary Education - இரண்டாங் கல்வி
## University - பல்கலைக்கழகம்

நான் இரண்டாங் கல்வி கடந்து பல்கலைக் கழக முதல் வகுப்பைச் சேர்ந்த பின் எனக்கு விவாஹம் நடந்தது. வயதிலும், அழகிலும், படிப்பிலும், அந்தஸ்திலும் எனக்கு ஒப்பான ஓர் வாலிபனுக்கே நான் வாழ்க்கைப்பட்டேன்.

நூல் : நாகரீகப் போர் (ஓர் நவீனம்) (1925)
அதிகாரம் 7 - சக்தி போதம், பக்கம் - 65



## Treaty Ports - உடன்படிக்கைத் துறைமுகங்கள்

கீழ்நாட்டு உடன்படிக்கைத் துறைமுகங்களில் குறைந்தபக்ஷம் பத்து லக்ஷம் பெண்மக்கள் இவ்வீனத் தொழிலில் அமர்ந்திருக்கிறார்கள். இவ்வூழியத்தில் இவர்கட்கு ஒருவருடம் முதல் பத்து வருடம் வரையிலுந்தான் பிழைப்பு. இச்சாகமாட்டாப் பிழைப்புக்கு வருடந்தோறும் ஆயிரக்கணக்கில் பெண்கள் வேண்டப்படுகிறார்கள்.

நூல் : நாகரீகப் போர் (ஓர் நவீனம்) (1925)
அதிகாரம் 10 - குஹ்ய சந்தேசம், பக்கம் - 130



## Film - தகடு

நான் முன்னிருந்த விடத்திற்கு ரகசியமாகச் சென்றேன். அவ்விடத்தில் எனக்கு மிகவும் ஆபத்தான நண்பரொருவர் ஒரு விளம்பரச் சீட்டை என் கையில் கொடுத்தார். அதில் இந்தியன் சினிமாவில் 'துறவி' என்ற ஒரு காட்சி நடப்பதாகத் தெரிவித்திருந்தது. அது அவ்வூருக்குப் புதிய தகடு என்றும் போடப்பட்டிருந்தது. அதில் ஒரு பெண்ணுருப்படம் அச்சிட்டிருந்தது.

மேற்படி நூல் : அதிகாரம் 13 - கூடிப் பேசல், பக்கம் - 182



## Pocket Book - சட்டைப்பைப் புத்தகம்

ஸத்யவ்ரதன் அவனிடம் சில உல்லாச வார்த்தைகளைப் பேசிவிட்டுத் தன் அங்கியிலிருந்து சட்டைப்பைப் புத்தகத்தை (பாக்கெட் புத்தகத்தை) எடுத்து அதிலிருந்து 500 டாலருக்கு ஒரு செக்கைக் கிழித்து அவள் கையில் கொடுத்தான். அவள் முன்போலவே அதை வேண்டாம், வேண்டாம் என்று சொல்லிக் கையில் வாங்கி உடைக்குள் வைத்துக் கொண்டாள். ஸத்யவ்ரதன் விடைபெற்று வெளியேறினான்.

மேற்படி நூல் : அதிகாரம் 15 - திண்ணம் விடுதலை திண்ணம், பக்கம் - 201



## Monkey Screw - குரங்குத் திருகு

விளக்கைப் பிரதாப்ஸிங்கிடம்கொடுத்துவிட்டுத் தன் இடுப்பிலிருந்து ஓர் நீண்ட கயிற்றைக் கழற்றினாள். அது சுமார் நீளமிருக்கும். அதன் சுற்றளவு மிகவும் குறைவாதலால், அது அதிகக் கனமாயாவது அதிக இடத்தை யடைத்துக் கொண்டாவது இருக்கவில்லை. மெல்லிய கம்பிகளாற் செய்யப்பட்ட கயிறாகையால், அறுந்து போகாதபடி பலமாயிருந்தது. கயிற்றை நீட்டி வைத்துக்கொண்டு, தன் ஜோப்பிலிருந்து பெட்டி போன்ற ஓர் இயந்திரத்தை எடுத்துக் கயிற்றின் ஒரு நுனியை அதில் இசைத்தாள். மற்றொரு நுனியில் குரங்குத் திருகு போன்ற பற்களுடன் கூடிய சிறு பிடியொன்றிருந்தது.

இந்த நுனியைத் தவிர கயிற்றின் மற்றெல்லாப் பாகங்களையும் பெட்டிக்குள் அடங்கும்படி பெட்டியின் வெளியே இருந்த ஒரு பிடியைச் சுற்றி உள்ளே இழுத்தாள்.

மேற்படி நூல் : அதிகாரம் 16 - ஸந்நேகந் தெளிதல், பக்கம் - 213



## அங்காத்தல் - வாய்திறத்தல் (1925)

திருக்குறள்

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவான் முதற்றே யுலகு

எழுத்துக்கள் அங்காத்தலை (வாய் திறத்தலை) முதற்காரணமாக வுடைமைபோல உலகம் முதல்வனை முதற்காரணமாக வுடையது.

நூல் : ஞானபோதினி அல்லது சிவப்பிரகாசம் (1925) பக்கம் 13
நூலாசிரியர் : சோழ. கந்த. சச்சிதானந்தனார்.



## ஆங்கில மொழிச் சொற்கள்

சாக் – சீமைச் சுண்ணாம்பு
ஆப்ஜக்ட் லெஸன் – பொருட் பாடம்
காம்பஸ் – திசையறி கருவி

நூல் : தற்கால தமிழ்ச்சொல்லகராதி (1925)
நூலாசிரியர் : திவான்பஹதூர் ச. பவானந்தம் பிள்ளை



## உருதுமொழிச் சொற்கள்

| | | |
|---|---|---|
| கம்மி | – | குறைவு |
| சிபாரிசு | – | தகவுரை |
| டோபிகானா | – | வண்ணான் சாவடி |
| ஷராய் | – | காற்சட்டை |



## Visting Card - காணும் சீட்டு

ஸ்ரீமதி, காமா என்ற அம்மையாரின் நட்பு சிறிது காலத்திற்குள் ஸ்ரீமான் ஐயருக்குக் கிடைத்தது. நாளுக்கு நாள் அவர்களது நட்பு அதிகமாகிக் கொண்டே வந்தது. பிறகு ஐயர் சிலகாலம் பாரீஸ் நகரிலிருந்து பின்னர் ரோமாபுரி, ஜெர்மனி, முதலிய இடங்களுக்குச் சென்று துருக்கி தேசத்தின் தலைநகரான கான்ஸ்தாந்தி நோபிள் வந்தார். அங்கிருந்து அவர் ஒரு பக்கிரி வேடந்தாங்கி இந்தியாவுக்குச் செல்லும் கப்பலில் ஏறி ஜபமாலையுடன் ‘அல்லாஹோ அக்பர்’ என்று அடிக்கடி கூறிக்கொண்டு முகம்மதியர்களைப் போல் கப்பலில் ஒவ்வொரு நாளும் ஆறுதடவை கடவுளைத் தொழுது கொண்டு எகிப்து தேசத்தின் துறைமுகப் பட்டினமான கெய்ரோ நகரத்திற்கு வந்து சேர்ந்தார்.

அங்கே அவர் ஒரு துருக்கியப் பெயரை விஸிடிங் கார்டுகளில் (காணும் சீட்டு) அச்சடித்துக் கொண்டு வழியில் தம்மைப் பற்றிக் கேட்பவர்க்கெல்லாம் அந்தச் சீட்டில் ஒன்றைக் கொடுத்துத் தாம் கல்கத்தாவில் ஒரு பெரிய வியாபாரி என்று சொல்லிக் கொண்டு இலங்கைத் தீவின் பிரபல துறைமுகப் பட்டினமான கொழும்பு வந்து சேர்ந்தார்.

கட்டுரை : உத்தம வீரர்–வ.வே.சு. ஐயர்
கட்டுரையாசிரியர்: கே.எஸ். மணியன்

இதழ் : பாலவிநோதினி
தொகுதி 7 : பகுதி 11-12 நவம்பர், டிஸம்பர் 1925 பக்கம் - 324



## Lift - தூக்கி

ஸத்யவ்ரதன் மறுபடி யவளுக்குத் தைரியத்தைச் சொல்லிவிட்டுத் தூக்கி வழியே கீழே இறங்கினான். அவன் கீழே வந்த பொழுதும் அம்மாள் மறுநாள் வேலையில் உச்சித்தலைவரை மூழ்கியிருந்தாள்.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் : 15 திண்ணம் விடுதலை திண்ணம், பக்கம் - 201
நூலாசிரியர் : பாஸ்கர என். நாராயணய்யா,



## Introduction - முதலறிவு

இதற்கு மத்தியில், சனிக்கிழமை பொழுதடைந்ததும் ஸ்த்யவ்ரதன் பாட்டம் அம்மையிடம் சொன்னப் பிரகாரமே இரண்டு போலிப் பெண்களை அழைத்துக் கொண்டு அவள் மாளிகைக்குச் சென்றான். பெண்கள் முன்னேற்பாட்டின்படி வெவ்வேறிடத்திற்கு அனுப்பப்பட்டார்கள். சற்று நேரமானதும் சாமியாரும் வந்து சேர்ந்தார். ஸத்யவ்ரதனைக் கண்டு சற்று திகைப்பது போல் நின்றார். இருவருக்கும் பாட்டம் அம்மை முதலறிவு (Introduction) செய்து வைத்தாள். பிறகு, சாமியாரைக் கொஞ்ச தூரத்திற்கப்பால் அழைத்துச் சென்று, ஸ்த்யவ்ரதனிடம் சொன்னது போல் அவரும் அன்றிரவு தனக்குத் துணையாக இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டாள்.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் 20 - மாயாமித்திரம் மறைதல், பக்கம் - 266



## Wig - மயிர்த்தொப்பி

கைதிகளுக்குள் அதிகக் கலவரை செய்யும் வகுப்பினர் ஒருவருண்டு. அவர்களை 'மேல் காற்றுகள்' என்பார்கள். அவர்களெல்லாம் தங்கள் உடம்பில் பச்சை குத்திக் கொள்வார்கள். 'துன்பக் குழந்தை, தோற்கப்பட்டாலும் ஆளப்படவில்லை,' 'கடவுளுமில்லை, எஜமானுவில்லை' என்ற வாக்கியங்கள் அவர்கள் சரீரத்தில் பற்பல விடங்களில் எழுதப்பட்டிருக்கும். வழுக்கு மண்டையுடைய கைதியின் தலையில் 'மயிர்த்தொப்பி' வரைந்திருக்கும். முழுக்குருடன் கண்கள் மேல் மூக்குக் கண்ணாடி குத்தி யிருக்கும்.

இன்னொருவன் மார்பில் 'கண்ணிய ஸைன்யம்'(Legion of Honour) என்ற பிருது பச்சையில் விளங்கிற்று. அதிசயப் பேர்வழிகள் இதில் கூடியிருக்கிறார்கள்.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் 18 - படையெழுச்சி, பக்கம் - 240



## பாட்டைசாரி - வழிப்போக்கர்

'இனி என் காதலியிருந்தென்ன? இறந்தென்ன? இனி நான் முன்போலின்றித் துறவியானேன். ஆகையால், இனி நான் வீட்டுக்குள் இருந்தாலென்ன? வெளியிலிருந்தாலென்ன? என்று ஒரு பாட்டை சாரி (வழிப்போக்கன்) யோசித்துப் பார்த்துச் சொன்னான்.

நூல் : பர்த்ருஹரி சிங்கார சதகம் உரை (1925)
5-வது அதிகாரம், போலித் துறவு, பக்கம். 31
தெளிபொருள்
விளக்க உரை : தமிழ்ப் பண்டிதர் ம. மாணிக்க வாசகம் பிள்ளை



## Sofa - சாய்மான மஞ்சம்

நேர்த்தியான மூங்கிற்பாயொன்று தரையில் விரித்திருந்தது. அதன் மேல் கித்தான் நாற்காலி ஓரிடத்திலும், சாய்மான மஞ்சம் (Sofa) மற்றோரிடத்திலும் வைக்கப்பட்டிருந்தன.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் 2 - வீரனின் வியாகுலம், பக்கம்-9
நூலாசிரியர் : பாஸ்கர என். நாராயணய்யா, பி.ஏ., பி.எல்., எல்.டி.,



## Balcony - உயர்நிலைப்படி

கொட்டகையையடைந்ததும் டிக்கெட்டு விவரங்களை விசாரித்தான். இரண்டு டாலர் – அல்லது சுமார் ஏழு ரூபா – கொடுத்தால் எல்லாவற்றிலும் உயர்ந்ததான பாக்ஸ் (Box) அல்லது பெட்டி என்ற ஆஸனம் கிடைக்குமென்று இங்குள்ளவர்கள் சொன்னார்கள். பணப்பையைத்திறந்து பார்த்தான். அதில் ஐந்து டாலர்களிருந்தன. அவன்மனம் ஷோக்கில் நிலைத்திருந்தபடியால் பெட்டி டிக்கெட்டையே வாங்கிக்கொண்டு உள்ளே சென்று உயர்நிலைப் (Balcony) படியேறி, ஒரு பாக்ஸில் போய் உட்கார்ந்தான்.

நூல் : நாகரீகப் போர் (1925)
அதிகாரம் : 4 - மாயா மித்திரம், பக்கம் - 38
நூலாசிரியர் : பாஸ்கர என். நாராயணய்யா, பி.ஏ., பி.எல்., எல்.டி.,



## Voters - வாக்காளிகள்

இனி அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தைக் கவனிப்போமாக. ஒவ்வொரு கிராமத்தின் பிரிவினைகளிலுள்ள முக்கிய இடத்தில் ஒரு பானை வைக்கப்பட்டிருந்தது. அது உண்டியல் போல் சிறிய துவாரத்தை யுடையதாயிருந்தது. அந்தத் துவாரத்தின் வழியாய் பனை ஓலைச் சீட்டுகள் போட இடமிருந்தது. தேர்ந்தெடுக்கும் மனிதர்கள் (ஓட்டர்கள் வாக்காளிகள்) பனை ஓலைச்சீட்டில் பேர் எழுதிப் போட்ட பின்னர் அந்தப் பானையிலுள்ள சீட்டுகள் மகாஜன சபைகள் கூடுமிடத்தில் .வேறொரு காலிப்பானையில் குலுக்கிப் போடப்பட்டன.

நூல் : நமது பரதகண்டம் (1926) இரண்டாம் பாகம்,
அத் - 3. சரு - 6, தமிழகத்தின் நாகரிகம் - பக்கம் - 93
நூலாசிரியர் : வை. சூரியநாராயண சாஸ்திரி, M.A., L.T.,



## Supreme Bliss - அறிவியப்பு

மனமென்பது சார்போத மெனப்படும். ஏனெனில் மனம் எதைப்பார்க்கிறதோ, அதன் சார்பாய் விடுதல். இங்ஙனம் மனமென்பது காற்றென்றும் விவேக மென்பது அனலென்றும் வியாபக அறிவென்பது சுத்த ஆகாயமென்றலுமாம். உன்னுகின்ற தொழிலையுடைய மனம் காற்றுருவாய் நின்று, தீர்க்க சிந்தயையில் அனல் வடிவாகி விவேகமெனப் பேர் வகித்து வியாபக வடிவாய் சுத்த சாதக நிலையில் தன் வன்மை குன்றி, உலக நாட்டமிழந்து காற்றுக்குமேல் மிருதுவான தன்மையையடைந்திருக்குந் தருவாயில், சுத்த சாந்த உஷ்ணந் தோன்றி இயற்கை வடிவாகி சுயம்பிரகாசமாகி எக்காலத்தும் அழிவில்லாததாய் விளங்கிக்கொண்டிருக்கின்ற உண்மை நிலையெதுவோ அதுவே அறிவியப்பாம்.

நூல் : அருள்சிவம் (1926)
6 அறிவியப்பு, பக்கங்கள் - 31, 32
நூலாசிரியர் : திரு. சாம்பசிவம்



## Self Realization - தனிநிலை இயல்பு

தனி யென்பது மூன்று அவத்தைகளையும் நன்று விசாரித்து வாதனா வசத்தில் வருகிற விருத்தியைக் களைந்து அவ்விருத்திகள் அடக்கத் துருத்திபேல ஊது மூச்சை ஓரிட மமர்த்தி யூன்றி நிற்றலே சிவயோக நிலை.

தனியென்பது சுத்த சித்து நானென்ற திடத் தீர்மானம். நானே நீ, நீயே நான் ஆகையால் ஞானகுரு தன்னறிவைத் தவிர வேறின்மையால் சுத்த சாதகர்கள் ஊன் பிறந்த வுடலைச் சுமப்பது பாரமென்று எண்ணி, ஏன் பிறந்தோம் என்ற ஏக்கமே தங்கள் வாழ்நாள் முழுதும் குடிகொண்டு, பண்டைக் காலத்திற் செய்த புண்ணியத்தின் பலனாக, புதிய நிலையாகிய தான் பிறந்த விடமான வான் பிறந்த வனத்திற் சஞ்சரித்துக் கொண்டு உள்ளக் கோயிலை ஒன்றிப் பார்த்து தம்மிதயத்துட் காணவேண்டிய பொங்கு பேரொளியே தனிநிலை இயல்பாம்.

நூல் : அருள்சிவம் (1926)
1, தனிநிலை இயல்பு, பக்கங்கள் - 1, 2
நூலாசிரியர் : திரு. சாம்பசிவம்



## Light House - கலங்கரை விளக்கம்

அந்த நகருக்கு அருகில் அழகிய அரணியம் ஒன்றுண்டு. அங்கு மா பலா முதலிய பழமரங்கள் தளிர்த்துத் தழைத்துப் பூத்துக் காய்த்துக் கனிந்து, சூரிய கிரணங்கள் பூமியிற் பரவாவண்ணம் செறிந்து விளங்கின. அந்தச் சூழலில், பாவமாகிய கடலைக் கடந்து, முத்தியாகிய கரையிற் சேர விரும்புவோர், தவமாகிய கலத்தைத் திகைப்பின்றி நடத்துவதற்கு ஓங்கிநின்ற கலங்கரை விளக்கமே போல, நெடுங்குன்றம் ஒன்று நிலைத்து விளங்கிற்று. அதன் சாரலில், யான் எனது என்னும் அகப்பற்றுப் புறப்பற்றுக்களை அறவே ஒழித்த அருந்தவத்து அந்தணர் சிலர் ஆங்காங்கே பர்ண சாலைகள் அமைத்துக் கொண்டு தம் மனைவி மக்களோடு வதிந்திருந்தனர்.

நூல் : குசேலன் (1926) பக்கம் - 8
நூலாசிரியர் : கா. நமச்சிவாய முதலியார்
(மேரி யரசி கலாசாலைத் தலைமைப் பண்டிதர்)



## General Hosptial - பொது மருத்துவச் சாலை

11ந்தேதி வெள்ளிக்கிழமை மாலை அவர்தம் திருமேனியை, விழாக்கோலத்துடன், அரசாங்கப் பொலீஸ்ப்படை புடைசூழ்ந்து மரியாதை புரிந்து வரவும், அரசாங்க அதிகாரிகள் எத்திறத்தினரும் ஏனையோரும் பின் றொடர்ந்து செல்லவும், சென்னை நகரின் வட கோடியாகிய இராயபுரத்திலிருந்து, சென்னை நகரின் தென் கோடிப் பகுதியொன்றின் கண்ணுள்ள (அரசாங்கப் பொது மருத்துவச் சாலைக்கருகில் (General Hospital) அர்ச். வியாகுல மாதா கல்லறைத் தோட்டத்துக்கு எடுத்துச் சென்றனர்.

நூல் : கனம் திவான் பகதூர் எல்.டி. சுவாமிக்கண்ணு பிள்ளை, ஜீவிய சரித்திரம் - (1926) பக்கம் - 28

நூலாசிரியர் : திருவாளர் ஆ. ஷண்முகம் பிள்ளை



## திருஷ்டி - கண்ணேறு

'திருஷ்டி விழுந்தது' என்பதை 'திஷ்டிவிழுந்தது, கண்திஷ்டி' என்று வழங்குகின்றனர். திருஷ்டி என்றால் கண்; அதனைச் சிதைத்து திஷ்டி என வழங்கினும், கண் திஷ்டி என்பது (Gate) கேட் வாயிற்படி, (Lantern) லாந்தர் விளக்கு என்பன போலல்லவா இருக்கின்றது. இது எப்படி பொருந்தும்? இதற்கு ஏற்ற தமிழ்ச்சொல் கண்ணேறு என்பதாம். கண் + ஏறு.

இதழ் : சத்திய நேசன் (1926 பிப்ரவரி) தொகுதி -1 பகுதி, - 2 பக்கம் - 37



## Tregedy - துக்க முடிவுகொண்ட இலக்கியம்

காவிய லக்ஷணம், அலங்காரம், முதலியவைகளைக் கொண்டும் திராவிட பாஷை சிறப்புற்றதென்றும் ஆரியபாஷை அதற்குச் சிறிது குறைந்த நிலைமையிலுள்ளது என்பவர்களு மிருக்கின்றனர். அதற் குதாகரணமாய் வடமொழியில் துக்க முடிவுகொண்ட இலக்கியம் இன்மையைக் கூறித் தமிழில் காணப்படும் சிலப்பதிகாரத்தைச் சிறப்பித்துப் பேசுகின்றனர் திராவிடாபிமானிகள்.

நூல் : நமது பரதகண்டம் 203,4 முதற்பதிப்பு (1926) ஆறாவது சுருக்கம் - தமிழகத்தின் நாகரிகம், பக்கம் 121,

நூலாசிரியர் : வை. சூரியநாராயண சாஸ்திரி, M.A., L.T.,



## பரோபகாரம் - ஒப்புரவு

ஒப்புரவு (பரோபகார) நினைவும் செயலும் பெறுவதற்கு உயிர்ச்சார்பு இன்றியமையாதது, மனிதன் மற்ற உயிர்களோடு கலந்து வாழ வாழ, அவன்பாலுள்ள தன்னலம் என்னும் பாசம் அறுந்து போகும்.

நூல் : மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் (1926) பக்கம் : 39

நூலாசிரியர் : திரு.வி. கலியாணசுந்தரனார்



## Melody (மெலடி) - ஒழுகிசை

தமிழ்நாட்டுச் சங்கீதம் வடநாட்டுச் சங்கீதத்தைப் போல 'ஒழுகிசை'யைத் தழுவி நிற்குமல்லாது ஆங்கிலேய சங்கீதத்தைப் போல 'ஒன்றிசையை' தழுவி நிற்பதல்ல. 'ஒழுங்கிசை'யை ஆங்கிலத்தில் மெலடி (Melody) என்பார்கள்.

இதழ் : செந்தமிழ்ச் செல்வி (1926) பக்கம் : 224
திருவனந்தபுரம் தி. இலக்குமண பிள்ளை பி.ஏ.,



## Table Talk - உண்டாட்டுரை

இதழ் : நச்சினார்க்கினியன் (1926) பக்கம் : 58
மொழிபெயர்ப்பு : நச்சினார்க்கினியன் ஆசிரியர்



## ஜீவானந்தம் - உயிர் இன்பன் (1926)

இளமையிலே ஜீவாவிடம் தமிழ்ப்பற்று மிகுதி. சிராவயலின் ஆசிரம வாழ்க்கையும், ஆசிரம வாழ்க்கையில் அவர் கற்ற ஏராளமான தமிழ் நூற்களும் அவருடைய தமிழ்ப் பற்றை வளர்த்தன.

இக்காலத்தில் தமிழ் நாட்டில் காங்கிரஸ் இயக்கத்துக்கும் சுயமரியாதை இயக்கத்துக்கும் கிட்டத்தட்ட சமமாக நடைபெற்ற இன்னொரு இயக்கம் தனித்தமிழ் இயக்கம். பிராமண ஆதிக்க எதிர்ப்புப் போராட்டத்தின் ஒரு வடிவமாகவே – அதாவது ஆரிய எதிர்ப்பு – ஆரிய கலாச்சார எதிர்ப்பு, அதன் குறியீடாக ஆரிய மொழி எதிர்ப்பு – மறுபுறம் தனித்தமிழ் இயக்கம் – எனச் செயல்பட்டது. மறைமலையடிகளார் இதன் தானைத் தளபதி. போலியான பிராமணிய கலாச்சார எதிர்ப்புக் குரல் கொடுத்த இந்த இயக்கத்தின் ஒளியுள்ள அம்சம் தமிழ்ப்பற்று. அதாவது தமிழனின் உணர்ச்சி மற்றும் கருத்து வெளியீட்டுக் கருவியாக தமிழையே முழுமையாகப் பயன்படுத்த வேண்டும் என்ற அம்சம். இந்த அம்சம் இளைஞன் ஜீவாவைக் கவர்ந்தது. ஜீவா தனித்தமிழ் பக்தரானார்.

இந்த வெறி எவ்வளவு தூரம் ஜீவாவைப் பிடித்திருந்தது என்பதற்குப் பல உதாரணங்களைக் கொடுக்கலாம். தோழர் சி.பி. இளங்கோ கிருஷ்ணன் என்ற தனது பெயரைப் பறிகொடுத்தார். ஜீவானந்தம் என்ற பெயர் 'உயிர் இன்பன்' என்று மாறிவிட்டது.

நூல் : ஜீவா என்றொரு மானுடன் (1982) பக்கங்கள் 22, 23
நூலாசிரியர் : பொன்னீலன்



## பகிரங்கக் கடிதம் - திறந்த மடல்

ஒத்துழையாக் காலத்தில் இங்கிலீஷ் மக்களுக்குக் காந்தியடிகள் எழுதிய திறந்த மடலில் (பகிரங்கக் கடிதத்தில்) 'எனது அன்பார்ந்த நண்பர்களே' என்று அவர்களை அடிக்கடி விளித்தமை காண்க.

நூல் : மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் (1926) பக்கம் : 380
நூலாசிரியர் : திரு.வி. கலியாணசுந்தரனார்



## ஆத்ம சக்தி - உள்ளொளி

தியாகம் ஒருவனது பருஉடல் உணர்வை அரித்து அரித்து உள்ளொளியை (ஆத்ம சக்தியை) ஒளிரச் செய்யும்.

மேற்படி நூல் : பக்கம் : 179



## பிராயச் சித்தம் - கழுவாய்

காந்தியடிகள் தமக்குள்ள மேல்நாட்டு அறிவுத் துணைகொண்டு பிணங்கி நில்லாது தமையனார் ஆணைக்கிணங்கிக் கழுவாய் (பிராயச் சித்தஞ்) செய்து கொண்டார்.

நூல் : பக்கம் : 117



## அநுபவம் - அடைவு

உண்மை இல்லா உள்ளம் என்றும் அச்சத்தால் பீடித்தலையும், அது பொலியும் உள்ளம் அச்சத்தால் பீடிக்கப்படாது அஞ்சாமையில் வீறுகொண்டு நிற்றலையும் விளக்கிக்கூற வேண்டுவதில்லை. அவரவர் அடைவு (அநுபவம்) அவரவர்க்கு இவ்வுண்மையை அறிவுறுத்தும்.

மேற்படி நூல் : பக்கம் - 58



## வீரலெக்ஷ்மி - விந்தைமகள்

கன்னிப்பேரில் விஜயம் பெற்ற செழியன், அக்காலத்திலேயே வீரராவார்க்குச் செய்யத்தகும் களவேள்வியை முறைப்படி செய்யலானான்.

தோற்றொழிந்த வேந்தரின் முரசங்களே பானைகளாவும், வீரர்களின் முடித்தலைகளே அடுப்பாகவும், ஓடுகின்ற குருதிப்புனலே உலைநீராகவுங் கொண்டு அங்குச் சிதறிக்கிடக்கும் தசை, மூளை முதலாயின பெய்து, வீரவளை யணிந்த தோளாகிய துடுப்புக்களால் துழாவிய உணவினால் திருக்களவேள்வியைச் செய்து முடித்தான். அது கண்டு களித்த விந்தைமகள் விரைந்து வந்து அச்செழியனது கொழுவிய புயங்களிற் கொலுவீற்றிருப்பதானாள்.

விந்தை மகள் : வீரலெக்ஷுமி.

நூல் : பாண்டிய ராஜ வம்ச சரித்திரம் (1926) பக்கம் : 25
நூலாசிரியர் : ஆர். அரிகரமையர்
(அம்பாசமுத்திரம், தீர்த்தபதி ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்)



இலங்கையில், ஆங்கிலப் பாஷையில் ‘நிகொம்போ’ என்றும், தமிழில் ‘நீர்கொழும்பு’ என்றும் பெயர் வழங்கி வரும் நகரமானது பூர்வத்தில் இராவணன் மகன் இந்திரஜித்தன் என்பவன் ‘நிகும்பலை’ என்னும் யாகம் நடத்திய விடமாம். ஆதலினால்தான் அவ்வூருக்கு ஆதியில் நிகும்பலை எனும் பெயர் வழங்கியதென்றும், அப்பெயர் நாளாவட்டத்தில் நீர் கொழும்பென மாறிவிட்டதென்றும் சொல்லப்படுகிறது.

இதழ் : சத்திய நேசன் 1926, டிசம்பர்.



## Play Ground - விளையாட்டுப்புலன்

முதன் முதலில் ஆதித்தியன் மகனான பராந்தகன் மதுரையை வென்று இலங்கைக்குப் போய் அவ்விடத்திலும் ஜயம் பெற்றான் என்பதும் அவனது ஆட்சியில் கிராம பஞ்சாயத்து ஓங்கி வளர்ந்தது என்பதும் குறிப்பிடத்தக்கவை. இவ்வம்சத்தில் பத்தாவது அரசனாகிய ராஜ ராஜன் கீர்த்தி மிக அரியது. ஏனெனில் அவன்தான் தமிழகத்திலுள்ள நாடுகளையும் இலங்கைத் தீவையும் முதன் முதலில் ஒரு குடையின் கீழ்க் கொண்டு வந்தவன்.

இம்மன்னனின் குமாரத்தி குந்தவ்வையார் கீழச் சளுக்கிய விமலாதித்தியனை மணம் புரிந்து கொண்டதனால் அவர்கள் வம்சத்தில் தோன்றிய (பதினேழாவது சோழன்) குலோத்துங்க சோழன் சென்னை ராஜதானியின் வடஎல்லை வரையிலும் ஒருகால் அரசு புரியலாயினன்.

ராஜ ராஜனின் நன்கொடைகள் பலவுள. அவன் சைவ சமயத்தில் ஆழ்ந்தவனாயினும் நாகையில் புத்தர்களுக்கும் கோவில் கட்டுவித்தான். அதைப் பதினைந்தாவது நூற்றாண்டு வரை வெளிநாட்டார்கள் தரிசனஞ் செய்து கொண்டிருந்தனராம்.

அதன்பிறகு அது பின்னமாய்க் கிடந்ததைக் கண்ட பாதிரிமார்கள் அவ்விடத்திலேயே 1867ல் ஒரு மாதா கோவில் ஸ்தாபித்தனராம். அந்நகரத்தில் புத்தர் ஆலயம் இருந்ததென்பதற்குச் சான்றுகள் இன்று கிடைத்திருக்கும் 292 புத்த விக்கிரங்களாகும். இந்த விக்கிரகங்கள் நாகை வெளிப்பாளயத்தில் அமைக்கப் பெற்றிருக்கும் நியாயஸ்தலத்தின் எதிரில் பரந்து நிற்கும் விளையாட்டுப் புலனில் வெட்டி யெடுக்கப்பட்டதாகும்.

நூல் : நமது பரதகண்டம் (1926)
இரண்டாம் பாகம், பக்கங்கள் 81, 82
நூலாசிரியர் : வை. சூரிய நாராயண சாஸ்திரி., எம்..ஏ., எல்.டி.,



| | | |
|---|---|---|
| பிரமாணம் | – | உறுதி |
| சிருட்டித்தல் | – | பிறப்பித்தல் |
| நியதி | – | கட்டளை |
| பரிவாரம் | – | சூழ இருப்பவர் |
| பந்தம் | – | கட்டு |
| சாதனம் | – | வழி |
| லக்ஷியம் | – | குறி |
| உபாயம் | – | வழி |
| சகாயம் | – | உதவி |
| சகித்தல் | – | பொறுத்தல் |
| சனனம் | – | பிறப்பு |
| வயோதிகம் | – | முதுமை |

நூல் : சீவகாருணிய ஒழுக்கம் (1927)
நூலாசிரியர் : சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்
பதிப்பாசிரியர் : மணி. திருநாவுக்கரசு முதலியார்
(சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்)



வயோதிகர் – மூப்பாளர்

நூல் : சீவகாருண்ய ஒழுக்கம் (1927) பக்கம் : 16
நூலாசிரியர் : சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்



## பட்சி சகுனம் - புட்குறி

நூல் : பெருமக்கள் கையறுநிலையும் மன்னைக் காஞ்சியும் (1927) பக்கம் : 28
நூலாசிரியர் : அ.கி. பரந்தாம முதலியார் (தென்னிந்திய தமிழ்க்கல்விச் சங்க காரியதரிசி)



## ஆசாரக் கோவை - ஒழுக்கக் கோவை

ஆசாரக்கோவை என்னும் இந்நீதிநூல் கடைச்சங்கம், மருவிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; பெருவாயின் முள்ளியார் என்னும் புலவர் பெருமான் இயற்றியது; நூறுவெண்பாக்களையுடையது. வெண்பா விகற்பகங்கள் பலவற்றை இதன்கண் காணலாம். இவ்வாசிரியர் சைவமதத்தினர் என்பது தற்சிறப்புப் பாயிரத்தால் வெளிப்படை. இந்நூலிலுள்ள கருத்துக்கள் வடமொழி நூல்களினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்டவை. பலவகைப்பட்ட ஆசாரங்களை எடுத்துக்கோத்த நூலாதலிகன் ஆசாரக்கோவை எனப் பெயர் பெற்றது. இதற்கு ஆசிரியர் ஒழுக்கக் கோவை எனத் தமிழ் மொழியால் பெயர் கூறாதது வடமொழியினின்று திரட்டப்பட்ட உண்மை விளக்கிய போலும்.

நூல் : ஆசாரக்கோவை பாட்டும் குறிப்பும் (1927) பக்கம் : 7
பதிப்பாசிரியர் : மணி. திருநாவுக்கரசு முதலியார் (சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்)



## Literary Grace - இலக்கியமாட்சி

ஒருநூல் இலக்கிய வகுப்பிற் சரிவரச் சேர்ந்துளதாவதற்கு அது பிழையற்றிருப்பது மாத்திரமே போதியதாகாது என்பதும், அஃது அவ்வாறு இலக்கிய வகுப்பிற் சேர்ந்துளதாவதற்கு அஃது இலக்கிய மாட்சி (Literary Grace) யுடையதாதல் வேண்டுமென்பதும் நம்மனோரது கொள்கைக ளாதலின், அவற்றிற் கியைய இந் நூலை மாணவர்க்குப் பெரிதும் பயன்தரக் கூடியதோர் இலக்கியவகையில் என்னாலியன்றமட்டும் வரைந்திருக்கின்றேன். கற்றறிந்தோர் இதனை ஏற்றுக் கொள்வாராக.

நூல் : முருகன்... ஒரு தமிழ்த் தெய்வம் (1927)
முகவுரை : பக்கம் - 4
நூலாசிரியர் : டி. பக்தவத்சலம் பி.ஏ.,



போசன பாத்திரம் – பரிகலம்
அக்கினிச் சுவாலை – தீக்கொழுந்து

நூல் : திருக்குற்றாலக் குறவஞ்சி (1927)
அரும்பதவுரை : மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான் மு.ரா. அருணாசலக்கவிராயர்.



Agricultural Stage – பயிரிடும் பருவம்
Symbol – அடையாளக் குறி
பீடம் – ஆவுடையார்

நூல் : வேளாளரது தோற்றமும் அவர்தம் வரலாறும் (1927)பக்கங்கள் 9, 31, 32
நூலாசிரியர் : வல்லை. பாலசுப்பிரமணியன்



பட்சி சகுனம் – புற்குறி
அஸ்தினாபுரம் – குருநகர்

நூல் : பெருமக்கள் கையறு நிலையும் மன்னைக் காஞ்சியும் (1927)
நூலாசிரியர் : அ.கி. பரந்தாம முதலியார் (தென்னிந்திய தமிழ்க் கல்விச்சங்க காரியதரிசி)



## அந்தப்புரம் – உள்ளறை

நூல் : நீதிநெறி விளக்கம் மூலமும் விருத்தி உரையும் (1928)
உரையாசிரியர் : சோடசாவதானம் தி. சுப்பராய் செட்டியார்



## ஜலதரங்கம் – நீர்க்கிண்ணத்திசை

தென் இந்திய மருத்துவ சங்கம்

21.4.1928 ஆம் நாள் மாலை 5 மணிக்குச் சங்க நிலையத்தில் சிறுத்தொண்ட நாயனார் குரு பூசை நடைபெற்றது. சங்கத் தலைவர் பண்டித எஸ்.எஸ். ஆனந்தம் அவர்களின் உருவப்படத்தைச் சங்கத்தில் திரு. மதுரை முத்து முதலியார் அவர்கள் திறந்து வைத்தார். அப்போது பண்டிதர் சித்த

வைத்தியத்திற்காகவும் மருத்துவ குலத்தாருக்காகவும் செய்த தியாகங்களைப் பற்றி விரிவாகப் பேசினார். பின்னர் இசைப்புலவர் ஆர்.வி. நாயுடு அவர்களால் யாழ், சுரகெத், சித்தரா, நீர்க் கிண்ணத்திசை (ஜலதரங்கம்) முதலிய இன்னிசைக் கருவிகள் வாசிக்கப்பட்டன.

– காரியதரிசி

இதழ் : குடியரசு - 6. 5. 1928



## Petrol, Tank - ஆவி எண்ணெய்ப் பெட்டி

காரைக்குடிக்கும் தஞ்சாவூர்க்கும் ஓடிக்கொண்டிருக்கும் மோடார் பஸ் ஒன்றுக்குப் பெட்ரோல் டாங்கி (ஆவி எண்ணெய்ப் பெட்டி) ஓட்டையாய் ஓடும்போது ரோட்டெல்லாம் பெட்ரோல் சிந்திக்கொண்டே போகிறது. அதைக் கீழே சிந்தவொட்டாமல் ஒரு தொட்டியில் பிடித்துக் கொண்டு வண்டியின் பின்னால் தொடர்ந்து வர ஓர் ஆள் தேவை. சம்பளம் பிடிக்கும் பெட்ரோலில் பாதியைத் தரப்படும். இஷ்டமானவர்கள் தெரிவித்துக் கொள்ளவும். விலாசம், ஆசைக்கார அஞ்சப்பன், பாடாவதி பஸ் சர்வீஸ், காரியக்குடி.

இதழ் : ஆனந்த விஜய விகடன் (1928, ஜுன்) தாய் - 1 பிள்ளை - 4 பாக்கட் விகடங்கள், பக்கம் - 196



## Weight - நிறுக்குங் கருவி

ரெயில்வே ஸ்டேஷன்களில் டிக்கட்டு வாங்கும் ஜன்னல்களுக்கு முன்னே ஒரு வெயிட் (நிறுக்குங் கருவி) ஒன்று பலகைபோல் போட்டு விட்டால் அதன் மேல் ஏறி நின்றுதான் டிக்கட்டு வாங்க நேரிடும். அப்படி ஆள் ஏறியவுடன், ஏறினவன் இத்தனை பவுண்டு எடையுள்ளவன் என்று டிக்கட்டு விற்பவர்களுக்கு ஒரு முள் காட்டிவிடும். ஒரு பவுண்டுக்கு ஒரு மைலுக்கு இவ்வளவு கட்டணம் என்று ஏற்படுத்தி எடையின் மீது டிக்கட்டு கொடுக்கும் படி ரெயில்வே கம்பெனியாரை விகடன் வேண்டுகிறான்.

இதழ் : ஆனந்த விஜய விகடன்( 1928 பிப்ரவரி) தாய் - 1, பிள்ளை - 1, பக்கம் - 9

ஆசிரியர் : விகடகவி பூதூர். வைத்திய நாதையர்



## Essence - சத்து

எசென்சு (சத்து) அபிஷேகம் : கோவில்களில் உள்ள சுவாமிகட்கு அபிஷேகம் செய்கையில் பன்னீர் அபிஷேகம் செய்கிறார்கள். பன்னீரானது ரோஜாப் புஷ்பத்தின் எசென்சு (சத்துரசம்) ஆகும். ஆனதால் அதைப்போல இனி, பழவர்க்கங்களையும் எசென்சாக வாங்கி அபிஷேகம் செய்தால் வேலை குறையுமென்று குருக்கள்மார்கள் தேவஸ்தான போர்டாரைக் கேட்டுக் கொள்ளப் போகின்றாராம்.

இதழ் : ஆனந்த விஜய விகடன் (1928, செப்டம்பர்) தாய்- 1, பிள்ளை - 8 பாக்கட் விகடங்கள், பக்கம் - 335
ஆசிரியர் : விகடகவி பூதூர். வைத்தியநாதையர்



## Open Coat - திறப்புச் சட்டை

நவீன நாகரிகத்தில் முற்றிய ஆண் பாலர்கள் தங்கள் சட்டைகளில் (ஒப்பன்கோட்) என்கிற திறப்புச் சட்டையை அணிவது போல மாதர்களும் திறப்பு ரவிக்கையை அணிய நாயகன்மார்கள் உத்தரவு தர ஏறபாடு செய்ய வேணுமாய் கோருகின்றனர்.

இதழ் : ஆனந்த விஜய விகடன் (1928, ஜூன்) தாய் - 1, பிள்ளை - 4 பாக்கட் விகடங்கள் - பக்கம் - 195
ஆசிரியர் : விகடகவி பூதூர். வைத்திய நாதையர்



## Produce - விளைவுப் பொருள்

என்னுடைய கடையைப் பெரிதாக்க எண்ணங்கொண்டு நான் ஏற்கனவே கட்டியிருந்த கடையைச் சேர்ந்தாப் போல் பெரிய ஷாப்பாக பக்கா கல் கட்டடம் ஒன்றைக் கட்டியும், அதற்கடுத்தாப் போல் சில கிடங்குகளைக் கட்டியும் அதில் என் வியாபாரத்தை வைத்து நடத்தலானேன். அப்போது இந்தியா இன்னும் அனேக ஊர்களிலிருந்தும், இந்திய ஆண் பெண் இரு ஜாதியாருக்கும், ஐரோப்பிய ஜாதியாருக்கும் வேண்டிய சகல சாப்பாட்டு சாமான்கள், துணி, மணி முதலிய எல்லாச்சாமான்களும் வரவழைத்து வைத்தும், அவ்விடத்திலும் பக்கத்து கிராமங்களிலும் விளையும் சகலவித விளைவுப்பொருள் (Produce) களையும் ஒப்பந்தமாக வாங்கி அவ்விடத்திலும் மற்ற இடங்களிலுமுள்ள வியாபாரிகளுக்கு

அனுப்பிச் சப்ளை செய்து விற்றும் வியாபாரத்தை ஒழுங்காகக் கவனித்து நடத்திவரலானேன்.

நூல் : ரா. பழனியாண்டிப் பிள்ளையின் ஜீவிய சரித்திரம் (1928) பக். 11,12

நூலாசிரியர் : ரா. பழனியாண்டிப் பிள்ளை



## Agreement - உடன்படிக்கை

டர்பனில் எட்வர்டு இஸ்னல் என்னும் ஒருபெரிய வியாபாரிக்கு ஸ்பிங்கோ என்னும் நானிருக்குமிடத்தில் 100 ஏக்கர் காடு நிலம் இருந்தது. அவர் என்னை வரவழைத்து என்னைப் புகழ்ந்து பேசி எனக்குச் சொந்தமான 200 ஏக்கர் நிலத்தை நான் சீர்திருத்தம் செய்து வருமானத்திற்குத் தகுதியாக்கிக் கொண்டது போல் இமிகிரேஷன் ஜனங்களுக்குப் பயிரிடக் கொடுத்தும், இன்னும் என்னுடைய அபிப்பிராயப்படி செய்தும் வசூலாகும் வருமானத்தில் 100 ரூபாய்க்கு ஐந்து ருபாய் விகிதம் கமிஷன் எடுத்துக் கொண்டு மிகுதியைத் தனக்குக் கொடுக்கும்படியாக உடன்படிக்கை (அக்ரிமெண்டு) எழுதிக் கொண்டு மேற்படி தன்னுடைய 1000 ஏக்கர் காடு நிலங்களை என்னிடம் ஒப்புவித்தார்.

நூல் : ரா. பழனியாண்டிப் பிள்ளையின் ஜீவிய சரித்திரம் (1928) பக்கம் - 16

நூலாசிரியர் : ரா. பழனியாண்டிப் பிள்ளை



## Stock - இருப்பு

சில தினங்களுக்கெல்லாம் ஆஸ்திரேலியாவிலிருந்து சில வியாபாரிகள் வந்து அவ்விடங்களிலிருந்த சோளங்களை மூட்டை நான்கு சிலிங் முதல் பத்து சிலிங் வரை விலை ஏற்றிக் கொடுத்து வாங்கி விட்டார்கள். பிறகு சில தினங்களுக்கெல்லாம் மூட்டை இருபது சிலிங் வரை ஏற்றமாகி அந்தச் சமயமும் ஆஸ்திரேலியா வியாபாரிகள் வந்து அவ்விடங்களிலிருந்த சோளம் முழுவதும் வாங்கி விட்டார்கள். நான் மாத்திரம் விற்கவில்லை. பிறகு சில தினங்களுக்கெல்லாம் சோளம் விலையேறி மூட்டை முப்பது சிலிங் விலையாக, என் இருப்பிலிருந்து (ஸ்டாக்கு) 1000 மூட்டைகளை விற்றேன்.

மேற்படி நூல் : பக்கம் - 19



## Lease - குடிக்கூலி

ஸ்பிங்கோ என்னும் ஊர் எனக்கு ஒருவாறு பிடித்தமாக இருந்தது மன்றி அந்த இடத்தில் சொற்பமாகப் பலசரக்குக்கடை வைத்திருந்த இராமலிங்கப் பிள்ளை என்பவரும் எனக்குத் தைரியஞ் சொல்லி, கடை வைக்கும்படியாகவும், தன்னால் கூடிய உதவிகள் புரிவதாகவும் சொன்னதின் பேரில், எனக்கும் ஒருவாறு தைரியமேற்பட்டு அவ்விடம் வில்லியம் கஸ்டர்டு என்பவரிடத்தில் அரை ஏக்கர் நிலம் குடிக்கூலி (லிஸுக்கு) வாங்கி அந்த இடத்தில் காட்டிலுள்ள மரங்களை வெட்டி மேற்படி இராமலிங்கப் பிள்ளை உதவியுடன் நான் ஒரு சிறிய கடை. (Zinc Shed) கட்டிப் பூர்த்தி செய்து அந்தக் கடையில் என்னுடைய டர்பன் கடையிலிருந்த மிகுதி சரக்குகளைக் கொண்டு போய் வைத்தும், டர்பனில் அப்போது எனக்குச் சினேகிதராக ஏற்பட்ட ஒரு வியாபாரியிடமும், மேற்குறித்த மோரீஷ் வியாபாரிகள் கடை வைத்திருந்தவர்களிடமும், அப்போதைக்கப்போது கொஞ்சம் கொஞ்சமாகச் சரக்குகளை ரொக்கத்திற்கும் தவணைக்கும் வாங்கிக் கொண்டு போய் வைத்தும் வியாபாரம் செய்யலானேன்.

மேற்படி நூல் : பக்கம் - 7



## Engineer - மதிவல்லோன்

## Cinema - நகரும் காட்சிப் படங்கள்

கடிகாரம், மணி – நிமிடம் – விநாடி – தேதி காட்டுவதும், எச்சரிக்கை மணி (Alarm) அடிப்பதும், பலவித வாத்தியங்கள் வாசிப்பதும், இன்னும் அனேக ஆச்சரியங்களைச் செய்வதும்; ரெயில்வே இஞ்சின் வண்டிகள், மாடு குதிரையில்லாமல், நீராவி பலத்தினால் பல்லாயிர மணங்கு பாரத்தை வெயிலென்றும் – மழையென்றும் – இருளென்றும் நோக்காமல் ஒரே நாளில் பல மைல் தூரம் சுலபமாகவே கொண்டு போய்ச் சேர்ப்பதும், இவ்வாறே நீராவி மரக்கலங்கள் செல்வதும்; பயாஸ்கோப் (சினிமா) நகரும் காட்சிப் படங்கள், உலகத்தின் பல பாகத்தில் நிகழ்ந்த சம்பவங்களை பிரத்தியட்சமாகவே செய்து காண்பிப்பதும்; இன்னும் ஆகாய விமான முதலான பல இயந்திரங்கள் ஆச்சரியமடையத்தக்க விதமாக வேலை செய்வதும் இக்காலத்தில் நாம் நிதரிசனமாகக் காண்கிறோம். இவைகளை ஒரு மதிவல்லோன் (Engineer) இருந்து செய்திருப்பான் என்பது நமக்கு விளங்குகின்றது.

நூல் : வேதாந்த பாஸ்கரன் (1928)
கடவுளியல், பக்கங்கள் - 14, 15
நூலாசிரியர் : கருணையானந்த ஞானபூபதிகள்



## கூடாரம் - நூலாடையாலாகிய வீடு

தாமணி யடித்து எருதுகளின் மேலிருக்கும் பொதிகளையெல்லாங் கீழே தள்ளி யடுக்கிட்டுத் துள்ளுகின்ற எருதுகளுக்குக் கட்டியிருக்கும் பெரிய மணிகளையும் வரிசையாகக் கோத்துக் கழுத்திற் கட்டியிருக்கு மணிகளையும் கொம்புகளிற் கட்டியிருக்கும் சிகை மயிரினையும் நீக்கி வரிசை வரிசையாக நீருட்டிக் கட்டி உண்ணுதற்கு நல்ல புல்லும் போட்டு வாசனை பொருந்திய மாலையணிந்துள்ள அந்த வர்த்தகனும் கூடாரத்திற் சேர்ந்தான். கலைக்குடில் – நூலாடையாலாகிய வீடு, அது கூடாரமென்று சொல்லப்படுகின்றது.

நூல் : திரிவிரிஞ்சை புராணம் (1928) சைவ. எல்லப்ப நாவலர்
குறிப்புரை : டி.பி. கோதண்டராம ரெட்டியார்
(வேலூர் துரைத்தன உயர்தர
பெண்பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்)



## ராஷ்டிரம் - நாடு

ஆந்திர சக்கரவர்த்திகள் காலத்தில் கர்மக ராஷ்டிரம் என்னும் ஒரு பூபாகம் ஆந்திர தேசத்தின் மத்தியில் சிறந்து விளங்கியது. இதுவே காலாந்தரத்தில் கம்மராஷ்டிரம் என்றாகிப் பின்னர் 'கம்ம நாடு' என உச்சரிக்கப்பட்டதாகச் சிலசாஸனங்களால் தெரிய வருகிறது. இக்கம்ம நாட்டை பரிபாலித்த ஆந்திர சக்கரவர்த்திகளுக்குப் பின் சோழர்களும், கடைசியாக முகமதியர்களும் அரசாண்டதாகச் சரித்திரங் கூறுகிறது.

மேற்சொன்ன தமிழ் மன்னராகிய சோழர்கள் இம் மண்டலத்தைப் பரிபாலனஞ் செய்த பொழுதுதான் கர்மக ராஷ்டிரம் என்ற பெயர் கம்ம நாடெனத் திரிந்திக்கிறது. ஏனெனில் சுலபமாக உச்சரிக்க கர்ம என்பதை கம்ம என்று வழங்கியிருக்க வேண்டும். ஆகையால் கம்ம என்பது கர்ம என்பதின் மரூஉ மொழியாகும். ராஷ்டிரம் என்பதற்குத் தமிழ் வார்த்தையாகிய நாடு என்பதைச் சோழர்கள் வழங்கியிருக்க வேண்டும். இவையிரண்டுஞ் சேர்க்கக் கம்ம நாடு என்பதாகும். இதில் வசித்தவர்களே கம்மவார் என நாமங் கொண்டார்கள் என்று கொள்ளுதலே பொருத்தமாகத் தோன்றுகிறது.

நூல் : கம்ம சரித்திரச் சுருக்கம் (1928) பக்கங்கள் 12, 13
நூலாசிரியர் : சு. வேங்கடசாமி நாயுடு
(தமிழாசிரியர், முனிசிபல் ஹைஸ்கூல், பழநி)



| | | |
|---|---|---|
| ஆகாய வாக்கு | – | வான்மொழி |

நூல் : திருப்புனவாயிற் புராணம் (1928)
நூலாசிரியர் : திருவாரூர் தியாகராஜ கவிராஜ தேசிகர்
அரும்பதவுரையாசிரியர் தூத்துக்குடி
பொ. முத்தைய பிள்ளை



| | | |
|---|---|---|
| பாத கமலம் | – | திருவடித் தாமரை |
| தர்மசாத்திரம் | – | பட்டாங்கு |
| விருதா | – | வீண் |
| பாததூளி | – | அடிப்பொடி |
| பால குச அம்பிகை | – | இளமுலையம்மை |
| பர்வத புத்ரி | – | மலைமகள் |
| பூரணி | – | நிறைந்தவள் |
| சுகக்கடல் | – | இன்பவாரி |
| கோமளம் | – | பேரழகு |
| பஞ்சாக்கரம் | – | எழுத்தஞ்சு (அஞ்செழுத்து) |
| வேதபுரி | – | மறையூர் |
| தீபம் | – | விளக்கம் |
| சந்திர மௌலீசுரர் | – | மதி முடியார் |
| பிரவாகம் | – | பெருக்கு |
| விற்பனம் | – | அறிவுடைமை |
| நவம் | – | புதுமை |

நூல் : திருவோத்தூர் ஸ்ரீ இளமுலை அம்பிகை அந்தாதி (1928)
நூலாசிரியர் : கருந்திட்டைக்குடி வி. சாமிநாத பிள்ளை



| | | |
|---|---|---|
| கோஷித்தல் | – | ஆரவாரித்தல் |
| சிவலிங்கம் | – | அருட்குறி |
| விருத்தபுரி | – | பழம்பதி |
| விமோசனம் | – | நீங்குதல் |

நூல் : திருப்புனவாயிற் புராணம் (1928)
(திருவாரூர் தியாகராஜ கவிராஜ தேசிகர் இயற்றியது)
அரும்பதவுரை : தூத்துக்குடி பொ. முத்தைய பிள்ளை



Immoveables – இயங்காப் பொருள்
Terrace – மேன்மாடி
Screen – திரைச்சீலை, இடுதிரை
Change - சிதறின தொகை

நூல் : இளைஞர் தமிழ்க் கையகராதி (1928)
தொகுத்தவர் : மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை ஈ.எல்.எம்.எம்
மேல்நிலைப் பள்ளித் தமிழாசிரியர், சென்னை)



## திலகர் - சிறந்தவர்

நூல் : திவ்ய ஸூரி சரிதம் (1929)
(தமிழ் மொழி பெயர்ப்பு)
நூலாசிரியர் : உ.வே. திரு. வீ. சாமி ஐயங்கார் பக்கம் : 4
எட்டயபுரம் சமஸ்தான வித்வான்)



கவிஞர் சுரதா ‘சுண்டல்’ என்ற பெயரில் ஒரு பத்திரிகை துவங்கத் திட்டமிட்டிருக்கிறார். - பால்யு

இதழ் : குமுதம்



வசனம் – உரை நடை
ரசவாதிகள் – பொன் செய்வோர்
காபிரைட் – உரிமை

நூல் : மதிமோச விளக்கம் (1929) நான்காம் பதிப்பு
நூலாசிரியர் : தூசி. இராஜகோபால பூபதி பக்கம் : 4
நான்காம் பதிப்பின் முன்னுரை
எழுதியவர் : நா. முனிசாமி முதலியார்
(ஆனந்த போதினி பத்திராதிபர்)



| | | |
|---|---|---|
| அமிர்தம் | – | சாவா மருந்து |
| சரிகை | – | பொன் நூல் |

நூல் : நளாயினி வெண்பா (1929), பக். : 4, 28
நூலாசிரியர் : திருப்பத்தூர் கா. அ. சண்முக முதலியார்



## Bloting Paper - ஒட்டுத்தாள்

குதிரைப் பந்தயத்தில் பணங்கட்டி, தோல்வியடைந்து, கையில் வண்டிச் சத்தமும் இன்றி நடந்து வீடு நோக்கி வரும்போது தோற்றுப்போன பெருந் தொகையை எண்ணி எண்ணி கண்ணீர்விடும் உத்தமர்களின் கண்ணீரை (பிளாட்டிங் பேபரால் ) ஒட்டுத்தாளால் துடைக்க ஓர் ஆள் தேவை. அந்த ஆளுக்குக் குதிரைப் பந்தயத்தார் சம்பளந் தருவார்கள். இஷ்டமானவர்கள் பந்தயக் குதிரையின் மூலம் மனு கொடுத்துக் கொள்ளவும்.

இதழ் : ஆனந்த விஜய விகடன் (1928, ஏப்பிரல்)
தாய் - 1 பிள்ளை - 3
பாக்கட் விகடங்கள் - பக்கம் - 93
ஆசிரியர் : விகடகவி பூதூர். வைத்திய நாதையர்



## கிருஷ்ணன் - கறுப்பன்

இவர்கள் இராமாயணத்தைப் பற்றி எடுத்துக் கூறும் கதையைக் குருடன் கனா என்று கூறலாம். அவர்கள் கதை கீழ்வருமாறெல்லாம் போகிறது.

இராமாயணம் தமிழ்க்கதை ; தமிழன் கதை. அக்கதை திராவிடர் இந்தியாவிற்கு வந்த கதையே. குரங்குகள் எனப்படுவோர், தமிழர்க்கு முன் இந்நாட்டில் வாழ்ந்த குடிகள். இராமன் திராவிடன், தமிழன். அவன் பெயரும் தனித் தமிழ். இராமன் என்பதில் இரா என்பது இரவு, இரும்பு, இருந்தை, இரு, இருமண் முதலியவற்றைப் போலக் கருமை என்பதைக் குறிப்பதாகும். மன் என்பது ஆண்பால் விகுதி. ஆகவே, இராமன் என்ற சொல், கருநிறமுடைய பெருமானைக் குறிக்கின்றது. இராமனது நிறமும் தமிழர் நிறமன்றோ? தாஸ்யுக்கள் என்ற திராவிட மக்களின் தலைவனைக் கறுப்பன் (கிருஷ்ணன்) என்ற பெயர் கொண்டழைத்து அவன் ஆரியர்களை ஆட்டி வைத்த கொடுமையை எடுத்துக் கூறுகின்றது ரிக்வேதம். ஆகவே கண்ணன் இராமன் என்பன தமிழ்க்கடவுளின் பெயர்கள், தமிழ்த்தலைவரின் பெயர்கள். அன்றியும், திருமால் தமிழ்க்கடவுள் அன்றோ? முல்லை நிலத்தில் வாழ்ந்த தமிழ்மக்கள் அவரைத்தானே வழிபட்டு வந்தனர்.

நூல் : சுயமரியாதை கண்டன திரட்டு (1929) பக்கம் - 6
கட்டுரையாளர் : தெ.பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, எம்.ஏ., பி.எல்., எம். எல். சி.,



## உத்யானம் - பூத்தோட்டம்

உத்யான பத்திரிகை என்ற வடமொழியில் வெளிவரும் மாத சஞ்சிகை – ஒரே ரூபாய் சந்தாவுள்ள மாத சஞ்சிகை, திருவையாறு என்று கூறப்படும் ஊரிலிருந்து வெளிவரும். இதை ஐந்து ஆறுகளின் மத்தியில் விளங்கும் உன்னதமான உத்யானத்தில் (பூத்தோட்டத்தில்) வீசும் வாசனையைக் கிரகித்து வெளிவரும்.

நூல் : சுயமரியாதை கண்டன திரட்டு (1929) பக்கம் - 8
கட்டுரையாளர் : நாரதர்



| | | |
|---|---|---|
| சரிகை | – | பொன்நூல் |
| சீவன்முத்தர் | – | கதிமேலார் |
| மோட்சம் | – | பேராப்பதம் |
| சையோகம் | – | புணர்ச்சி |
| கவிவாணர் | – | பாவலர் |

நூல் : நளாயினி வெண்பா (1929)
நூலாசிரியர் : திருப்பத்தூர் கா.அ. சண்முக முதலியார்.



## City Police - பட்டண காவலாளிகள்

1459ல் ஹுமாயூன் தன் படைகளுடன் கிளர்ச்சித் தலைவனாகிய தெலிங்கானா ஜமீன்தாரை ஜயிக்கப் படை எடுத்த போது பீதரில் ஓர் கலகம் நேர்ந்தது. அதை அல்லாவுத்தீன் கேள்வியுற்று பீதர் சென்று பட்டண காவலாளிகள் (City Police) இரண்டாயிரம் நபர்களை அஜாக்கிரதை என்னும் குற்றத்திற்காகக் கொலை செய்தான்.

இதழ் : ஆனந்த போதினி
தொகுதி - 15, (15. 12. 1929)
பகுதி - 6 பக்கம் 376
கட்டுரையாளர் : கதாரத்ன சே. கிருஷ்ணசாமி சர்மா



| | | |
|---|---|---|
| வசனம் | – | உரைநடை |
| ரசவாதிகள் | – | பொன் செய்வோர் |

நூல் : மதிமோச விளக்கம் (1929)
(நான்காம் பதிப்பு) பக்கம் : 4
மொழியாக்கம் : நா. முனிசாமி முதலியார்
('ஆனந்த போதினி' பத்திராதிபர்)



## அந்தப்புரம் – உள்ளறை

'அந்தர்' என்னும் வடமொழித் திரிபு ஆதலால் தற்பவம்.

நூல் : நீதிநெறி விளக்கம் மூலமும் விருத்தி உரையும் (1929)
பக்கம் : 36
உரையாசிரியர் : சோடசாவதானம் தி. சுப்பராய செட்டியார்



| | | |
|---|---|---|
| பிரதமை திதி | – | முதல்நாள் |
| துவிதியை திதி | – | இரண்டாம் நாள் |
| திரிதியை திதி | – | மூன்றாம் நாள் |
| சதுர்த்திய திதி | – | நான்காம் நாள் |
| பஞ்சமி திதி | – | ஐந்தாம் நாள் |
| சஷ்டி திதி | – | ஆறாம் நாள் |

முருகன் வரத்தில் அசுரர்கள் பிறந்து தேவர்களுக்கிடுக்கண் செய்வதையொழிக்க சிவன் தனது மனையாளிடம் மோகிக்குங்கால் அவர் கண் வழியாக ஐப்பசி மாத பூர்வக்ஷத்துப் பிரதமை திதியில் (முதல்நாள்) காமமாகிய வீரியந் தோன்றிற்று. அந்த விந்தே துவிதியை திதியில் (இரண்டாம் நாள்) பார்வதி கருப்பையிற் செலுத்தப்பட்டது. அதே விந்து திதியைத் திதியில் (மூன்றாம்நாள்) பார்வதி கருப்பையிலிருந்தெடுத்து, அக்கினி பகவானிடம் கொடுக்க அவனந்த அசுசியை வகித்திருந்து சதுர்த்திய திதியில் (நான்காம் நாள்) கங்கை நதியில் எறிந்துவிட, கங்கை நதி அக்கலிதத்தைச் சரவண குட்டையில் ஒதுக்கிவிட, அவைகள் ஆறு குழந்தைகளாக, அக்குழந்தைகளுக்குப் பஞ்சமி திதியில் (ஐந்தாம் நாள்) கிருத்திகா தேவிகளால் பாலூட்டி உயிர் நிறுத்த சஷ்டி திதியில் (ஆறாம் நாள்) பார்வதி தன் கணவனுடன் வந்து அந்த ஆறு குழந்தைகளையும் அந்தக் குளத்திலிருந்து சேர்த்தெடுக்க ஆறு தலைகளும், பன்னிரு புஜங்களும், உடல் ஒன்றும் கால்களிரண்டுமாய்த் திரண்டு விட்டதாம். இந்த இயல்பலாத பிறப்புடையவன்தான் ஆறுமுகனாம்.

நூல் : ஸ்ரீ ஆறுமுகக் கடவுள் வரலாறு முதற்பதிப்பு (1930) பக்கம் - 27
நூலாசிரியர் : க. அயோத்திதாஸ் பண்டிதர்



## Desert - விளைவிலாப் படுநிலம்

முருகன் பிறந்தது இமயமலை கங்கை நதி யோரத்துச் சரவண குளமாயிருக்க, வானலோக மேறுந்திடன் முருகனுக்கேதோ? பாப்பார் மத விஷ்ணு விளைவிலாப் படுநிலமுள்ள (Indian Desert) ஆரிய வர்த்தனமென்னும் வைகுந்த ஊராகிய ராஜ புத்தானா வருகிலும், பிரமன் பர்மா தேசத்திலும், சிவன் காஷ்மீர் தேசத்திற்குச் சிறிது வடகிழக்கில் சுமார் நூற்றிஐம்பது மைல் தூரமுள்ள கைலைமலை குகையிலு மிருந்தார்க ளென்றால், தேவேந்திரன் வானலோகத்திலிருந்திருப்பானா? அல்லது அமராவதி ஆற்றோர மிருந்திருப்பானா? வென்று நீங்களே நினைத்துப் பாருங்கள்.

நூல் : ஸ்ரீ முருகக் கடவுள் வரலாறு (1930) பக்கம் - 30
நூலாசிரியர் : க. அயோத்திதாஸ் பண்டிதர்



## Magic Lantern - படக்காட்சிக் கருவிகள்

சொற்பொழிவாளர்கள் பலரை அமைத்து அவர்கட்குத் தக்க ஊதியங்கள் அளித்து இச்சென்னை நகரின் மட்டுமேயல்லாமற் சென்னை மாகாண முழுமையும் அளவிலாச் சொற்பொழிவுகள் அங்கங்கும் நிகழ்த்தி நம்மவர்களைப் புலால் மறுக்கும்படி செய்தல் வேண்டும். விரிவுரைகட்குப் படக்காட்சிக் கருவிகளும் (Magic Lantern) பயன்படுத்துதல் வேண்டும்.

நூல் : ஏன் புலால் மறுத்தல் வேண்டும்? (1930) ஒரு வேண்டுகோள் - மேலட்டையின் மூன்றாம் பக்கம்
நூலாசிரியர் : பண்டிதர் பாலசுந்தரம் பிள்ளை



## பூவராகம் (பிள்ளை) - நிலப்பன்றி (1930)

1929–ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் உருப்பெற்றது. அக்கழகத்தின் புலவர் பயிற்சிக் கல்லூரியும் புகுமுக வகுப்பும் தில்லையில் இருந்தன. 1930ஆம் ஆண்டில் பூவராகனார், இக்கல்லூரிகளின் ஆசிரியராக அமர்ந்து திறமையாகப் போதனை புரிந்தார். பிறகு 1938ஆம் ஆண்டில் புலவர் வகுப்புகட்கு ஆசிரியரானார்.

பூவராகனார் சிறந்த அறிவாளியாக விளங்கினாலும் பெருமிதத்தை மேற்கொண்டவரல்லர். அடக்கத்தையும் அமைதியையும் அணிகலனாகக் கொண்டிருந்தார். எப்பொழுதும் நூல்களைப் படிப்பதே இவருக்கு இனிமையான பொழுதுபோக்கு. மாணவர்கள் பலவகையாக இருப்பர். சிலர் ஆசிரியர்களைக் கேலி செய்பவர்களாகி விளங்குதலும் உண்டு. பூவரா னாருடைய மாணவர்கள் அவருடைய பெயரைத் தமிழில் மொழி பெயர்த்து 'நிலப்பன்றி' என்று கூறுதலும் உண்டு.

நூல் : தமிழ்ப் புலவர் வரிசை (1955)
(பன்னிரண்டாம் புத்தகம்) பக்கங்கள் : 92, 93
நூலாசிரியர் : சு. அ. இராமசாமிப் புலவர்



| | | |
|---|---|---|
| Protein | – | முதலுணா |
| Fat | – | கொழுப்புணா |
| Carbo Hydrates | – | இனிப்புணா |
| Salts | – | உப்புணா |
| Water | – | நீருணா |

மக்கள் ஊனுண்ணுதற்குரிய உணவுப் பொருட் கூறுகள் ஐந்து வகைப்படும். அவை முதலுரை (Protien), கொழுப்புரை (Fats), இனிப்புரை (Carbo hydrates), உப்புரை (Salts), நீருரை (Water) என்பன.

இவற்றுள் முதலுலைப் பொருள் நரம்பையும் தசை நாரையும் மூளையையும் நன்கு வலுவேற்றி வளர்க்கும்.

கொழுப்புரை உடம்பின் கொழுப்பு, கொழுப்பின் றொடர் என்பவற்றை வளர்ப்பது மன்றி உடம்பிற்குச் சூட்டினையும் தரும்.

இனிப்புரையென்பது கொழுப்புணாவை யொப்ப உடம்பின் கொழுப்பை நன்கு வளர்க்குமாயினும், அதனினும் அஃது உடம்புக்கு வேண்டுஞ் சூட்டினைப் போதுமான வளவு தருவதில் மிகவும் பயன்படா நிற்கின்றது.

உடம்பு நிலை பெறுவதற்கு முதன்மையான கருவிகளாயுள்ள செந்நீரையும் எலும்புகளையும் நன்கு வளர்த்து வலுவேற்றுவது உப்புணாவின் இயல்பு; மேலும் அவ்வுணா உடம்பின் வளர்ச்சிக்கு ஏதுவான சுண்ணம், காந்தமண், உவர்க்காரம், சாம்பருப்பு முதலான மட்பொருட் கூறுகளையும் விளைத்திடுகின்றது.

இனி நீருணாவோவெனின் உடம்பின் செந்நீர்க்கு மிகவும் பயன்பட்டு ஏனை எல்லாப் பண்டங்களிலும் பொருந்தி அவை உடம்பின் கண் செல்லுதற்குப் பெரிதுந் துணை புரிவதாகும்.

நூல் : ஏன் புலால் மறுத்தல் வேண்டும்? (1930)
நூலாசிரியர் : பண்டிதர் பாலசுந்தரம் பிள்ளை பக்கங்கள் : 16, 17



## Food Machine - உணவுப் பொறி

உற்று நோக்கினால் மக்கட்கும் ஏனைச் சிற்றுயிர்கட்கும் அவ்வப் போதும் உணவுப் பொருள்கள் உண்டாக்கிக் கொடுத்தலில் மரஞ் செடி கொடிகள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உணவுப் பொறியாகவோ (Food Machine) விளங்கா நிற்கும்.

நூல் : ஏன் புலால் மறுத்தல் வேண்டும்? (1930) பக்கம் - 55
நூலாசிரியர் : பண்டிதர் பாலசுந்தரம் பிள்ளை



## தயிலசத்து - பசையுடைப் பொருள்கள்

அழலுண் பொருள்கள் தயில சத்து (பசையு)டைப் பொருள்கள். உண்பவை – எண்ணெய், நெய் முதலியவை.

நூல் : சசிவன்ன போத மூலம் (1930) பக்கம் : 88
உரையாசிரியர் : காஞ்சிநகர் ஆ. செங்கல்வராய முதலியார்
(தருக்க வேதாந்த பேராசிரியர்)



| | | |
|---|---|---|
| பிராணாயாமம் | – | வளிநிலை |
| பிரத்யாகாரம் | – | தொகை நிலை |
| தாரணை | – | பொறை நிலை |
| தியானம் | – | நினைதல் |

இங்கு 'புலன்வினை மாறி' என்றமையான், இயமம், நியமம் ஆசனம் (இருப்பு), பிராணாயாமம் (வனிநிலை), பிரத்யாகாரம் (தொகை நிலை) தாரணை (பொறை நிலை), தியானம் (நினைதல்), சமாதியென்னும் எண்வகை யோகவுறுப்புக்களுள் பிரத்யாகாரம், தாரணை என்ற இரண்டையுமே யுணர்த்தினார்; இவை நனவிற் சுமுத்திக்கு முக்கிய சாதனமாதலின்.

நூல் : சசிவன்ன போதம் (1930) பக்கம் - 141
உரையாசிரியர் : காஞ்சி நகர் ஆ. செங்கல்வராய முதலியார்
(தருக்க வேதாந்த போதகாசிரியர்)



## Carbonic Acid gas - நச்சுக் காற்று

நாமும் ஏனைச் சிற்றுயிர்களும் உட்கொள்ளும் உயிர்க்காற்று உள்ளே சென்றவுடன் அழுக்காகிப் பின் வெளிப்பட்டு விடுகின்றது. அப்போது அது நச்சுக் காற்றாய் (Carbonic Acid gas) மாறி விடும். இந்நச்சுக் காற்றையே திரும்பவும் நாம் உட்கொள்வமாயின் உடனே இறக்க வேண்டுவதுதான்.

நூல் : ஏன் புலால் மறுத்தல் வேண்டும்? (1930)
பக்கம் - 53
நூலாசிரியர் : பண்டிதர் பாலசுந்தரம் பிள்ளை



## Criminal Code - குற்றச் சட்டம்

மெக்காலே 'சட்டம் இயற்றும் குழு'வின் தலைவராக இருந்து, இந்தியாவில் குற்றச் சட்டம் (Criminal Code) இயற்றினார். அச்சட்டம் இன்றும் இந்திய அறிஞர் அனைவராலும் பாராட்டப்படுகின்றது.

நூல் : மெக்காலே பிரபு (1930) பக்கம் : 55
நூலாசிரியர் : பி.எஸ். இராஜன்



## Advocate General - தலைமை வழக்கறிஞர்

மெககாலே, இந்தியாவின் நிலை, சீதோஷ்ண அளவு, மக்கள் குணம், வாழ்க்கை முறை ஆகியவற்றைப் பற்றி எல்லாம் அறிந்து கொள்ள முயன்றார். வங்காளத்தில் தலைமை வழக்கறிஞராய் (Advocate General) இருந்து இந்தியாவைப் பற்றிய அனுபவம் மிக்காராய் இலண்டனில் வந்திருந்த போபஸ் ஸ்மித் என்பவரிடம் சென்று பலவாறு விசாரித்தார்.

நூல் : மெக்காலே பிரபு (1930) பக்கம் : 45, 46
நூலாசிரியர் : பி.எஸ். இராஜன்



## Fellow ship - உறுப்பினர் உரிமை

மெக்காலே, கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையால் நன்கு கௌரவிக்கப்பட்டது. அவருக்கு இருமுறை அத்தியக்ஷகரின் பொற்பதக்கம் அளிக்கப்பட்டார். இந்த இரு முறைகளிலும் அவர் அழகிய கவிதைகள் புனைந்ததற்காகவே பொற் பதக்கங்கள் பெற்றார். அவருக்கு, இவற்றுடன் கிரேவன் சர்வகலாசாலை உபகாரச் சம்பளமும் கிடைத்தது. இவை அனைத்தும் அவருக்குப் பெருஞ் சிறப்பை அளித்தன. சில ஆண்டுகள் கழிந்த பின்னர் அவருக்குச் சர்வ கலாசாலையின் உறுப்பினர் உரிமை (Fellow ship) கிடைத்தது.

மேற்படி நூல் : பக்கம் : 13, 14



## Honey Moon - தேன்மதி

தேன்மதி என்பது ஆங்கிலத்தில் ஹனிமூன் என்னும் வார்த்தையின் நேர் தமிழ் மொழி பெயர்ப்பாகும். ஆங்கிலத்தில் இவ்வார்த்தையின் அருத்தம் யாதாயினும் ஆகுக. அதனுடைய தமிழ்மொழி பெயர்ப்பு மிக்க அழகாகவும் ஆழ்ந்த கருத்தைக் கொடுக்கக் கூடியதாகவும் இருக்கிறது. தேன்மதி என்றால் கன்னி யென்னும் பதத்திற்கு இசைய, அப்பருவத்தில் நடந்து கொள்ள வேண்டிய நெறிக்குச் சிறிதும் பங்கமின்றி யொழுகிய ஒரு பெண்ணும், உண்மைப் பிரமசாரியாக விளங்கும் ஓர் ஆணும், பெற்றோர் மற்றோரால் விவாகம் எனப்படும் சடங்கின் வழியதாக இன்ப சுகத்தை அனுபவித்தலே யாகும்.

இதழ் : விவேக போதினி, ஜூலை 1930
தொகுதி : 22 பகுதி - 7
கட்டுரையாசிரியர் : ச. தா. மூர்த்தி முதலியார்



## பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர்

மதங்களின் ஏற்றத் தாழ்வை யுன்னி யானை கண்ட குருடர்போல் பரஸ்பரம் (ஒருவருக்கொருவர்) கலகம் விளைவித்துக் கொள்ளா நிற்கும் மதஸ்தர்களென்பான், 'தூயதிது தீயதிது வென்னு மாக்கள்' என்றும், இவ்வாறு மதஸ்தர்கள் தத்தம் சித்தாந்தத்திற் கேற்ற தத்துவத்தைக் கொள்ளினும் அவர்கள் யாவருக்கும், விரோதமின்றி அவ்வத் தத் வமாயிலங்குபவன் இறைவன் என்பான் 'அது வதுவா யிறை யிருக்கும்' என்றும், அதுபோல் யாமும் மதஸ்தர்க ளெல்லாரோடும் விரோதமின்றி யொழுகுவோமாக வென்பான், 'இறை இருக்கும் படியேயா யிருக்க' என்றும் கூறினார்.

நூல் : சசிவன்ன போதம் (1930) பக்கம் - 9
உரையாசிரியர் : காஞ்சி நகர் ஆ. செங்கல்வராய முதலியார்
(தருக்க வேதாந்த போதகாசிரியர்)



## பீதாம்பரம் - மின்நூல் ஆடை

நூல் : புள்ளிருக்கும் வேளூர் தேவாரம் (1929)
பதிப்பித்தவர் : ச. சோமசுந்தர தேசிகர்
(வைத்தீசுவரன் கோயில்)



| | | |
|---|---|---|
| ஈசானம் | – | ஆளுதல் |
| தற்புருடம் | – | காத்தல் |
| அகோரம் | – | அழித்தல் |
| வாமதேவம் | – | விளக்கல் |
| சத்தியோசாதம் | – | தோற்றுவித்தல் |

திருமறைக் காட்டிலே பகவன் என்று ஒருவனிருந்தான். சீரிய ஒழுக்கம் பெற்றவன். சோமன், சூரியன், அக்கினி என்ற மூன்று விழிகளையுடையவராயும், ஈசானம் (ஆளுதல்), தற்புருடம் (காத்தல்), அகோரம் (அழித்தல்), வாம தேவம் (விளக்கல்), சத்தியோ சாதம், (தோற்றுவித்தல்) என்கின்ற ஐந்து முகங்களையுடையவராயும், இராசத வடிவத்திற் றோன்றிய பிரமன், தாமத வடிவிற் றோன்றிய விஷ்ணு, சாத்வீக வடிவிற்றோன்றிய ருத்திரன் முதலியவர் ளுக்கு முதல்வராக வீற்றிருக்கின்ற சிவபெருமானை, நாடோறும் அன்போடு போற்றும் தன்மையை யுடையவன்.

நூல் : திருக்குடந்தைப் புராண வசனம் (1932) பக்கம் - 78
நூலாசிரியர் : பு. து. இரத்தினசாமி பிள்ளை



## அப்பாசாமி - அண்ணல் தங்கோ (1932)

| | | |
|---|---|---|
| நவம் | – | புதுமை |
| சின்மயம் | – | ஞானவடிவு |
| பூரணம் | – | நிறைவு |
| பஞ்சவர்ணம் | – | ஐந்நிறம் |
| மங்கல சூத்திரம் | – | தாலிக்கயிறு |
| மாணிக்கம் | – | செம்மைமணி |
| மோக்ஷ மார்க்கம் | – | முத்திநெறி |

நூல் : திருவருட்பா மூலமும் உரையும் நெஞ்சறிவுறுத்தல் (1932)
உரையாசிரியர் : மகாவித்வான் - சித்தாந்த ரத்நாகரம், அரன்வாயல் வேங்கட சுப்பிப்பிள்ளை.



## Artesian Well - தானாகவே தண்ணீர் வெளியாகும் கிணறு

மகாமக வருடத்தில் நகரபரிபாலன சபையார் தண்ணீரிறைத்துச் சேறள்ளி மணலிட்டு வருகின்றனர். இவ்வருஷம் ஒரு தீர்த்தத்தில் தானாகவே தண்ணீர்

வெளியாகும் கிணறு (Artesian Well) உண்டாக்க முயற்சித்ததில் பயன் பெறவில்லை.

நூல் : திருக்குடந்தை புராண வசனம் (1932)
மகாமக தீர்த்த மகிமைப் படலம், பக்கம். 51
நூலாசிரியர் : பு.து. இரத்தினசாமி பிள்ளை
(கும்பகோணம் பஜார் போஸ்ட் மாஸ்டர்)



## Tennis - நிலைச்செண்டு

நிலைச்செண்டு என்பது நின்ற நிலையிலிருந்தே பந்துகளை வீசி விளையாடுவது போலும். (தற்காலம் (Tennis) டென்னிஸ் முதலியன போல)

நூல் : சேக்கிழார் (1933)
நூலாசிரியர் : கோவை - வழக்கறிஞர்
சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார், பி.ஏ.,



## அவபிருதம் - முடிவு

பிரமதேவர் கும்பேசருக்கு ஒன்பது நாள் உத்சவம் நடத்திய பின்னர், பத்தாம் நாள் அவபிருத ஸ்நானம் நடத்தி உத்சவத்தை பூர்த்தி செய்த விஷயம் ஈண்டு கூறப்படும். அவபிருதம் – முடிவு; இங்கு உத்சவ முடிவின் நீராட்டு.

நூல் : கும்ப கோண ஸ்தலபுராண வசனம் (1933)
மகாமக தீர்த்த மகிமை, பக்கம் - 45
நூலாசிரியர் : ஸ்கூல் இன்ஸ்பெக்டர் சாமிநாத முதலியார்



## Oral Evidence - வாய்மொழிக் கூறு
## Documentary Evidence - சுவடிக் கூறு

ஆவணம் என்பது, ஒரு வழக்கைத் தீர்மானிக்க உதவும் சுவடி ஓலை முதலிய எழுத்துச் சீட்டுக்கள். அயலார் காட்சி என்பது வழக்கு நிகழ்ச்சியை கண்டார் சொல்வது. இவை முறையே (Oral Evidence) வாய்மொழிக்கூறு என்றும், (Documentary Evidence) சுவடிக் கூறு என்றும் தற்கால ஆங்கில நீதிமுறையில் பேசப்பெறும்.

நூல் : சேக்கிழார் 1933 (முதற்பதிப்பு)
நூலாசிரியர் : கோவை வழக்கறிஞர்
சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார், பி.ஏ.,



## Picture Gallery - ஓவியக்கூடம்

பேர் பெற்ற பெரியாரால் தீட்டப்பட்ட ஓரழகிய ஓவியம் இருந்தது. ஒரு கோடீஸ்வரன், கலைகளின் அருமை சிறிது மறியாதவன், புகழ் கருதி அதை வாங்கித் தன் ஓவியக் கூடத்தில் (Picture Gallery) வைத்தான். அக்கூடமானது ஒரு கலைஞன் ஆட்சிக்குட்பட்டிருந்ததால், அக்கலைஞன் அவ்வோவியத்தைக் காணுந்தோறும், மகிழ்ச்சியும் கிளர்ச்சியும் உற்றான்.

நூல் : கட்டுரை மலர் மாலை 1933
கட்டுரை : செல்வமும் வறுமையும், பக்கம் - 102
கட்டுரையாசிரியர்: சாமி. வேலாயுதம் பிள்ளை, பி.ஏ., எல்.டி.,
(தலைமை ஆசிரியர், போர்டு கலாசாலை,
அய்யம்பேட்டை, தஞ்சம் ஜில்லா)



## பன்னசாலை - இலை வீடு

காவிரியாற்றின் கரையில் (பன்னசாலை) இலை வீட்டில் சுபத்திரையான, தன் மனையாளோடு பரதன் வாழுநாளில் ஒருநாள் அப்பரதன், அரிய தவஞ் செய்தாலன்றி அருமகவைப் பெறலாகுமா? ஆதலால் இங்கிருந்து யான் என்செய்வேனென்று தன் மனையாளோடு கூறினன்.

நூல் : திருத்துருத்திப் புராணம் (1933)
திருவாலங்காட்டுப் படலம், பக்கம் - 117
உரைநடை,
குறிப்புரை : ப. சிங்கார வேற்பிள்ளை
(குற்றாலம், போர்டு உயர்தரக்
கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்)



## Museum - பொருட்காட்சிச் சாலை

## Scientist - அறிபொருள் வல்லுநர்

நான் ஒரு பெரிய பொருட்காட்சிச் சாலைக்குச் சென்றேன். ஓர் அறிவில்லாப் பணக்காரன், அதன் உயர்வை உணராதவன். அதைத் தனதென்று பெயரிட்டுக் கொண்டிருந்தான். ஆனால், அதன் மேற்பார்வையாளராகிய ஓர் அறி பொருள் வல்லுநர் (Scientist) அதிலுள்ள பொருள்களுள் ஒவ்வொன்றின் அருமையையும் உணர்ந்து, அவற்றின் மெய்ப்பொருள் காண்பதில் கண்ணுங் கருத்துமாய், அவைகளைத் தேடி ஆராய்ந்து அடுக்கி வைப்பதில் தம் வாழ்நா ளெல்லாவற்றையும் செலவழித்தவராய் இருந்தார்.

நூல் : கட்டுரை மலர் மாலை, பக்கங்கள் - 101, 102 - 1933



## Will - இறப்பு ஏற்பாடு

ஓர் அரிய விருந்திற்கு ஓரறிவாளர் வந்திருந்தார்; ஒரு பணக்காரனும் வந்திருந்தன். பணக்காரன் தற்பெருமை வாய்ந்தவனாதலின், அறிவாளர் அவனை அணுகவில்லை. அதனால் மனம் புழுங்கிய செல்வன், மதிவலாரை நோக்கி, யான் ஒரு கோடீஸ்வரன் என்பது உனக்குத் தெரியாதா? – எனக் கடுங்குரலில் கழறினன். அதற்கவர் மிக்க அமைதியுடன், 'அவ்வளவுதான் உனது பெறுமானமென்பது எனக்குத் தெரியும் என்றார். இத்தகைப் பெரியாரொருவர், யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் உயரிய உணர்வுடன் அழகுபட எழுதி வைத்திருக்கிற இறப்பு ஏற்பாடு (Will) பின்வருமாறு அமைந்துள்ளது.

நூல் : கட்டுரை மலர் மாலை 1993
கட்டுரை : செல்வமும் வறுமையும், பக்கம் - 105, 106



## க.பா. சந்தோஷம் - மகிழ்நன் (1934)

மகிழ்நன் ஆராய்ச்சிக் கட்டுரைகள்

இந்நூலிலே தொகுக்கப் பெற்ற கட்டுரைகள் அனைத்தும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் பத்தாண்டுகளாக வெளியிடப் பெற்றுவரும் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் தாளிற்கு யான் இடையிடையே எழுதி வந்தனவாகும்.

ஆங்கில மொழியில் நல்லிசைப் புலவர்களான ஸ்டீல் (Steele), அடிசன் (Addison), கார்லைல் (Carlyle), கோல்ட் ஸ்மித் (Gold - smith) முதலியவர்கள் சொற்சுவை பொருட்சுவை நகைச்சுவை நிரம்ப எழுதிய கட்டுரைகள் அம்மொழி பயிலும் மாணவர்கட்கு உவகையூட்டிப் பயன்படுவன போலத் தமிழ் பயிலும் மாணவர்கட்கு இந்நூற் கட்டுரைகள் பயன்படுமென்று கருதுகின்றேன். இதனைக் கல்லூரித் தலைவர்களும், தமிழாசிரியர்களும், மாணவர்கட்குப் பாட புத்தகமாக ஏற்று உதவி, என்னை ஊக்குமாறு அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

மகிழ்நன்

நூல் : மகிழ்நன் ஆராய்ச்சிக் கட்டுரைகள் (1934) பக். 7, 8
நூலாசிரியர் : மகிழ்நன்



## பிராணாயாமம் - மூச்சடக்கி விடுதல்

உடற்பயிற்சி தேக உழைப்பில்லாத உடலின் நலத்திற்கு இன்றியமையாததது. நடத்தல், மலையேறுதல், கருவியின்றி உடற்பயிற்சி செய்தல்,

தோட்டம் பயிரிடுதல், மரமறுத்தல், மூச்சடக்கி விடுதல் (பிராணாயாமம்) முதலியன சாதாரணமான உடற்பயிற்சி முறைகளாகும்.

நூல் : உடல் நூல் (1934), பக்கம் - 41
நூலாசிரியர் : கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,

முத்துகிருஷ்ணன் – மணி நீலன்



## Anatomy - உடற்கூற்று நூல்
## Physiology - உடற்செயல் நூல்

உடலின் பல பகுதிகளின் அமைப்பைப் பற்றிக் கூறுண் நூல் (Anatomy) உடற் கூற்று நூலெனப்படும். அவற்றின் செயலைப் பற்றிக் கூறும் நூல் (Ph}siology) உடற்செயல் நூலெனப்படும். இரண்டும் உடல் நூலென்பதிலடங்கும்.

நூல் : உடல்நூல் (1934) முன்னுரை : பக்கம் - 1
நூலாசிரியர் : கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,



## Proto - plasm - முதற் சத்து

ஒரு நீர்த்துளியைப் பூதக் கண்ணாடி வழியாய்ப் பார்க்கும் பொழுது அதில் காணப்படும் மிகச் சிறிய உயிர்களின் உடலொன்றினை நுணுகி நோக்கின் அது குழைவான கண்ணாடி பேன்ற சத்தின் நுண்ணிய பிண்டமாகக் காணப்படும். அதனை அறிவியல் நூலார் முதற்சத்தென்பர் (Proto - Plasm). இம் முதற் சத்தானது மிக நுட்பமான உணவுத் துகள்களையுடையது. அதன் ஒரு பகுதியில் வித்துப் போன்ற ஓரிடம் காணப்படும். அதுவே அதன் உயிர்ப்பகுதி.

நூல் : உடல் நூல் (1934) முன்னுரை - பக்கம் - 2
நூலாசிரியர் : கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.,ஏ., எம்.எல்.,



## Living Cell - உயிர்வாழ் சிற்றறை, சிற்றணுக் கூடு

வித்தோடு கூடிய முதற் சத்தினை உயிர்க் கருவென்னலாம். அது ஒரு சிற்றறை போன்றிருத்தலால் அதனை உயிர்வாழ் சிற்றறை (Living Cell) யெனவும் சிற்றணுக் கூடெனவும் நூலோர் கூறுவர்.

மேற்படி நூல் : முன்னுரை : பக்கம் - 2



## Amoeba - திரிபுயிர்

நீர்த்துளியிலுள்ள புழுக்கள் பலவற்றின் உடம்புகள் ஒரு சிற்றறையே யுடையன. அவ்வுயிர்களின் உடம்பு அடிக்கடி மாறுவதால் அவற்றைத் திரிபுயிர் (Amoeba) என்பர்.

மேற்படி நூல் : முன்னுரை - பக்கம் - 3



## Cells - அணுக்கூடுகள்

எல்லா உயிரினுடம்புகளும் மிக நுண்ணிய சிற்றறை அல்லது அணுக்கூடுகளால் (Cells) ஆக்கப்பட்டுள்ளன. அவை யொவ்வொன்றும் ஒரு வித்துடன் கூடிய முதற்பிண்டமாக இருக்கின்றது.

மேற்படி நூல் : முன்னுரை பக்கம் - 4



## Muscles - தசைத் திரள்கள்

தசைத் திரள்கள் எலும்போடு பிணைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் சுருங்குவதனால் எலும்புகள் அசைந்தியங்குகின்றன. இடுப்பிற்குமேல் கழுத்துவரையுள்ள உடம்பில் மேற்பொந்து ஒன்றும் கீழ்ப்பொந்து ஒன்றும் இருக்கிறது. இரண்டையும் நெஞ்சின் குறுக்காகவுள்ள நீண்ட தசைத்திரள் ஒன்று Diaphragm பிரிக்கின்றது. மேற் பாகம் மார்பென்றும் கீழ்ப்பாகம் வயிறென்றும் உலக வழக்கில் குறிக்கப்படும்.

மேற்படி நூல் : உடல் நூல் (1934)
உடலின் பொது அமைப்பு., பக்கம் - 6



## Heart - நெஞ்சப்பை

மார்பின் நடுவில் இடப்பக்கத்தில் இருதயமென்னும் நெஞ்சப் பை (Hearts) அமைந்திருக்கினறது. சுவாசப் பை (lungs) இரண்டும் இருதயத்திற்கு இடப்பக்கமும் வலப்பக்கமுமாக அமைந்திருக்கின்றன. வயிற்றின் மேல் பாகத்தில் வலது பக்கத்தில் நுரையீரல் (Liver) அமைந்திருக்கின்றது. இடது பக்கத்தில் மேல் வயிறு அமைந்திருக்கின்றது. இவ்விரண்டிற்கும் கீழே சுருண்டிருக்கும் குடர் உள்ளது. வாயில் நின்று இரைக்குழலானது மேல் வயிற்றுக்குள் செல்லுகிறது. அதினின்று அது குடர்க்குள் போகின்றது. உணவானது இக்கருவிகளில் சீரணமாகின்றது. மேல் வயிற்றிற்கு இடப்பாகம் மண்ணீரல் (Spleen) என்னும் சிறுகருவி இருக்கின்றது.

மேற்படி நூல் : உடல்நூல் (1934)
உடலின் பொது அமைப்பு பக்கங்கள் - 6,7



## Windpipe - காற்றுக்குழல்
## Gullet - இரைக்குழல்
## Larynx - குரல் வளை

வாயின் பின்புறத்திலிருந்து தொண்டை வழியாகச் சுவாசப் பைக்கு ஒரு குழல் செல்கிறது. அதற்குக் காற்றுக் குழல் (Windpipe) என்று பெயர். அதற்குப் பின்னேதான் இரைக்குழல் (Gullet) செல்கின்றது. காற்றுக் குழலின் மேற்பகுதி குரல் வளை (Larynx) யெனப்படும்.

மேற்படி நூல் : உடல் நூல் (1934)
உடலின் பொது அமைப்பு பக்கம் - 7



## Foramen Magnum - பெருந்துளை

கபால எலும்புகளுக்குக் கீழாகவுள்ள விசாலமான அறையில் மூளை இருக்கிறது. கபாலத்தினடியில் பெருந்துளை (Foramen magnum) என்னும் பெரிய வட்டவடிவமான துவாரமிருக்கிறது. அது முதுகுக் கால்வாயோடு தொடர்புடையது.

மேற்படி நூல் : உடல் நூல் (1934)
எலும்புச் சட்டம், பக்கம் -9



## Joints - பொருத்துக்கள்

உடம்பில் பலவகையான பொருத்துக்க ளுள்ளன. ஒன்றின் மேலொன்று நழுவுதற்கேற்றவாறும் கதவுக் கீல் போலப் பொருந்தி அசைதற்கேற்றவாறும் பந்தும் கிண்ணமும் போல் பொருந்துதற் கேற்றவாறும் சுழியாணிபோல் பொருந்துமாறும் பொருத்துக்கள் அமைந்துள்ளன.

மேற்படி நூல் : உடல் நூல் (1934)
பொருத்துக்கள் - பக்கம், 15, 16



## Connective Tissue - சேர்ப்பு இழை

உடம்பின் மெல்லிய பாகங்களும் தசைகளும் பிற கருவிகளும் மெல்லிய சேர்ப்பிழைப் பின்னல்களால் ஒன்று சேர்த்துக் கட்டப்பட்டிருக்கின்றன. சேர்ப்பிழையானது சிலம்பி வலையினும் மிக நுண்ணிய இழைகளாலாய வலைகளா லாக்கப்பட்டுள்ளது. அவற்றில் சில வெள்ளையாயும் இறுக்கமாயுமுள்ளன. மற்றவை மஞ்சள் நிறமாயும் தொய்வாயு முள்ளன.

மேற்படி நூல் : உடல் நூல் (1934) சேர்ப்பு இழை - பக்கம், 17



## Capillaries - மயிரிழைக் குழல்கள்

இரத்தத்திலுள்ள சிறு கூடுகள் சுவாசப்பை வழியாகச் செல்லுங்காலத்தில் அங்குள்ள காற்றிலுள்ள உயிர்க்காலினை ஏற்றுக் கொள்கின்றன. அவைகள் கருவிகளிலும் ஊனிழைகளிலுமுள்ள மயிரிழைக் குழல்கள் (Capillaries) வழியாகச் செல்லும் போது உயிர்க்காலினை அவற்றில் விட்டு விடுகின்றன.

மேற்படி நூல் : உடல் நூல் (1934), இரத்தம் - பக்கம் - 22



## Lungs - மூச்சுக் கருவிகள்

மூச்சுக் கருவிகளென்பன நெஞ்சிற்குமேல் மார்பகத்திலுள்ள இரண்டு தொய்வுள்ள பைகளாகும். அப்பைகள் கடற் பஞ்சு போன்ற அமைப்புள்ளன. அவற்றிலுள்ள துவாரங்கள் காற்று நிறைந்திருப்பன.

மேற்படி நூல் : உடல் நூல் (1934), பக்கம் - 29



## Oxygen - உயிர்க்கால்

நெஞ்சத்தின் வலது கீழறையில் நின்று சுவாசப் பைக்குச் செல்லும் கருப்பு இரத்தமானது அங்குள்ள மயிரிழைக் குழல்களுக்குள் பாயும். அவற்றிற்கும் காற்றுத் துவாரங்களுக்கு மிடையே ஈரமான மெல்லிய தாள் மட்டுமே யிருப்பதால் அவற்றிலுள்ள இரத்தமானது காற்றிலிருந்து உயிர்க்காலிலை (Oxygen) வாங்கிக் கொள்ளவும் காற்றிற்குத் தன்கணுள்ள கரிப்புளிப்பை (Carbonic Acid)க் கொடுத்துவிடவும் இயலும்.

மேற்படி நூல் : உடல் நூல் (1934), பக்கங்கள் - 29, 30



## Vitamins - உயிர்ச்சத்து

உயிர்ச்சத்து : (Vitamins) வெடியுப்புச் சாரம் கலந்த உயிர்ச்சத்துக்கள் உணவுப் பொருள்களில் கலந்துள்ளன என்றும் அவை ஜீவாதாரமா யுள்ளவை யென்றும் அவற்றைச் சில நாட்களுக்கு முன் மேலைநாட்டு அறிஞர்கள் கண்டனர். பச்சைக் காய்கறியிலும் பழங்களிலும் பாலிலும் வெண்ணெயிலும் மூளை தவிடு போக்காத அரிசியிலும், நன்றாகப் புடைக்கப்படாத கோதுமை மாவிலும் அவை உள்ளன.

மேற்படி நூல் : உடல்நூல் (1934) பக்கம் - 38



## Red corpuscles - செங்கூடுகள்

இரத்தத்திலுள்ள செங்கூடுகள் (Red corpuscles) தட்டையாயும் வட்டமாயும் பாதி வளைவுள்ள தாயுமிருப்பன. ஓரங்களைப் பார்க்கிலும் மத்தியில் மெல்லியதா யிருக்கும். அவற்றில் நடுப்புள்ளி (Nucleus) யொன்றுங் கிடையாது. இந்தச் செங்கூடுகள் நிலையான வாழ்க்கை யுடையனவல்ல.

மேற்படி நூல் : உடல்நூல் (1934), பக்கங்கள் - 22, 23



## Side Curtain - நடைப்படுதா

ஒரு முறை இவ்வண்ணம் நடந்தபொழுது வள்ளி வேடம் பூண்ட ஆக்டர் – அவர் கொஞ்சம் புத்திசாலி – கொஞ்ச நேரம் நின்று பார்த்துவிட்டுச் சரேலென்று நடைப்படுதாவுக்குள் நுழைந்து போய்விட்டார். அப்பொழுதும் வன்னியின் வர்ணனையை நமது அயன் ராஜபார்ட் ஆக்டர் விட்டபாடில்லை. பாட்டின் பல்லவியில் சங்கதிகளையும், ஸ்வரங்களையும் போட்டுப் பாடித் தீர்த்துவிட்டார். பாட வேண்டிய பாட்டுக்களை யெல்லாம் பாடியான பிறகு திரும்பிப் பார்த்தார். வள்ளியை மேடை மீது காணோம். அவர் விழித்தார். சபையோர் சிரித்தனர்.

இதழ் : விநோதன் (1934)
மலர் - 2. இதழ் - 3
கட்டுரை : ஆட்டமும் பாட்டும், பக்கம் - 49
கட்டுரையாளர் : ராவ்பகதூர். ப. சம்பந்த முதலியார், (ரிடையர்ட் ஜட்ஜ்)



## இரேழி - இடங்கழி

அவ்வளவில் அவ்வீட்டின் இடங்கழி (இரேழி) யில் படுத்திருந்த அவரது அன்னை தன் மகனை விளித்து 'குழந்தாய்! இத்தன்மையை பாபத்திற்கு ஒரு தரம் – ராம – வெனக் கூறினால் போதும் என்பதாய் உனது தந்தை சொல்லக் கேட்டிருக்கின்றேன்; அப்படிக்கிருக்க, நீ மும்முறை கூறுமாறு சொல்கின்றாயே!' எனக் கேட்டனள்.

நூல் : ஸ்ரீ பகவன் நாம போதேந்திர சுவாமிகள் திவ்விய சரிதம் (1934) பக்கம் - 27
நூலாசிரியர் : மாந்தை. சா. கிருஷ்ணய்யர்



## Room - உள்ளில்

ஓர் வீட்டின் தாழ்வாரத்தில் ஓர் அடி கண்ணாடி சுவரில் இருக்க, இரண்டு சிறு பையன்கள் கண்ணாடியைப் பார்க்க அவர்கள் சாயல் நிழல் கண்ணாடியில் தெரிய, அந்நிழல் சுவருக்கு உள் ஹாலில் இரண்டு தப்படியில் கண்டார்கள். சிறுவர்கள் பார்த்துக் கையை ஓங்கினார். நிழலும் ஓங்கியது. காலைத் தூக்கினார்கள். நிழலும் தூக்க அந்த ரூமில் (உள்ளில்) இரண்டு பயல்கள் நம் வீட்டில் இருந்து கொண்டு கையை ஓங்கி அடிக்க வருகிறான், ரூமைத் திறந்து இழுத்துப் போட்டு அடிப்போம் வாங்கடா – என்று கதவைத் திறக்க ஓடினான்.

நூல் : அநுபவ ஆத்மஞான விளக்கம் (1934) பக்கம் - 12
நூலாசிரியர் : வைத்திலிங்க சுவாமிகள் மேலணிக்குழி குடிக்காடு.



## Homeopathy - ஒப்புமுறை வைத்தியம்

பல நோய்கள் இயற்கைக்கு மாறான வாழ்க்கையினாலேயும் நல்லுணவு கொள்ளாமையினாலும் ஏற்படுகின்றன. ஒழுங்கான வாழ்க்கையும் சுகாதாரமான உணவும் நோயைத் தடுப்பன என்று ஒப்புமுறை (Homeopathy) வைத்தியத்தைக் கண்டு பிடித்த ஹைனமன் (Hahenemann) என்னும் ஜர்மானிய வைத்தியர் சொல்லுகின்றனர்.

நூல் : உடல்நூல் (1934), பக்கம் - 35
நூலாசிரியர் : கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,



## Record - குறிப்பேடு

(வேதப்புராதனம்) வேதங்கள் மனிதர்களின் பழங்காலத்துக் குறிப்பேடு (Record) ஆகும். இவ்வாறே ஆங்கிலேயர்களும் நம்புகின்றனர்.

நூல் : ஆரிய சித்தாந்தம் (1934), பக்கம் - 6
நூலாசிரியர் : பண்டிட் - கண்ணையா



## Belt - அரைப்பட்டிகை

இருவரும் விமானத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டனர். டிரைவர் ஒவ்வொருவருக்கும் ஓர் அரைப் பட்டிகை (Belt) போட்டு, ஏரோபிளேனிலுள்ள பீடத்திற்கும் அவர்கள் அரைக்கும் மார்புக்கும் தொடுத்துக் கட்டினார்; ஏரோபிளேன் மெல்ல நகர்ந்தது; சிறிது விரைவாக ஓடிற்று; ஓடும்போதே அது மேலே எழுந்தது; பின்னும் மேலே எழுந்தது.

நூல் : ஆகாய விமானம் (1934), பக்கம் - 14
நூலாசிரியர் : கா. நமச்சிவாய முதலியார்
(சென்னை இராஜதானிக் கலாசாலை மாஜித் தமிழாசிரியர்)



## பர்தா - மறைப்பு அங்கி

வட இந்தியாவிலே இந்துக்களுக்குள் மறைப்பு அங்கி (பர்தா) அணியும் பழக்கம் இருந்து வருகின்றது. இப்பழக்கம் பழங்கால இந்தியாவில் இருக்கவில்லை. முகம்மதியர்களிடமிருந்தே இந்துக்கள் இப்பழக்கத்தைக் கைக்கொண்டனர்.

நூல் : ஆரிய சித்தாந்தம் (1934), பக்கம் : 29
நூலாசிரியர் : பண்டிட் - கண்ணையா



## ரோமத் துவாரங்கள் - மயிர்க் கால்கள்

நமது உடலில் மேற்புரம் முழுவதையும் தோல் மூடிக் கொண்டு இருக்கிறது. அந்தத் தோல் சில இடங்களில் அரைக்கால் அங்குல கனமும், சில இடங்களில் கால் அங்குல கனமும் இருக்கிறது. நமது தோல் முழுவதிலும் மிகச் சிறிய துவாரங்கள் நிறைந்திருக்கின்றன. அவைகளுக்கு மயிர்க் கால்கள் அல்லது ரோமத் துவாரங்கள் என்று பெயர்.

நூல் : மூன்றாம் பாட புத்தகம் (1934), பக்கம் : 91
(நான்காம் வகுப்பு)
நூலாசிரியர் : கா. நமச்சிவாய முதலியார்
(சென்னை, இராஜதானி கலாசாலை
மாஜித் தமிழாசிரியர்)



## Bus - பெருவண்டி

சென்னையுள்ளூரில் ஓடும் பெருவண்டி (Buses)களில், ஏறுகிறவர்களிடம் கூலி வாங்கினாலும் சீட்டு தருவதில்லை. அதனால் ஒருவரிடம் பலமுறை ஒரே பிராயணத்தில், கார் நடத்துவோன் காசு கேட்க நேரிடுகிறது.

கா. சுப்பிரமணிய பிள்ளை எம்.ஏ,எம்.எல்.,
உயர் பதிப்பாளர், 'மணிமாலை' 1935
பக்கம் - 148-149



## Open Book - விரிசுவடி

பிராணிகளுக்கெல்லாம் [illegible]ட்டவன் தானே யென்று மனிதன் பெருமை பாராட்டுகிறான். ஆயினும், ஒவ்வொரு விஷயத்திலும் இயனிலை (Nature) மனிதனுக்கு முந்திக் கொண்டு, அவனுக்கு வழிகாட்டுகின்றது. இயனிலை (Nature) என்பது ஒரு விரிசுவடி (Open Book) அறிவுள்ள மாக்களெல்லாரும் இந்தச் சுவடியினின்றும் தங்கள் தங்கள் பாடங்களைப் படித்துப் பயின்று வருகிறார்கள்.

நூல் : விவேக சந்திரிகை மூன்றாம் புத்தகம் (1935)
நூலாசிரியர் : தி. அ. சாமிநாத ஐயர் (ஆரியா பத்திரிகை ஆசிரியர்)



Binoculars – குழற் கண்ணாடி
Carbon – கரிச்சத்து
Elements – இயற்பொருள்கள்
Degree – கூறி
Indigo – அவிரி நிறம்
Orange – கிச்சிலி நிறம்
Parallel – நேருக்கு நேர்
Photo Graphic camera – புகைப்படப் பெட்டி

| | | |
|---|---|---|
| Milky Way | – | பால் வழி |
| Solar System | – | சூரிய குடும்பம் |
| Spectro Scoe | – | ஒளி உடைக்கும் கருவி |

நூல் : சூரியன் (1935)
நூலாசிரியை : ஈ. த. இராஜேசுவரியம்மையார், எம்.ஏ., எல்.டி.
(சென்னை மேரியரசி கலாசாலை விஞ்ஞான சாத்திர ஆசிரியர்)



## Motor Cars, Buses - தற்செல்லிகள்

இக்காலத்தில் தற்செல்லிகள் (Motor, Cars, Buses) பெரு வழக்காக ஓரிடமிருந்து மற்றோரிடம் போவதற்கு அமைந்துள்ளன. அவற்றில் ஆட்களை விதித்த எண்ணிற்கதிகமாக ஏற்றுவது ஒரு தீரா நோய் ஆய்விட்டது.

நூல் : மணிமாலை (1935) பக்கம் - 148
நூலாசிரியர் : கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,



## Inventive Genius - கற்பனைத் திறல்

மனிதன் பெருமை பாராட்டிக் கொள்வதற்குக் காரணமாயுள்ள பல விஷயங்களுள் முக்கியமானது அவனுடைய கற்பனைத் திறல் (Inventive Genius) அஃதாவது, யந்திர தத்துவங்களை (Mechanical Principles) க் கண்டுபிடித்துப் பிரயோகித்து, அவை தன் காரியங்களுக்குப் பயன்படுமாறு செய்யும் சக்தியாம்.

நூல் : விவேக சந்திரிகை மூன்றாம் புத்தகம் (1935)
நூலாசிரியர் : தி. அ. சாமிநாத ஐயர்
(ஆரியா பத்திரிகை ஆசிரியர்)



## Oriental - கீழ்ச்சீமை

ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வொரு விதமான வாஸ்து முறை ஏற்பட்டிருக்கின்றது. ஆதலால் கட்டிட முறைகளுள் கிரீக்கு, உரோமன், காதிக்கு, ஓரியெண்டல் (கீழ்ச்சீமை) என்னும் பற்பல முறைகள் இருக்கின்றன.

நூல் : பக்கம் - 43



## Playing Cards - ஆட்டக்கடுதாசிகள்

புகையிலை ஆங்கிலேயரால் நமது நாட்டுக்குக் கொண்டு வரப்பட்ட சரக்காகும். அவ்வளவு நவீனமாக நமது நாட்டுக்கு வந்ததாயினும், அஃது எல்லா ஊர்களிலும், மூலை முடுக்குகளிலும் விலக்கின்றி, ஆட்டக்கடுதாசிகளை (சீட்டுகளை)ப்போல் (Playing Cards), வியாபித்திருக்கின்றது.

நூல் : விவேக சந்திரிகை மூன்றாம் புத்தகம் (1935)
நூலாசிரியர் : தி. அ. சாமிநாத ஐயர் (ஆரியா பத்திரிகை ஆசிரியர்)



## Inner Meaning - உள்ளுறைப் பொருள்

திருச்சிராப்பள்ளிக்கு அடுத்த ஸ்ரீரங்கத்திலுள்ள ஸ்ரீ ரங்கநாதர் திருக்கோயிலை இராத்திரி காலத்தில் தேவதைகள் வந்து கட்டினார்களென்றும், பொழுது விடியும் வரையில் எவ்வளவு வேலை செய்வதார்களோ, அம்மட்டோடு நிறுத்திப் பொழுது விடிந்தவுடனே அவர்கள் மறைந்து போய்விட்டார்களென்லும் சொல்வார்கள். அந்தக் காரணத்தினால், கோயிலைச் சுற்றி இன்றைக்கும் நாம் காணும் பெரிய கற்றூண்களின் மீது கட்டட மனமயாமல் அறை குறையாக நின்று விட்ட தென்றும் சொல்வார்கள். இதன் உள்ளுறைப் பொருளை மேலே விவரித்த இயற்கை வியாபாரங்களைக் கொண்டு ஊகித்துணர்ந்து தெளியலாமே.

நூல் : விவேக சந்திரிகை மூன்றாம் புத்தகம் (1935)
நூலாசிரியர் : தி.அ. சாமிநாத ஐயர் (ஆரியா பத்திரிகை ஆசிரியர்)



| | | |
|---|---|---|
| Wireless Telegraph | – | கம்பியில்லாத் தந்தி |
| Aeroplane | – | விண்ணூர் பொறி |
| Type writing Machine | – | எழுத்தடிக்கும் இயந்திரம் |
| Types | – | அச்செழுத்துக்கள் |
| Printing Blocks | – | உருவம் பதிக்கும் கருவிகள் |
| Compositors | – | எழுத்தடுக்குவோர் |
| Motor -Car | – | தாமியங்கி |
| Telephone | – | தொலைவிற் பேசுங் கருவி |

நூல் : இந்திய பத்திரிகைத் தொழிலியல், (1935)
நூலாசிரியர் : வி. நா. மருதாசலம்



## உஷ்ணமானி - சூடளந்தான்

சூரிய உஷ்ண ஆராய்ச்சிக் கருவியை உஷ்ணமானி என்பர். இதனை உலக வழக்கின்படி சூடளந்தான் என வழங்கலாம்.

நூல் : சூரியன் (1935), பக்கம் : 64
நூலாசிரியை : ஈ. த. இராஜேசுவரியம்மையார், எம்.ஏ., எல்.டி.,
(சென்னை மேரியரசி கலாசாலை விஞ்ஞான சாத்திர ஆசிரியர்)



## Lavatories - குளிப்புரை

வீட்டிலுள்ள சாக்கடைக் குழிகளையும், சாக்கடைகளையும், குளிப்புரைகளையும், கக்கூசுகளையும் ஒவ்வொரு நாளும் காலையில் தவறாமல் தண்ணீர் நிரம்ப வார்த்துக் கழுவ வேண்டும்.

நூல் : விவேக சந்திரிகை மூன்றாம் புத்தகம் (1935) பக்கம் -91
நூலாசிரியர் : தி.அ. சாமிநாத ஐயர் (ஆரியா பத்திரிகை ஆசிரியர்)



## பிளேக் - மகமாரி

பூபதி செந்தூரம் – இதை உட்கொண்டால் ஜுரம், ஜன்னி, வாந்திபேதி, வயிற்றுப்போக்கு, மகமாரி (பிளேக்), பித்தம், கிறுகிறுப்பு, சூலை, சூன்மம், சுவாசகாசம், சுபம், வாதம், உடல் வலி, பொருமல், அண்ட வாய்வு, சூதக வாய்வு, பக்கவாதம் முதலிய நோய்கள் தீருவதோடு பிள்ளை பெற்ற பெண்களுக்குண்டாகும் எல்லா நோய்களும், குழந்தைகளுக்கு உண்டாகும் மாந்தங்கள், தோஷங்கள், ஜுரம், ஜன்னி, இருமல் முதலிய சகல நோய்களும் குணமாகும்.

இதழ் : சித்தன் (ஓர் மாதாந்தரப் பத்திரிகை) 1935 ஜுன்
மாலை - 1. மணி - 6, பக்கம் - 208
கிடைக்குமிடம் : சாமி, விருதை, சிவஞான யோகிகள்,
சிவஞான சித்த பார்மஸி, கோவிற்பட்டி



## மந்திரம் - நிறைமொழி

பண்டைத் தமிழர் திருமண நிகழ்ச்சிகட்கும் இக்காலத் தமிழர் திருமண நிகழ்ச்சிகட்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடுகளைக் காணலாம்.

அக்காலத்தே இல்லாத புரோகித வேலை, வடமொழி மந்திரங்கள் (நிறைமொழி) தமிழ் மரபுக்கு மாறான பல செயல்கள் இன்ன பிறவும் இக்காலத் தமிழர் திருமணத்துள் இடம் பெற்றுத் தமிழ் மரபைக் கெடுத்துவிட்டன.

நூல் : தமிழர் திருமண நூல் (1939)
நூலாசிரியர் : வித்வான் மா. இராசமாணிக்கம் பிள்ளை, பி.ஓ.எல்.,
பகுதி : அறிவிப்பு, பக்கம் 1



## மறுமணம், மணமுறிவு

திருவாளர் வித்வான் இராச மாணிக்கம் அவர்கள் எழுதிய தமிழர் திருமணச் சீர்திருத்தக் குறிப்பினைப் படித்தேன். பண்டைத் தமிழர்களின் மணமுறைகளை எடுத்துக் காட்டுகளாலும், ஏதுக்களாலும் நன்கு விளக்கியிருக்கின்றனர்.

மணமுறையைத் திட்டம் செய்வதுடன், ஆடவர், பெண்டிர்களின் மறுமணம், மணமுறிவு முதலிய பொருள்கள் பற்றியும் மாநாடு முடிவு செய்யுமென நினைக்கின்றேன்.

நூல் : தமிழர் திருமண நூல் (1939) பக்கம் : 29, 30
பகுதி : தமிழ்ப் பெரியார் கருத்துக்கள்
த.வே. உமாமகேசுவரம் பிள்ளை, பி.ஏ., பி.எல்.,



## Typewriting machines - எழுத்தடிக்கும் பொறிகள்

எழுத்தடிக்கும் பொறிகளும் Typewriting Machines இந்திய பத்திரிகைத் தொழில் வளர்ச்சிக்கு அவ்வளவாக உதவுவதில்லை.

அக்கருவிகள் ஆங்கிலத்திற்கு இருப்பது போல இந்திய சுதேச மொழிகளுக்கு அவ்வளவு நல்ல அமைப்பிலே இல்லாமையால், நல்ல விளக்கமான அச்சுப் போன்ற எழுத்துக்களிலே செய்திகள் உடனுக்குடன் பதிப்பிக்கப்படுவதிலே அவ்வளவாகப் பயன்படுவதில்லை.

நூல் : இந்திய பத்திரிகைத் தொழிலியல் (1935), பக்கம் - 97
நூலாசிரியர் : வி. நா. மருதாசலம்



பாஷியம் — விருத்தியுரை
எமதர்மன் — அறக்கடவுள்

நூல் : வைணவ சமய வினாவிடை (1936), பக்கங்கள் 11, 13.
நூலாசிரியர் : காரைக்கால் நா. ஸ்ரீ காந்த ராமாநுஜதாசர்



## கருத்தா - இயற்றுவோன்

உபாதானத்தைக் கோசரிக்கும் அபரோக்ஷஞானம், செய்யும் இச்சை, முயற்சி இவற்றையுடைமை கருத்தா (இயற்றுவோன்)த்தன்மையாம்.

நூல் : தருக்க சங்கிரகமும் தருக்க சங்கிரக தீபிகையும் (1936)
மொழி பெயர்ப்பு : சி. சுப்பையா சுவாமி



## ஆதாரம் - பற்றுக்கோடு

அங்ஙனமாயினும் காலம் எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடு (ஆதாரம்) ஆகையால் எல்லா இலக்கணங்களுக்கும் ஆண்டு அதிவியாப்தி எனின்; அற்றன்று, எல்லாவற்றிற்கும் ஆதாரத்தை யுண்டாக்கும் (காலீக) சம்பந்தத்தினும் வேறான சம்பந்தத்தால் இலக்கணத்திற்கு ஒப்பியிருப்பதால்.

நூல் : பக்கம் - 15



## மூலகன்மம் - முதல் வினை

உயிர்கள் ஆணவத்தில் அழுந்திக் கிடக்குங்கால் பல பேதமான ஏற்றத் தாழ்வுள்ள ஆணவ சம்பந்தமுடையதாக இருந்திருத்தல் வேண்டும். அதனோடு இறைவன் அருள் சம்பந்தமும் உடையதாக இருந்திருக்கிறது. இவ்விருவகை சம்பந்தத்தால் உயிர்கள் அனாதியே பாவ புண்ணிய முடையதாயிருந்திருக்கின்றன. இதுவே மூலகன்மம் (மூலகன்மம் — முதல் வினை).

நூல் : சித்தாந்தம் பொன்மொழி (சிற்றுரை) (1936)
பக்கங்கள் -8, 9

நுலாசிரியர் : வித்வான் ம. பெரியசாமிப் பிள்ளை



## பரிசம் - தொட்டால் அறிதல்

உயிர் என்பது யாது? நான் என்னும் சொல்லால் குறிக்கப்படுவது எதுவோ அதுவே உயிர். எனது உடல் என்பதனால் உடலினின்று வேறானது உயிர். ஓசை, ஒளி, மணம், சுவை, பரிசம் (தொட்டால் அறிதல்) ஆகிய ஐம்புலன்களையும் மனம் புத்தி இவற்றின் உதவியால் அறிகின்றது எதுவோ அதுவே உயிர்.

நூல் : பக்கம் : 15



| | | |
|---|---|---|
| சப்தாலங்காரம் | – | சொல்லணி |
| அர்த்தாலங்காரம் | – | பொருளணி |
| உபமாலங்காரம் | – | உவமையணி |
| திருஷ்டாந்த அலங்காரம் | – | எடுத்துக்காட்டுவமையணி |
| அபூத உவமை | – | இல்பொருளுவமையணி |
| ரூபக அலங்காரம் | – | உருவக அணி |
| சந்தேக அலங்காரம் | – | ஐயவணி |
| வ்யதிரேக அலங்காரம் | – | வேற்றுமையணி |
| பிரதீப அலங்காரம் | – | எதிர்நிலையணி |
| பரிசுர அலங்காரம் | – | கருத்துடை அடைமொழியணி |
| ஸங்கர அலங்காரம் | – | கலவையணி |

நூல் : சிற்றிலக்கண விளக்கம் (1936)
பக்கங்கள் : 200, 201, 202, 203, 204, 205, 206
நூலாசிரியர் : கா. நமச்சிவாய முதலியார்



## Loudspeaker - ஒலிபெருக்குங் கருவி

திரு.பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியாரவர்கள் திருப்பணியாளர்கள் சார்பாகவும் சமாஜக் காரியதரிசி சமாஜத்தின் சார்பாகவும் தலைவர், சொற்பொழிவாளர் முதலிய அனைவருக்கும் நன்றி கூறினார்கள். தலைவர் அனைவர்க்கும் நன்றியும் வாழ்த்தும் கூறி முடிப்புரை பகர்ந்தார். இம் மகாநாட்டில்

ஒலி பெருக்குங் கருவி (Loudspeaker) சொற்பொழிவுகளை அனைவரும் அமைதியாக நெடுந் தூரத்திலிருந்தே கேட்கும்படிச் செய்தது.

இதழ் : சித்தாந்தம் (1937) மலர் : 10, இதழ் : 7
சொல்லாக்கம் : இதழாசிரியர்



## அங்கி - மெய்யுறை

மெய்யுறை – சட்டை. அங்கி யென்னும் வடமொழி வழக்குச் சொல்லி னுறுப்புப் பொருளுமிது.

நூல் : கதிரகாமப் பிள்ளைத்தமிழ் (1937) பக்கம் - 90



## Block - நிழற்கிழி

நூல் : கதிரகாமப் பிள்ளைத்தமிழ் (1937), பக்கம் : 26
நூலாசிரியர் : சிவங். கருணாலய பாண்டியப் புலவர்



## Lorry - பாரத்தமியங்கி

## Crane - ஓந்தி

## Share speculators - பங்கு எதிர்ப்பார்போர்

முன்னைப் பழம்பொருட் முன்னைப் பழம் பொருளை இப்பழைய முறைகளில் பழுதின்றிப் பணியாற்றியதன்றி அவனே பின்னைப் புதுமைக்குப் போர்த்துமப் பெற்றியனாகத் திகழ்வதை உணர்ந்தே நூதன் வழிகளைப் பின்பற்றி யிருப்பதும் போற்றத் தகுந்ததே. பாரத்தமியங்கி (Lorry) கொண்டு வெகு விரைவில் பாரப் பொருள் பெயர்த்தும், ஓந்தி கொண்டு பாரம் உயர்த்தியும், சாந்தாலை கொண்டு சாந்தரைத்து நற்சாந்துப் பட்டியார் எனவன்றி எளிய சாந்துபட்டியாராகியும் நீண்ட நாட்களில் நடைபெறும் வேலைகளைச் சின்னாளில் வெகு எளிதில் நயம்பட முடித்திருக்கும் நன்மை நயக்கத் தகுந்ததே.

நூல் : திருக்கொள்ளபூதூர்
திருப்பணிச் செல்வர் வாழ்த்து மஞ்சரி (1937), பக். : 3
திரட்டியவர் : சாமி. வேலாயுதம்பிள்ளை, பி.ஏ., எல்.டி.,
(கவிஞர் சுரதா அவர்களின் தலைமை ஆசிரியர்)
உரத்த நாடு போர்டு ஹைஸ்கூல் தலைமையாசிரியர்.



Crane - ஒந்தி

Share Speculators - பங்கு எதிர்பார்ப்போர்



## Attraction - ஒட்டுநிலை
## Repulsion - ஒட்டாநிலை

'நட்பெழுத்து', 'பகை எழுத்து' என வரும் பெயர்கள், சிவஞான யோகிகள் கண்ட குறியீடுகளாகும். இந்நட்பும் பகையும், எழுத்துக்களின் ஒட்டு நிலையும் (Attraction) ஒட்டா நிலையும் (Repulsion)மாம் இயல்பேயாதலின், இவ்வியல்பை, ஆசிரியர் தொல்காப்பியனார், எழுத்துக்களை எடுத்துக்கூறும் நூன்மரபிலேயே அடக்கிக் கூறியுள்ளார்.

நூல் : பொருள் மலர் (1937)
(திரு. பண்டிதர் கா. நமச்சிவாய முதலியார் அவர்களது அறுபதாம் ஆண்டு நிறைவிழா வெளியீடு)
கட்டுரை : பழைய சூத்திரத்திற்குப் புதிய உரை
கட்டுரையாசிரியர் : இ.டி. ராஜேஸ்வரி, எம்.ஏ., எல்.டி.,



## Pottasium - மரஉப்பு

மரஉப்பு : அரிசியில் குறைவாக இருப்பதால் அது பஞ்ச் என்பவர் சொல்லுவது போல் தசைகளை உஷ்ணப்படுத்தாமலும் உறுத்தாமலும் இருக்கிறது. மேலும் மூத்திரப்பை வேலை செய்து தள்ளும் மலபாகம் குறைவாக இருக்கிறது.

நூல் : ஆரோக்கியமும் தீர்க்காயுளும் (1937), பக்கம் : 32.
நூலாசிரியர் : சுவாமி எ.கே. பாண்டுரங்கம்



## இராமன் - அழகன்

அழகன் – இராமன் என்னும் வடசொல்லின் தனித்தமிழ் மொழி பெயர்ப்பு.

நூல் : கதிரகாமப் பிள்ளைத்தமிழ் (1937), பக்கம் - 101
நூலாசிரியர் : சிவங். கருணாலய பாண்டியப் புலவர்



## ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி

| | | |
|---|---|---|
| ஆசுகவி | – | கடும்பாச் செய்யுள் |
| மதுரகவி | – | இன்பாச் செய்யுள் |
| சித்திரகவி | – | அரும்பாச் செய்யுள் |
| வித்தாரகவி | – | பெரும்பாச் செய்யுள் |



## லாவணியம் - கட்டழகு

நூல் : பக்கம் : 116



## முன்சப்தம் - எதிரொலி

நெடுந்தூரம் உயர்ந்த மலையில் பெரிய மூங்கில்கள் ஓங்கி வளர்ந்துள்ள சோலையில், தங்களிடம் பொருந்திய தெய்வத் தன்மையால் காண்பார்க்கு அச்சத்தையுண்டு பண்ணும் தெய்வப் பெண்கள் பலர் ஒன்று கூடி, சிறப்புற்று விளங்குகின்ற மலையிடமெல்லாம் எதிரொலி (முன் சப்தம்) உண்டாகும்படியாகப் பாடி ஆடுவர்.

மேற்படி நூல் : பக்கம் : 11



| | | |
|---|---|---|
| இலக்குமி | – | திருமகள் |
| இரத்தினங்கள் | – | மணிகள் |
| சடாக்ஷரம் | – | ஆறெழுத்து |
| திலகம் | – | பொட்டு |
| முத்திரை | – | அடையாளம் |

நூல் :



## புஷ்பாவதி - மலர் முகத்தம்மையார் (1938)

பேராசிரியர் மயிலை. சிவமுத்து அவர்களுக்கு முன் பிறந்த குழந்தையின் பெயர் புஷ்பாவதி என்பது. இந்த அம்மையார் இன்று மலர் முகத்தம்மையார் என்று அழைக்கப்படுகிறார். இவர் 1938 ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு அறப்போரில் ஈடுபட்டுத் தமிழ் மொழிக்காகச் சிறை சென்றவர்.

தமிழ்நெறிக் காவலர்
பேராசிரியர் மயிலை சிவமுத்து நினைவு மலர்
மாணவர் மன்ற வெளியீடு, சென்னை.



## ஜலஜாட்சி - தாமரைக்கண்ணி (1938)

ஜலஜாட்சி என்பவர் தமிழறிஞர் வல்லை பாலசுப்பிரமணியம் அவர்களின் துணைவியாராவார். ஜலஜாட்சி என்னும் வடமொழிப் பெயரை நீக்கி, தூய தமிழில் தாமரைக் கண்ணி என்று பாற்றியமைத்தவர் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்களாவார். திருமதி. தாமரைக் கண்ணி அம்மையார் 1938 ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு அறப்போரில் ஈடுபட்டுத் தமிழ்மொழிக்களாகச் சிறைசென்றவரின் தெரியவராவார்.



## உருத்திரம் - பெருஞ்சினம்

பொருள் என்பது யாதோ எனின், அகத்திற்கும் புறத்திற்கும் பொது என்பது. அகத்தைச் சார்ந்துவரும் பொருளெல்லாம் அகப்பொருள் எனப்படும். புறத்தைச் சார்ந்து வரும் பொருளெல்லாம் புறப்பொருள் எனப்படும். இச்சுவை வீரம், அச்சம், இழிவு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம் (பெருஞ்சினம்), நகை, சாந்தம் என ஒன்பதாகும்.

நூல் : அகப்பொருளும் அருளிச்செயலும் (1938), பக்கம் : 5
நூலாசிரியர் : பிரபந்த வித்வான்,
திருப்புறம்பயம் இராமஸ்வாமி நாயடு



## காந்தர்வ மணம்- களவொழுக்கம்

உலகின்கண் எல்லாச் சமயத்தாராலும், உலகத்தாராலும் வெறுக்கப்பட்ட களவொழுக்கத்தை எதற்காகக் கற்றல் வேண்டும். இங்குக் கூறும்

களவொழுக்கம் (காந்தர்வமணம்) தீமை செய்யாது வீடு பயப்பது ஒன்றாகும்.

நூல் : பக்கம் : 19



## வெள்ளை வாரணன் - வெண் கோழி (1938)



## கிருஷ்ணஸ்வாமி - வல்லிக்கண்ணன் (1939)

1930களிலும், 40களின் ஆரம்ப வருடங்களிலும், தேசீய உணர்ச்சியோடு விடுதலை முழக்கம் செய்யும் வேகமான எழுத்துக்களை வெளியிடும் பத்திரிகைகள் பல தோன்றி, நடந்து, மறைந்து கொண்டிருந்தன. லோகசக்தி, பாரதசக்தி, என்ற பத்திரிகைகள் அப்படிப்பட்டவை.

அவற்றில் நான் கதைகளும், உணர்ச்சிகரமான கட்டுரைகளும் பாடல்களும் நிறையவே எழுதினேன், பலரது கவனத்தையும் அவை ஈர்த்தன.

அந்தச் சந்தர்ப்பத்தில் தான் எனக்கு ஒரு புனைபெயர் தேவை என உணர்ந்தேன். அதுவரை ரா.சு. கிருஷ்ணஸ்வாமி என்றும், ராசுகி. என்றும்தான் எழுதிக் கொண்டிருந்தேன்.

கவிபாரதியார் தன் நண்பர் குவளையூர் கிருஷ்ணமாச்சாரி என்ற பெயரைக் குவளைக் கண்ணன் என மாற்றியிருந்தது என் மனசில் பதிந்திருந்தது. அதே போல என் சொந்த ஊரான ராஜவல்லிபுரத்தில் உள்ள வல்லியையும் கிருஷ்ணஸ்வாமி என்பதைக் கண்ணன் என மாற்றி அதையும் இணைத்து, வல்லிக்கண்ணன் என்று எனக்கு நானே சூட்டிக் கொண்டேன்.

நூல் : வல்லிக்கண்ணனின் போராட்டங்கள்
எடுத்து எழுதியவர் : ஏந்தல் இளங்கோ
இதழ் : தாய் - 22. 6. 1986



## Press - எழுத்தகம்

இவ்வெளியீட்டைத் தமது போலெண்ணித் தமது எழுத்தகத்தில் (அச்சுக்கூடம்) பதிப்பிட்டுதவிய தோழர் ந.வீ. ராகவன் அவர்கட்கும் என் மனமார்ந்த அன்பும் நன்றியும் உரியதாகும்.

நூல் : இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? (1939), பக்கம் -5
நூலாசிரியர் : மறை. திருநாவுக்கரசன்



## உத்தியோகம் - அரசியல் நிலை

வட மொழிக்குள்ள பெருமை பார்ப்பனர்களுக்காகி அதனால் பார்ப்பனருக்கு உறையுள் (வீடு) அமைத்துக் கொடுப்பதும், அரசியல் நிலை (உத்தியோகம்) கொடுப்பதும், சத்திரம் கட்டி உணவு கொடுப்பதும், அவர்களை உயர்ந்தோராய் மதித்துச் சிறப்பிப்பதும், பண்டும், இன்றும் வழங்குவதுபோல நாளை இந்தி மொழிக்குரிய வட நாட்டார்க்கு அவைகள் கொடுக்கப்படுமல்லவா?

நூல் : இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? (1939), பக்கம் - 43
நூலாசிரியர் : வித்வான் மறை. திருநாவுக்கரசு.



## Surgeons - அறுத்தூற்றியாற்றும் மருத்துவர்கள்

எகிப்தியர்களே தொன்மையில் நாகரீகத்தில் நனி சிறந்திருந்தனர். கண்ணாடி கண்டு முதன் முதல் அதனால் கலன் அமைத்தவர்களும் அவர்களே. 2300 ஆண்டுகட்கு முற்பட்டதும் இங்கிலாந்து கண்காட்சிச் சாலையில் இருப்பதுமாகிய துளைகருவி போன்ற உறுதியானது இக்காலத்திலுமில்லையாம். குழந்தைகள் குடிக்கும் இரப்பர் (Rubber) பாற்கருவி அக்காலத்தில் சுடு மணலால் இருந்தது. அறுத்தூற்றி யாற்றும் மருத்துவர்கள் (சர்ஜன்கள்) பல் மருத்துவர் முதலிய பல்வகை மருத்துவர்களும் இருந்தனர். இறந்தோர் வாயெலும்பில் தங்கப் பொய்ப் பற்கள் தங்கியிருந்தன. இறந்தோராயினும் அவர் தம் பல்லைப் பிடுங்குவது எகிப்தியர் இயல்புக்கு ஏற்றதல்லவாம்.

இதழ் : குடியரசு (1939 ஆகஸ்டு மீ132)
கட்டுரையாளர் : தமிழாசிரியர் எ. ஆளவந்தார்



## பாங்க் - பணக்கடை

வட நாட்டவர்பால் நமக்குள்ள பெருமதிப்பை எத்தனை எத்தனை வகைகளிலோ காட்டிக் கொண்டு வருகின்றோம். வட நாட்டாரைக் கண்டால் சுயராஜ்யத்தைக் கண்டதுபோல மகிழ்கின்றோம். தங்களிடத்தில் நாம்

கொண்டிருக்கும் குருட்டு பக்தியைக் கண்ட வட நாட்டார்க் காந்திக்குல்லாயுடன் சென்னையிலும், தமிழ் நாட்டு நகரங்களிலும், வெற்றிலைப் பாக்குக்கடை, மிட்டாய் கடை, பலசரக்குக்கடை, புடவைக்கடை, பணக்கடை (பாங்க்), வட்டிக்கடை, பஞ்சாலை, மரவாலை, முதலிய கடைகளும், ஆலைகளும், நடத்துகின்றனர்.

நூல் : இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? (1939), பக்கம் : 44
நூலாசிரியர் : வித்வான் மறை. திருநாவுக்கரசு



## சர்வாதிகாரம் - தனியாணை

சென்னை மாகாணத் தலைமை அமைச்சர், மாண்புமிக்க இராச கோபாலாச்சாரியார் அவர்கள், வடநாட்டுத் தலைவர் சிலர்க்குத் தாம் ஓர் உறுதிமொழி கொடுத்திருப்பதாகத் தாமே கூறியிருக்கின்றார்.

அவ்வுறுதி மொழியை நிறைவேற்றுதற் பொருட்டுத் தாம் அமைச்சேற்றவுடன் தமிழ்ப் புலவர்களைக் கலந்து கொள்ளாமல், கல்வித் துறையில் வல்லவர்களது கருத்தைக் கேளாமல், தமிழ் மக்களின் வாய்மொழியை வேண்டாமல், சட்ட சபை உறுப்பினர்களோடு சூழாமல், காங்கரசுக் கழகங்களின் கருத்தைக் கேட்காமல் தனியாணை (சர்வாதிகாரம்)யாகக் தமிழ் நாட்டில் இந்தியைக் கட்டாயப் பாடமாகப் புகுத்தினார்கள்.

நூல் : இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? (1939), பக்கம்- 1
நூலாசிரியர் : வித்வான் மறை. திருநாவுக்கரசு



| | | |
|---|---|---|
| நியாயஸ்தலம் | – | முறை மன்றம் |
| ஸ்தலஸ்தாபனம் | – | நாட்டு நிலையம் |
| சமரசம் | – | பொதுமை |



## வித்தாரகவி - அகலகவி

ஆசுமுதல் நாற்கவியும் என்றது ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்று சொல்லப்பட்ட நான்கு விதமான கவிகளை என்க.

நூல் : கந்தர் கலிவெண்பா (1939)

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | : | குமரகுருபர சுவாமிகள்<br>பதவுரை, பொழிப்புரை, விசேடவுரை, சு.கு. கோவிந்தசாமி பிள்ளை |



## பரமபதம் - வீட்டுலகம்

தலைவி கூற்றில் கண்ணன்விண் தோழிக்குவமை, கண்ணன் விண் — திருமாலின் வீட்டுலகம் (பரம்பதம்); அதனையடைந்தவர்கள் அழிவின்றி வாழ்வார்கள்.

| | | |
|---|---|---|
| நூல் | : | கரந்தைக் கட்டுரைக் கோவை (1939) |
| கட்டுரை | : | திருவிருத்தம் பக்கம் :105 |
| கட்டுரைாளர் | : | வித்துவான் ஆ. பூவராகம் பிள்ளை |



## பாலசுப்பிரமணியன் - இளமுருகு

ù T ôtù Np ® (1939)

## சமஷ்டி சட்டசபை - நடு மன்னவை

அஃதாவது, இந்தியாவின் நடு மன்னவை (சமஷ்டி சட்டசபை) யில் பல மாகாணத்தவரும் ஒன்றுகூடிப் பேச ஒரு பொதுமொழி வேண்டும்.

| | | |
|---|---|---|
| நூல் | : | இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? (1939), பக். 14 |
| நூலாசிரியர் | : | வித்வான் மறை. திருநாவுக்கரசு. |



| | | |
|---|---|---|
| பிருதுவி | – | மண் |
| க்ஷீரம் | – | பால் |
| ஜலம் | – | நீர் |
| ஆத்மா | – | ஆவி, உயிர் |
| அக்னி | – | நெருப்பு |
| க்ருஹம் | – | வீடு |
| ஆகாஸம் | – | வெளி, விண் |
| ஸந்தோஷம் | – | மகிழ்ச்சி |

| | | |
|---|---|---|
| ஆகாரம் | – | உணவு |
| ரதம் | – | தேர் |
| லாவண்யம் | – | அழகு |
| வாஹனம் | – | ஊர்தி |
| அலங்காரம் | – | அணி |
| ஸர்ப்பம் | – | பாம்பு |
| ஆபரணம் | – | இழை |
| உத்ஸவம் | – | திருவிழா |
| வித்வான் | – | அறிஞன் |
| புஷ்பம் | – | பூ, மலர் |
| கஷ்டம் | – | வருத்தம் |
| தர்மம் | – | அறம் |
| ப்ரயோஜனம் | – | பயன் |
| பார்யை | – | மனைவி |
| ஜ்வரம் | – | காய்ச்சல் |
| புருஷன் | – | கணவன் |
| உஷ்ணம் | – | சூடு |
| வர்ஷம் | – | ஆண்டு |
| கஷாயம் | – | பொருள்களை ஊறக்கொண்டது. |
| கனகம், ஸ்வர்ணம் | – | பொன் |
| ஸ்தோத்ரம் | – | புகழ் |
| வ்ருஷபம் | – | எருது |
| கருதம் | – | நெய் |
| அநுக்ரஹம் | – | அருள் |
| ஸப்தம் | – | ஒலி |
| ஸப்த | – | ஏழு |
| வார்த்தை | – | சொல் |
| அஷ்டம் | – | எட்டு |
| ஸூர்யன் | – | ஞாயிறு, பரிதி |
| ஸரீரம் | – | உடல் |
| ஸங்கீதம் | – | இசை |

| | | |
|---|---|---|
| வருக்ஷம் | – | மரம் |
| பூரண சந்திரன் | – | நிறை நிலா |
| ப்ரயத்நம் | – | முயற்சி |
| நக்ஷத்ரம் | – | விண்மீன் |
| ஸமுத்ரம் | – | கடல் |
| பஞ்சேந்த்ரியம் | – | ஐம்பொறி |
| ஆனந்தபாஷ்யம் | – | உவகை நீர் |
| ஜ்யேஷ்ட புத்ரன் | – | மூத்த மகன் |

பௌத்ரன் – பேரன் (பெயரன்– பாட்டன் பெயரை உடையவன்)

| | | |
|---|---|---|
| தேஹஸ்ரம் | – | மெய் வருத்தம் |
| அக்ஷராப்யாஸம் | – | சுவடி தூக்குதல் |
| ரக்தம் | – | செந்நீர் |
| நயனம் | – | கண் |
| ஈஸ்வர ஸங்கல்பம் | – | திருவருட் குறிப்பு |
| ஸிரஸ் | – | தலை |

புத்ர பாக்யம், புத்ரோற்பத்தி – மகப்பேறு

| | | |
|---|---|---|
| பாதம் | – | கால் |
| அக்னி கார்யம் | – | எரி ஓம்பல் |
| கங்கண விஸர்ஜன் | – | காப்புக் களைதல் |
| ஸ்தம்ப ப்ரதிஷ்டை | – | பந்தல் கால் |
| ஸந்யாஸம் | – | துறவு |
| த்ரிபதார்த்தம் | – | முப்பொருள் |
| விவாஹ மஹோத்ஸவம் | – | திருமணம் |
| ஸ்திரீ | – | மாது |
| கனகாபரண் | – | பொன்நகை |

நூல் : மோகூர் ஆலடிப் பிள்ளையார் புகழ்ப் பத்து - (1940) மூலமும் உரையும்

நூலாசிரியர் : மோகூர் கந்தசாமி முதலியார், பி.ஏ., எம்.ஆர்., ஏ.ஜெ. பச்சையப்பன் கல்லூரி



## Jury - மெய்விளம்பி

## itinerant Judges - சுற்றிவரும் நீதிபதிகள்

நீதி பரிபாலனத்தில் இரண்டாம் ஹென்றி இரண்டு முக்கியமான திட்டங்களைப் புகுத்தினார். 1. ஜூரி எனப்படும் மெய்விளம்பிகளால் விசாரணை, 2. சுற்றிவரும் நீதிபதிகள். இவை அவரது பாட்டனாரான முதல் ஹென்றியின் இரண்டு சீர்திருத்தங்களை அடிப்படைகளாகக் கொண்டவை.

நூல் : பிரிட்டன் வரலாறு (1066-1485) (1940) பக்கம் - 33
தமிழில் பெயர்ப்பு : ம. சண்முக சுந்தரம், எம்.ஏ., எல்.டி.,
(சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத் தலைமையாசிரியர்)



| | | |
|---|---|---|
| Cricket | – | துடுப்பு ஆட்டம் |
| Hockey | – | வளைகழி ஆட்டம் |
| Rugby | – | பிடி பந்தாட்டம் |
| Basket Ball | – | கூடைப் பந்தாட்டம் |

கேம்ஸ் என்ற பகுதியில் துடுப்பு ஆட்டமும் (Cricket) வளைகழி ஆட்டமும் (Hockey), உதை பந்தாட்டமும் (Foot Ball), பிடி பந்தாட்டமும் (Rugby), சல்லடைப் பந்தாட்டமும் (Tennis), கூடைப் பந்தாட்டமும் (Basket Ball) இவை போல்வன பிறவும் அடங்கும்.

நூல் : மாணவர் தமிழ்க் கட்டுரை (1940), பக்கம் - 16
நூலாசிரியர் : வித்துவான், பாலூர், து. கண்ணப்ப முதலியார்
(தமிழ் ஆசிரியர் முத்தியாலுப் பேட்டை உயர் கலாசாலை, சென்னை)



## Suit case - தோல் பெட்டி

என் தந்தையாரும் யானும் துணிக்கடைக்குச் சென்று, எனக்கு வேண்டிய துணிகளை எடுத்துக் கொண்டோம்; தற்காலப் பேரறிஞர்கள் எழுதிய ஆங்கிலப் புத்தகங்களையும், தமிழ்ப் புத்தகங்களையும் வாங்கிக் கொண்டோம்; எனக்கு ஒரு தோல் பெட்டி (Suit Case) இல்லாதது ஒரு குறையாய் இருந்ததால், அதையும் வாங்கிக் கொண்டேன்.

நூல் : மாணவர் தமிழ்க் கட்டுரை (1940), பக்கம் - 160
நூலாசிரியர் : வித்துவான் பாலூர், து. கண்ணப்ப முதலியர்
(தமிழ் ஆசிரியர். முத்தியாலுப் பேட்டை உயர் கலாசாலை, சென்னை)



## இன்தமிழ்

தமிழ்மொழி இனிமையானது என்று எல்லாரும் சொல்லுகிறார்கள். அதன் இனிமையை அறிந்தவர்கள் அதனை இன்தமிழ் என்று சொல்லக் கேட்கிறோம்.

நூல் : சங்கநூற் கட்டுரைகள் (1940), பக்கம் : 1
நூலாசிரியர் : தி.சு. பாலசுந்தரன் (இளவழகனார்)
(மறைமலையடிகள் மாணவர்)



| | | |
|---|---|---|
| அபிவியக்தமாக | – | வெளிப்படையாக |
| தானம் | – | இடுதல் |
| விநயம் | – | அடக்கம் |
| இலக்ஷணம் | – | குறி |
| இலக்ஷியம் | – | முறிக்கப்படுவது |
| விவகாரம் | – | உலக வழக்கு |

நூல் : விவேக சிந்தாமணி வேதாந்த பரிச்சேதம் (1940)
(இரண்டாம் பதிப்பு)
விளக்கம் : தஞ்சை மாநகரம் வி. பிரம்மாநந்த சுவாமிகள்



## ஜலசந்தி - நீரிணை

கொத்தரில் ஒருபாலார் பாஸ்பரஸ் நீரிணை வழியால் நுழைந்து கிரேக்க நாட்டிற் புகுந்து ஏதென்ஸ் நகரைத் தாக்கினர். அவர்கள் நகரத்து நூல் நிலையத்திற்குத் தீயிடவெண்ணினராக, கொத்தர் தலைவன் கற்றிலனாயினும், நூல்களை எரிக்கப்படாதெனத் தடுத்தான்.

இதழ் : செந்தமிழ் - ஜூன், ஜூலை 1940, தொகுதி : 37
கட்டுரை : யவனர் வரலாறு - பக்கங்கள் -368, 369
கட்டுரையாளர் : த. இராமநாதபிள்ளை, பி.ஏ., (lond)



## விலாசம் - விளிநிலை

எழுதுபவர் விளிநிலை (விலாசம்) கடிதத்தின் தலைப்பில் இடது புறத்தில் அமைதல் வேண்டும். முழு விளி நிலையையும் எழுதினால்தான் எழுதியவர் இன்னாரென்று எளிதில் அறிதற்கும், பதிலைக் கடிதம் எழுதியவர்க்கே தடையின்றிச் சேரச் செய்வதற்கும் இயலும்.

நூல் : தமிழ்க் கற்பிக்கும் முறை (1940), பக்கம் - 42
நூலாசிரியர் : சி. இலக்குவனார்
(தமிழாசிரியர், கழக உயர்தரக் கல்விக்கூடம், நன்னிலம்)



## கும்பாபிஷேகம் - குடமுழுக்கு

தமிழ்நாட்டில் வட ஆர்க்காடு மாவட்டம் அரக்கோண (அரண் குன்ற)த்திற்கு அடுத்த மோசூர் என்னும் ஊரிலுள்ள தமிழராகிய அன்பர்கள், கருங்கல்லால் புதியதாக ஒரு கோயில் கட்டி முடித்துப் பிள்ளையார் படிவத்தினை அதில் அமைத்து வெகுதானிய ஆண்டு வைகாசித் திங்கள் 27ஆம் (1938 ஜூன் 9ஆம்) நாளாகிய வியாழக்கிழமை குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) நடாத்தி வைத்தனர்.

நூல் : மோசூர் ஆலடிப் பிள்ளையார் புகழ்ப் பத்து, பக்கம் : 1
மூலமும் உரையும் (1940)
நூலாசிரியர் : மோசூர் கந்தசாமி முதலியார், பி.ஏ., எம்.ஆர்., எ.எஸ்.,
(பச்சையப்பன் கல்லூரி)



## Conversation - சொல்லாடல்

சொல்லாடல் (Conversation) முறையில் கட்டுரைகளை எழுதச் செய்யின், ஒரு பொருளைப் பற்றித் தாமே வினவி அதன் முழு வரலாற்றையும் அறியும் திறன் பெறுவதோடு ஆராய்ச்சியறிவும் நாடகம் எழுதும் வன்மையும் பெற்றவர்களாவார்கள்.

நூல் : தமிழ்க் கற்பிக்கும் முறை (1940), பக்கம் : 41
நூலாசிரியர் : வித்துவான் சி. இலக்குவனார்
(தமிழாசிரியர், கழக உயர்தரக் கல்விக்கூடம், நன்னிலம்)



## Badge - அடையாளப் பதக்கம்

ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு தலைவர் உண்டு. அத்தலைவர், அவ்வப் பிரிவினருக்கு உரிய பாகங்களைக் கற்பிப்பர்; அவற்றில் பரீக்ஷையும் வைப்பர். அதில் தேறுபவர்களுக்கு அப்பிரிவின் அடையாளப் பதக்கம் (Badge) கொடுப்பர்.

நூல் : மாணவர் தமிழ்க் கட்டுரை (1940), பக்கம் - 81
நூலாசிரியர் : வித்துவான் பாலூர் து. கண்ணப்ப முதலியார்
(தமிழ் ஆசிரியர், முத்தியாலுப் பேட்டை உயர் கலாசாலை, சென்னை)



## ஒரு மாதப் பத்திரிக்கை - ஒரு மதிமுகத்தாள்

தாய்மொழி தழைக! தாயகம் வாழ்க!!

தமிழணங்கு
ஒரு மதிமுகத்தாள்

அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே

மலர் – 1 இதழ் – 9 (1941)
ஆசிரியர் : ஆ.மா. சிவஞானம், தமிழரண், ஆம்பூர்
(பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்)



## Fade - மறைந்து தெளிதல்

(Fade) அல்லது மறைந்து தெளிதல் என்ற வழிகதைப் போக்கில் இன்னும் அதிக வித்தியாசத்தைக் குறிப்பதற்கு அனுசரிக்கப்படுகிறது.

சித்திரவாணி

இதழ் : சினமா உலகம் (16 .11 .1941)
படம் : 7; காட்சி : 32; பக்கம் : 13



## Direct Cut - நேர் வெட்டு

ஒரு ஷாட்டு மாறி அடுத்த ஷாட்டு வருவதற்கு இங்லீஷில் (Direct Cut) என்கிறார்கள். இதற்கு நேர் வெட்டு முறை என்று சொல்லலாம். இந்த நேர் வெட்டு முறையினால் சினிமாக் கதையில் வேகம் காட்ட முடியும்.

சித்ரவாணி

இதழ் : சினிமா உலகம் (16.11. 1941)
படம் : 7; காட்சி : 32; பக்கம் : 12



## Railway Station - நீராவிப் பொறித்தொடர் நிலையம்

திருநாங்கூர் – இவ்வூர் தஞ்சாவூர் ஜில்லா சீகாழித் தாலுகாவில் உள்ளது. தென்னிந்திய இருப்புப் பாதையில் சீகாழி என்கிற நீராவிப் பொறித் தொடர் நிலையத்தில் இறங்கிச் சாலை மார்க்கமாய்த் தென்கிழக்கே ஏழெட்டுக் கற்கள் சென்றால் இத்தலத்தை அடையலாம். வைத்தீசுவரன் கோவில் எனும் நிலையத்தில் இறங்கிக் கிழக்கே ஐந்தாறு கற்கள் சென்றாலும், இதனை அடையலாகும். இவ்வூர் நாங்கை எனவும் மருவி வழங்கும்.

இதழ் : செந்தமிழ் (1941), தொகுதி - 38, பகுதி - 3
கட்டுரையாளர் : ச. ஸ்ரீநிவாஸயங்கார்



## பிருகதீசுரர் - பெருவுடையார்

பராந்தகனது கொட்பேரனான இராஜகேசரி முதலாம் இராஜராஜன் என்பவன், சிறு விளக்கில் ஏற்றிய பெரும் பந்தம் போல விளங்கினான். இவனே, பாண்டிய சேர ஈழ நாடுகளை வென்று அவற்றைச் சோழ நாட்டின் பிரிவுகளாக்கிச் சோழ சாம்ராஜ்யத்தை அமைத்தவன் இவன் சிவபக்தி மிக்கவன்; திருவாபரணம் முதலியவைகளைப் பெருவாரியாகக் கோயில்களுக்கு வழங்கினவன். தஞ்சை மாநகர் இவன் காலத்தில் அரசர் இருப்பாகப் பொலிவு பெற்று விளங்கியது. அந்நகரில் இவன் எடுப்பித்த இராஜராஜேசுவரம் என்னும் பிருகதீசுரர் (பெருவுடையார்) கோயிலொன்றே இவன் பெருமையை இன்றுவரை உலகில் விளக்கியுள்ளது.

நூல் : மூன்றாம் குலோத்துங்க சோழன்(1941), பக்கம் : 14

நூலாசிரியர் : வி.ரா. இராமச்சந்திர தீக்ஷிதர், எம்.ஏ.,
(வரலாற்றுத் துறைப் பேராசிரியர் சென்னைப் பல்கலைக்கழகம்)



## புத்தனேரி ரா. சுப்பிரமணியன் - முருகு

### திருமணம்

*ஆசிரியப்பா*

மணத்தலென் சொல்லே கூடுதற் பொருளிலும்,
நறுமணங் கமழ்தல் நற்பொருள் தனிலும்,
மங்கல மொழியாய் வருவது காண்க.

இதழ் : திருமண அழைப்பிதழ் (1942), பக்கம் : 1
ஆக்கியோன் : புத்தனேரி ரா. சுப்பிரமணியன்
தமிழ் நற் பெருந் தொண்டன்
(மணநாள் தொடர்பாய் மணமகன் முருகு ஆக்கியது)



## Lord - பெருந்தரத்தார்

பதினெட்டாம் நூற்றாண்டில் ஓர் ஆங்கிலப் புலமையாளர் சீன நாட்டிற் சென்று அம்மாநாட்டு மக்களுடன் கூட்டுறவுற்று அவர் மொழிக்கண் சிறந்து விளங்கிய ஓர் அரும்பெரும் பொருணூலைத் தம்மொழியிற் பெயர்த்தமைத்துப் போற்றிய வரலாற்றை அவர் எழுத்தானே, ஈண்டு எடுத்துக்காட்டித் தமிழகத்தார் யாவரும் அறிந்து அப்பெரும் பொருணூற் பொருள்கள் நம் தமிழ் மொழிக் கண்ணும் பொதிந்து நிலையுறுதல் நன்றும் போற்றற் பாலதாமெனக் காட்டுதற்கு இக்கட்டுரையை வரைகின்றேன். அறிஞர்கள் ஏற்றுக் கொள்வார்களாக. அவ்வாங்கில வறிஞர் தம் பெயர் விரும்பாது தந்நாட்டகத்துக் கலை நலஞ் சாலச் சிறந்தோங்க உழைத்த பெருந்தரத்தார் (Lord) ஒருவர்க்கு எழுதிவிடுத்த முடங்கல் ஒன்று ஏறத்தாழ இருநூற்றாண்டுகளாக நிலவி வருகின்றது.

நூல் : கோபாலகிருஷ்ண மாச்சாரியார்
அறுபதாண்டு நிறைவு விழா மாலை (1942)
கட்டுரையாளர் : தி.பொ. பழனியப்ப பிள்ளை, பக்கம் : 381



## Assignment Card - குறிப்புத்தாள் அட்டை
## Assignment Chart - குறிப்பு விளக்க அட்டை

பாடசாலை வேலை யாவற்றையும் தனிப்பயிற்சி மூலம் நடத்த முடியாது. போனாலும், வேலையின் பெரும் பாகத்தை இம்முறையின் மூலம் நடத்தலாம். தனிப்பயிற்சி வேலையின் திறமையான பகுதி குறிப்புத் தாள்களை உபயோகிப்பதேயாகும். ஒவ்வொரு மாணவனுக்கும் ஒரு குறிப்புத்தாள் அட்டையும் (Assignment card) ஆசிரியரிடம் ஒரு குறிப்பு விளக்க அட்டையும் (Assignment Chart) இருக்க வேண்டும்.

நூல் : தாய்மொழி போதிக்கும் முறை (1942), பக்கம் - 23
நூலாசிரியர் : வி.கே. சேஷாத்திரி, பி.ஏ., எல்.டி.,
(சென்னை கல்வி இலாகா)



Individual Method – தனிப்பயிற்சி முறை
Assignment – குறிப்புத்தாள்
Oral – வாய்மொழி
List of words – சொற்பட்டியல்
Vocabulary – சொல்லகராதி
Flash - Card – மின்னட்டை
Punctuation Marks – மாத்திரைப் புள்ளிகள்
Creative Expression – ஆக்கச் சொல்வன்மை

நூல் : தாய்மொழி போதிக்கும் முறை (1942)
அரும்பத அகராதி, பக்கங்கள் - 2, 3
நூலாசிரியர் : வி. கே. சேஷாத்திரி, பி.ஏ., எல்.டி.,
(சென்னை கல்வி இலாகா)



## Circus - அலைக்களம்

வியாசம் – வாய்மொழி வியாசத்துக்கும் பிறகு எழுதும் வியாசம் சுயமான சொல் வன்மையின் அவசியம் – சம்பாஷணை, சம்வாதம், மாணவர்களால் பொறுக்கி எடுக்கப்பட்ட பழக்கமான விஷயங்களில் பிரசங்கங்கள் – (2–ம்) ஒரு மழை நாள் அனுபவம், பொருட் காட்சிச் சாலையைப் பார்வையிடுதல், அலைக்களம்

நூல் : தாய்மொழி போதிக்கும் முறை (1942), பக்கங்கள் - 7, 8
நூலாசிரியர் : வி.கே. சேஷாத்திரி, பி.ஏ., எல்.டி.,
(சென்னை கல்வி இலாகா)



## Degree - மாத்திரை

வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் இந்த ஜில்லாவிலுள்ள மற்றப் பாகங்கள் காற்றும் மழையுமின்றி வருந்தும் போது இங்கே இந்த நல்ல காற்றும் இளமழையுங் கிடைக்கின்றன. மழை பெய்தாலும் பெய்யாவிடினும் இக்காலக் கருமேகங்களினூடே பச்சை மரங்கள் கொடிகள் முகந்து வீசுகின்ற காற்றானது சூரிய வெப்பத்தை 15 மாத்திரை (Degree) வரை குறைத்து மனதுக்கு ரம்மியமானதும் உடலுக்கு உகந்ததாகவுமுள்ள ஒரு அரிய சீதோஷ்ண நிலையைக் கொடுக்கின்றது.

நூல் : திருக்குற்றாலத் தல வரலாறு (1943), பக்கங்கள் : 9, 10
நூலாசிரியர் : ஏ.சி. ஷண்முக நயினார் பிள்ளை, பி.ஏ., பி.எல்.,
(திருக்குற்றால நாதசுவாமி கோயில் தர்மகர்த்தர்)



## Beauty Spot - அழகின் உறைவிடம்

ஐரோப்பியர்களே முதன் முதல் உடல்நலங் காரணமாக இங்கு வந்ததால் தங்கள் பெல்ஜிய நாட்டிலுள்ள ஸ்பா என்னும் ஆரோக்ய ஸ்தலம் போன்று நீர்வளம் நிரம்பி உடல் நலம் கொடுக்கும் தலமென்று இவ்வூரை வியந்து தென்னாட்டு ஸ்பா என்ற புனை பெயரிட்டனர்.

(Famous Spa of the South) இயற்கை அழகைக் கண்டு மகிழ்ந்து அழகின் உறைவிடம் (Beauty Spot) என்றும் புகழ்ந்தனர்.

மேற்படி நூல் : திருக்குற்றாலத் தலவரலாறு (1943), பக்கம் - 13



## Radio - ஒலிபரப்பி

சில வருடங்களுக்கு முன் இவ்வூரில் நகர பரிபாலன சபை (பஞ்சாயத்து) நிறுவப்பட்டு இப்போது திருவாளர் இலஞ்சி மிட்டாதார் I.K. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பி.ஏ., தலைமையில் பொதுமக்களின் சுகாதார நன்மைகளைப் பற்பல விதங்களில் கவனித்து வருகின்றது. பொதுமக்கள் நன்மைக்காக ஒரு

ஒலிபரப்பி (Radio)யும், நல்ல புத்தகங்களடங்கிய வாசக சாலையும் வைத்திருக்கிறார்கள்.

மேற்படி நூல் : திருக்குற்றாலத் தலவரலாறு (1943), பக்கம் - 17



## Department of Epigraphy - கல்வெட்டுப் பதிவு நிலையத்தினர்

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுகள் ஏராளமாக உள்ளன. இவற்றைத் தென்னிந்தியக் கல்வெட்டுப் பதிவு நிலையத்தினர் (Department of Epigraphy) எடுத்து எழுதியிருக்கின்றனர். அவை 1895ஆம் வருஷத்து 203, 204 எண்களுள்ள கல்வெட்டுகளாக எழுதப்பட்டு தென்னிந்திய சிலா சாஸனங்கள் பகுதி 5ல் 767, 768ம் எண்களாக வெளிவந்துள்ளன.

மேற்படி நூல் : திருக்குற்றாலத் தலவரலாறு (1943), பக்கங்கள் : 42, 43, (திருக்குற்றால நாதசுவாமி கோயில் தர்மகர்த்தா)



## Executive Officer - ஆணையாளர்

தற்காலம் செங்கோட்டை மிட்டாதார், திரு. எம். சுப்பிரமணியக் கரையாளர் ஆட்சித் தர்ம கர்த்தராயும், தென்காசி, வக்கீல், திரு. டி.எஸ் சங்கரநாராயண பிள்ளை பி.ஏ., பி.எல்., அட்வகேட் திரு. ஏ.சி. ஷண்முக நயினார் பிள்ளை பி.ஏ., பி.எல்., தர்ம கர்த்தர்களாயும் நியமிக்கப்பட்டு நிர்வாகம் நடத்தி வருகின்றனர். மாதச் சம்பளம் ரூபாய் 200 வரை பெறும் ஒரு ஆணையாளரையும் (Executive Officer) நியமிக்கின்றனர். இப்போதுள்ள ஆணையாளர் திருவாளர் கே.வி. சுப்பையாப் பிள்ளையவர்கள் B.A.,

நூல் : திருக்குற்றாலத் தலவரலாறு (1943), பக்கம் - 60



## நாராயணசாமி - திருமால் அடிகள் (1943)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நானும் நெடுஞ்செழியனும் ஒன்றாகப் படித்தோம். அந்தக் காலத்தில் நெடுஞ்செழியனுக்குப் பேசும்போது நாக்கு புரளக் கஷ்டப்படும்.

அந்த நாக்குச் சரியாகக் கூழாங்கற்களை வாயில் அடக்கியபடி 6 மாதம் பயிற்சி பெற்றார். தினமும் பேசிப் பேசிப் பழகுவார். அந்த நாத் தடு மாற்றம் மாறியது. சிறந்த பேச்சாளர் ஆனார்.

நாராயணசாமி என்ற பெயரை முதலில் திருமால் அடிகள் என்று தன் பெயரை மாற்றிக் கொண்டார். அப்படி மூன்று மாதங்கள் இருந்தார். இது என்ன திருமாலுக்கு அடிகள் என்று கேட்டேன். பிறகு அவர் பட்டுக்கோட்டை போய்விட்டுத் திரும்பும்போது நெடுஞ்செழியன் என்ற பெயரோடு வந்தார்.

இதழ் : நவமணி, 13.7.1970



## முருகு. சுப்பிரமணியன்

ஆசிரியர் முருகுவின் எழுத்துலகம் சுமார் 40 ஆண்டுகளுக்கு முன் துவங்கியது என்று சொல்லலாம்.

திருச்சி அர்ச். சூசையப்பர் உயர்நிலைப் பள்ளியில் 1939 ஆம் ஆண்டு ஐந்தாம் படிவத்தில் படித்துக் கொண்டிருந்தபோது திரு. முருகுவின் கட்டுரை ஒன்றைத் தமிழாசிரியர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வகுப்பில் படித்துக் காட்டி கட்டுரை என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அழுத்தமாகச் சொன்னார்.

1942ல் படிப்பு, முதல் பல்கலைக்கழக வகுப்போடு முடிந்தது. படிப்பு முடியுமுன்னர் திருச்சியிலேயே இளந்தமிழன் என்னும் திங்களிருமுறை ஏட்டைத் துவக்கினார்.

இளந்தமிழனில் முருகு என்னும் புனைபெயரில் எழுதி வந்ததோடு, இளந்தமிழன் ஆசிரியர்: முருகு என்னும் பெயரிலேயே வந்தது. அதுவே பிறகு பெயருக்கு முன்னால் சேர்ந்து முருகு சுப்பிரமணியன் என்றாகிவிட்டது.

மலர் : தமிழ்க்காவலர் முருகு சுப்பிரமணியன்
பொன்விழா மலர் (1976), பக்கம் - 36, 37
தொகுப்பு : பரிதா மணாளன்



| | | |
|---|---|---|
| பிரயோஜனம் | – | பயன் |
| பார்யை | – | மனைவி |
| ஜ்வரம் | – | காய்ச்சல் |
| புருஷன் | – | கணவன் |



## ரெங்கசாமி- அரங்கண்ணல் (1943)

25 ஆண்டுகளுக்கு முன்பு! 'கிளம்பிற்றுக் காண் தமிழ்ச் சிங்கக் கூட்டம்! கிழித்தெறியத் தேடுதுகாண்பகைக் கூட்டத்தை' என்று பாரதிதாசனார் பாராட்டிய திருவாரூரில், ஒரு தமிழ்க் குகை, மா. வெண்கோ எனும் புனைபெயருக்குள் தன்னை மறைத்துக் கொண்ட வயலூர் சண்முகம், திருக்குவளை கருணாநிதி, கோமல் ரங்கசாமி, திருவாரூர் சாமா, விஜயபுரம் செல்லக் கணபதி, குளக்கரை சீனுவாசன்... அடிக்கடி இந்த மாணவப் பட்டாளம் அந்தக் 'குகை'க்குள் கூடும். திருக்குவளை கருணாநிதி வேலையிருந்தால்தான் வருவார். அவர் தவிர மற்ற நாங்கள் எல்லாம் ஒரு கூட்டம். தமிழ் மீது எங்களுக்கு ஓர் ஆசை.

எனது மாணவ ஆசான் வ.கோ. சண்முகம் ஓர் அவைக் கோழை! மிராசு வீட்டுப் பிள்ளை எனும் நினைப்பும் வசதியான வாழ்வும் அவருக்கு அப்போது அமையாதிருந்தால் இன்று அவர் கவிஞர்களில் கவிஞராகவோ அல்லது இன்னொரு கருணாநிதியாகவோ இருந்திருக்கலாம். சிறந்த தமிழ்த் தும்பீ! அவருடைய வீடுதான் எங்கள் குகை. கோமல் ரங்கசாமியான என்னை அரங்கண்ணல் ஆக்கியது அவர்தான்.

இராம. அரங்கண்ணல், எம்.எல்.ஏ., சுரதா பொங்கல் மலர் - 1970



## Bus - நெய்யாவி ஊர்தி

நெய்யாவி ஊர்தியிலே (பொருள் தெரியாவிட்டால் நீலை பாஷையிலுள்ள பஸ் என்ற திசைச் சொல்லை உபயோகித்துக் கொள்ளவும்) பிரயாணம் செய்து கொண்டிருந்த, ஒரு சகோதரி வேடிக்கையாக ஒன்றைச் சொல்ல, அதைக் கேட்ட மற்றப் பிரயாணிகள் கொல் என்று சிரித்தார்கள்.

நூல் : அசோகவனம் (1944), பக்கம் - 92
நூலாசிரியர் : எ. முத்துசிவன்



## Bangalow - தங்கிடம்

பொருநையாறு இம்மலைமிசைத் தோன்றிக் கீழ் நோக்கி ஓடி வருகிறது. இது தோன்றும் இடம் சதுப்பு நிலமாக எப்போதும் தண்ணீர் ஊறிக் கொண்டே இருக்கிறது. இது சிறிது தூரம் வந்தவுடன் கன்னிகட்டி என்ற ஓரிடம் இருக்கிறது.

அவ்விடம் மரச் செறிவுள்ளதாய்ப் பேரழகினதாய் விளங்குகின்றது. இங்கே தங்கிடம் ஒன்றிருக்கிறது.

நூல் : பாவநாசம் பாவநாச சரி கோவில் வரலாறு (1944), பக். : 5
நூலாசிரியர் : இ. மு. சுப்பிரமணியபிள்ளை, தலைமைத் தமிழாசிரியர், நாட்டாண்மை உயர்ப்பள்ளிக்கூடம், சங்கரன் கோவில்.



## Profiles - பக்கப் பார்வைப் படங்கள்

இந்த நாகரிகமற்ற காட்டு மனிதர்களுக்குப் படம் வரையத் தெரிந்திருந்தது. ஆனால் காகிதத்தாள்களாவது எழுதுகோலாவது மைதீட்டும் கருவியாவது அக்காலத்தில் இருக்கவில்லை. கல் ஊசிகளும் கூர்மையான கருவிகளுமே அவர்களிடம் இருந்தன. இவற்றைக் கொண்டு குகைகளின் சுவர்களில் அவர்கள் மிருகங்களின் உருவங்களைக் கீறி வரைந்தார்கள். அவர்கள் எழுதியுள்ள சித்திரங்களில் சில மிகவும் நன்றாயிருக்கின்றன. ஆனால் அவைகளெல்லாம் பக்கப் பார்வைப் படங்கள் (Profiles). பக்கப் பார்வைப் படங்களை வரைவது எளிது என்று உனக்குத் தெரியும்.

நூல் : ஜவாஹர்லால் நேருவின் கடிதங்கள் (1944)
பக்கங்கள் - 43, 44
மொழிபெயர்ப்பு : சி.ரா. வேங்கடராமன், பி.ஏ., பி.எல்.,
(இந்திய ஊழியர் சங்கம்)



## வாக்கியம் - சொற்றொடர்

இராமன் பாடம் படிக்கிறான்
சீதை கோலம் போடுகிறாள்
பசு பால் தரும்
நாய் வீட்டைக் காக்கும்.

இவ்வாறு பல சொற்கள் தொடராகச் சேர்ந்த சொற்றொடரால் (வாக்கியத்தால்) ஒரு கருத்தினைப் பிறருக்கு அறிவிக்கின்றோம்.

நூல் : சிறுவர் தமிழிலக்கணம் (1945)
பக்கம் - 5
நூலாசிரியர் : வே. வேங்கடராஜுலு ரெட்டியார்



## கிளரினெட் - கிளரியம்

இது ஐரோப்பியத் துளைக்கருவிகள் ஒன்று. இப்போது இது தஞ்சாவூர்க் கூட்டியத்தில் (பாண்டில்) இடம் பெற்றுள்ளது. இதைச் சதிர்க் கச்சேரிகளில் வாசிக்கப்படும் சின்ன மேளத்தில், குழலுக்கும் முக வீணைக்கும் பதிலாக முதன்முதலாக நுழைத்தவர் மகாதேவ நட்டுவனார் ஆவார்.

நூல் : தமிழர் இசைக் கருவிகள் (1945), பக்கம் - 50
நூலாசிரியர் : பி. கோதண்டராமன்



## சாயாசரீரம் - நிழலுடல்

நூல் : பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி (1945) பக்கம் : 8
குறிப்புரை : வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை
(திருவாவடுதுறை ஆதீன வித்துவான்)



## Band - கூட்டியம்

ஐரோப்பிய இசையின் தொடர்பினால் தமிழ்நாட்டு இசையில் ஏற்பட்ட நவீனங்களில் பாண்டு (கூட்டியம்) என்பதும் ஒன்று. சென்ற நூற்றாண்டில், தஞ்சாவூர் சமஸ்தானத்தில், மரத்தாலும், பித்தளையாலும் ஆன இசைக் கருவிகளைக் கொண்டு ஒழுங்காக அமைக்கப்பட்ட முதல் பாண்டு, கருநாடக இசை முறையில் வாசிக்கப்பெற்றது.

நூல் : தமிழர் இசைக் கருவிகள் (1945), பக்கம் - 62
நூலாசிரியர் : பி. கோதண்டராமன்



## Universe - உலகத் தொகுதி

தருக்கையுடைய மனத்தவர்களே! நீங்கள் போய் விடுங்கள்; மெய்யடியார்களே! விரைவாக வாருங்கள்; அடியார் கூட்டத்தில் சேர்ந்து, இறைவன் சம்பந்தமான பிறருடைய அநுபவங்களைக் கேட்டும் தம்முடைய அநுபவங்களைப் பிறருக்குச் சொல்லியும் பரம்பரையாக ஈசனுக்கு அடிமைப் பணி செய்யுங்கள். உலகத் தொகுதியையும் கடந்த அப்பாற்பட்ட பொருள், அளவுகடந்த ஆனந்த

வெள்ளமாயிருக்கும் அல்லது ஆனந்த வெள்ளத்தைத் தரும் பொருள், முன்னும், இப்போதும், எக்காலத்தும் (அழியாது) உள்ள பொருளென்றே சிவபெருமானுக்குப் பல்லாண்டு கூறுகின்றோம்.

நூல் : சைவ சமய விளக்கம் (1946), பக்கம் - 51
நூலாசிரியர் : அ. சோமசுந்தர செட்டியார்
(சேக்கிழார் திருப்பணிக் கழகத் தலைவர்)



## Vacuum - பாழ்

வாய் திறந்து பகவானைப் பேரிட்டழையாமல் மனத்தால் தியானிப்பவர்களும் அவரைக் (பகவானை) குதா என்னும் நாமத்தால் ஓசைபடாமல் சொல்லி, ஏதாவதொரு வடிவத்தாலேயே தியானிப்பார்கள். அவரை ஏதேனுமொரு பாவனையினாலன்றி தியானித்தல் எளிதன்று. அவரை ஆகாயமாகவாவது தியானித்தே தீர வேண்டும். ஆகாயமும் ஒரு பொருளே அன்றி வெறும் பாழ் அல்ல. 'முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாம், அப்பாலும் பாழென்றறி' என்றபடி பகவானைப் பாழ் என்றாலும் அவர்க்கு நாமம் ஏற்படுகிறது. எப்போது நாமம் ஏற்படுகிறதோ, அப்போது ரூபமும் ஏற்படாமல் இராது.

நூல் : கபீர்தாஸ் (1946), பக்கம் : 9, 10
நூலாசிரியர் : பண்டிதர் ம. மாணிக்க வாசகம் பிள்ளை



## ஸிேனேரியோ - காட்சிக் கோப்பு

'ஸினேரியோ' என்பது ஒரு ஆங்கிலச் சொல். தமிழில் அதன் பிரதி பதம் 'காட்சிக் கோப்பு'.

இப்பதம் சினிமாவுக்கும் சரி, டிராமாவுக்கும் சரி – பொதுவானது.

இதழ் : குண்டூசி, நவம்பர் 1947, பக்கம் : 12, பட்டை - 1, ஊசி - 2
கட்டுரையாளர் : பாலபாரதி ச. து. சு. யோகியார்



பேடின் – வளர்பிறை
லாங் அல்லது
ஸலோ பேடின் – நீள் வளர் பிறை
பேடவுட் – தேய்பிறை

| | | |
|---|---|---|
| லாங் பேடவுட் | – | நீள தேய்பிறை |
| டிஸால்வ் | – | தேய் வளர்பிறை |
| வைப் | – | துடைப்பு |
| கட் | – | வெட்டு |
| ஐரிஸ் இன் | – | உட் சுழல் |
| ஐரிஸ் அவுட் | – | வெளிச்சுழல் |
| ஸூபர் இம்போஸ் | – | அடுக்குக் காட்சி |
| மல்டிபிள் எக்ஸ்போஷர் | – | அடுக்குத் தூக்கு |
| டிஸ்டண்ட் ஷாட் | – | நெடுந் தொலைவுக் காட்சி |
| லாங் ஷாட் | – | தொலைவுக் காட்சி |
| பிக்ளோஸ் அப் | – | நுண்ணணி |
| க்ளோஸ் அப் | – | அண்மைக் காட்சி |
| டாப் ஷாட் | – | முடிநேர்க் காட்சி |
| ஸ்ட்ரெய்ட் ஷாப் | – | நேர்க் காட்சி |
| ட்ரக் ஷாட் | – | கருவிப் பாய்ப்பு |
| க்ரேன் ஷாட் | – | தூக்கிப் பாய்ப்பு |
| மாஸ்க் ஷாட் | – | மறைப்புக் காட்சி |

இதழ் : குண்டூசி, நவம்பர் 1947, பக்கம் : 14, பட்டை – 1, ஊசி – 2
கட்டுரையாளர் : பாலபாரதி ச.து. சு. யோகியார்



## அவதாரம்

அவதாரம் என்பதற்குக் கீழிறங்குதல் என்பது பொருள். உயர்நிலையிலுள்ள ஒருவர், பிறர் நலன் நாடி உலகில் தோன்றுவதைத்தான் அவதாரம் எனக் கூறுகின்றோம்.

நூல் : பெரியாழ்வார் பெண்கொடி (1947), பக்கம் : 176
நூலாசிரியர் : பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்.



## சம்சார நௌகா - வாழ்க்கைப் படகு

ப்ரகதி பிக்சர்ஸ் & ஸ்டார் கம்பைன்ஸ் தயாரித்த சம்சார நௌகா அல்லது வாழ்க்கைப் படகு (தமிழ்)

புத்தகம் : சம்சார நௌகா அல்லது வாழ்க்கைப் படகு பாட்டுப்புத்தகம் (1948), பக்கம் : 1
தமிழாக்கம் : நடிகர் பி. ஆர். பந்துலு



## சுந்தரேசன் - எழிலன் (1948)

சுந்தரேச துரை என்ற இயற்பெயர் கொண்ட வானம்பாடி எழிலன் வானம்பாடி என்னும் புனை பெயர்களில் எழுதினார். வானம்பாடி என்னும் பெயரில் 1948ல் வார இதழ் நடத்தினார். பின்னர் 1973ல் கவிதா மண்டலம் என்னும் கவிதை ஏட்டைத் தொடங்கி 3 ஆண்டுகள் நடத்தினார்.

இதழ் : இளந்தமிழன் (ஜனவரி மார்ச் 1989),. பக்கம் : 10
சிறப்பாசிரியர் : தி. வ. மெய்கண்டார்.



## சுவாமி அருணகிரிநாதர் - செம்மலை அண்ணலாரடிகள்

நூல் : மக்களின் கடமை (1948), பக்கம் - 1
ஆக்கியோன் : சுவாமி அருணகிரிநாதர் என வழங்கும் செம்மலை அண்ணலாரடிகள்



## ராஜரத்தினம் - அரசுமணி

திருவல்லிக்கேணியில் உள்ள கெல்லெட் மேல்நிலைப் பள்ளியில் பணியாற்றி ஓய்வு பெற்றிருக்கும் புலவர் அரசுமணியின் இயற்பெயர் ராஜரத்தினம் என்பதாகும். அப்பெயரை அரசுமணி என்று 1948ஆம் ஆண்டில் இவர் மாற்றி வைத்துக் கொண்டார்.



## Power House - மின்மனை

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் மைசூர் நாட்டு சர்க்கார் தங்கள் நாட்டில் உள்ள ஜீவநதிகளின் இயற்கையான நீர் வீழ்ச்சிகளின் உதவியால் மின்சார சக்தியைத் தயாரிக்க முன் வந்தனர். சிவசமுத்திரம் என்ற இடத்தில் உள்ள காவிரியின் நீர் வீழ்ச்சியண்டை 1902ல் மின்மனை (Power House) ஒன்றை நிறுவி மின்சாரத்தை தோற்றி, அங்கிருந்து 92மைல் தூரத்தில் உள்ள கோலார் தங்க வயல்களுக்குக் கொண்டு போய், விளக்கெரிக்கவும், யந்திரங்களை இயக்கவும் உபயோகித்தனர். இச் சக்தியைக் கொண்டு நடத்த பல தொழிற்சாலைகளையும் ஏற்படுத்தி, இந்தியாவுக்கு, ஏன் ஆசியாவுக்கே வழி காட்டினார்கள்.

நூல் : திராவிட நாடு (முதல் பாகம்) (1949), அமைப்பியல், பக்கம் - 72
நுலாசிரியர் : அ.கு. பாலசுந்தரனார், பி.ஏ., எல்.டி., (ஆசிரியர், சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி, சென்னை)



## பிரிவு உபசாரப் பத்திரிகை - பிரிவு விடை இதழ் (1949)

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியரும், தமிழ்த் துறைத் தலைவருமாயிருந்த பேராசிரியர் மொ. அ. துரையரங்கனார் அவர்கள் பி.ஓ.எல்., எம்.ஓ.எல்.,

மதுரைத் தியாகராய கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகச் சென்றபோது பாராட்டி அளித்த சென்றபோது பிரிவு விடை இதழ்.

பச்சையப்பன் கல்லூரித் தமிழ் மாணவர்கள்
சேத்துப்பட்டு

18.10.1949 இதழ் : இணக்கம் (1949), மலர் : 3; இதழ் : 9
ஆசிரியர் : வித்வான் மொ. அ. துரை. அரங்கசாமி, பி.ஓ.எல்.,



## Projector - ஒளியுருவ இயந்திரம்

ராபர்ட் பால் என்ற அறிஞன் முதன் முறையாக 'கினிடோஸ் கோப்'பையும் படவிளக்கையும் இணைத்து ஒளியுருவத்தைத் திரையில் விழச்

செய்தான். அதைத்தான் எல்லோரும் வேடிக்கைப் பார்த்தனர். அநேகமாக பால், பேசாத சினிமாவைக் கண்டுபிடித்து விட்டான் என்றே கூற வேண்டும். இதே சமயத்தில் பிரான்சு நாட்டில் லூமிரி சகோதரர்களும் அமெரிக்காவில் லாதம் (Latham) என்பவனும் ஒளியுருவ இயந்திரம் கண்டுபிடித்தனர்.

நூல் : களஞ்சியம் (1949), பக்கம் : 54
நூலாசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.,



மௌன முத்திரை – சொல்லாக் குறி

ஆனந்தம் – சிவப்பேற்றின்பம்

நூல் : கவிஞன் உள்ளம் (1949)
நூலாசிரியர் : வித்துவான் ந. சுப்பு ரெட்டியார், பி.ஏ., பி.எஸ்ஸி., எல்.டி., தலைமையாசிரியர் ஜமீந்தார் உயர்நிலைப் பள்ளி, துறையூர்.



## சுந்தரராசு - அழகரசன்

அறிவிப்பு

இந்நூலை என் அம்மானாரிடமிருந்து யான் விலைக்கு வாங்கிக் கொண்டமையால், இதன் பதிப்புரிமை எனதாகும்.

சேலம்,
29. 12. 1949

சுந்தரராசு என்னும்
**அழகரசன்**

நூல் : சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் (1949)
நூலாசிரியர் : பண்டித புலவ ஞா. தேவ நேயனார், பி,ஓ. எல் (சேலம் நகராண்மைக் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர்)



## சுந்தரேசன் - எழிலரசன் - எழிலன்

கவிஞர் வானம்பாடி என்று தமிழர்களால் அழைக்கப்பட், கலைமாமணி, கவிஞர் திலகம், கவிஸ்ரீ கவிஞர் வானம்பாடி துரை சுந்தரேசன் அவர்கள் 1948ல் வானம்பாடி என்னும் வார இதழினைத் தொடங்கி சில காலம் நடத்தினார்.

இளமைக் காலத்திலிருந்தே எழிலரசன், எழிலன் என்னும் புனை பெயர்களில் எழுதி வந்தார். வானம்பாடி பத்திரிகையிலும் ஆசிரியர் எழிலன் என்றே காணப்படுகிறது.

தி. வ. மெய்கண்டார்

நூல் : அமரர் கலைமாமணி கவிஞர் வானம்பாடி வாழ்க்கைக் குறிப்பு (1987)



## பாரதி – 'கல்வி' அறிவுள்ளவர்

பாரதியாருக்கு அவர் தந்தையார் வைத்த பெயர் சுப்பிரமணியம் என்பதாகும். தாம் இளம் பருவத்தினராய்ப் இருந்த போதே இவர் கல்வி அறிவுள்ளவராகக் காணப்பட்டமையினால், விருதை சிவஞான யோகியார் என்னும் அறிஞர், கல்வி அறிவுள்ளவர் என்னும் பொருள்படும் பாரதி என்னும் பட்டத்தை இவருக்கு, எட்டயபுரம் சமஸ்தானத்திலே, குரு குகதாசப் பிள்ளை வீட்டிலே, கற்றோர் புகழும் அவையிலே, அளித்தார்.

நூல் : தமிழ்ப் பெருமக்கள் பக்கம் – 68, ஏப்ரல், 1949 ஆம் ஆண்டு வெளிவந்த நூல்
நூலாசிரியர் : எஸ். எஸ். அருணகிரிநாதர்.



## பூதக் கண்ணாடி – உருப்பெருக்கிக் கண்ணாடி

வானத்தில் – கொசு முதற்கொண்டு பெரிய கழுகுவரையுமாகப் பலவகைப்பட்ட பிராணிகள் பறவைகளாகக் காணப்படுகின்றன. இவைகள் இறக்கைகளைக் கால்களாகக் கொண்டு காற்றென்னும் பாதையில் நடந்தும், பறவைகளாக வான வெளியில் சஞ்சரிக்கின்றன. இவைகள் நம் முகக் கண்கொண்டு கண்டபிராணிகளாகும். உருப்பெருக்கி (பூதக்) கண்ணாடியும் கொண்டு கண்டால் இன்னும் சிறிய உயிர்ப்பொருள்களையும் காணலாம். நூல் கண் கொண்டு கண்டால் இன்னும் பெரிய உயிர்ப் பொருள்களையும், சிறியவைகளையும் காணலாம்.

நூல் : மனித இயல்பு (1949) பக்கம் – 21
நூலாசிரியர் : திருத்தேவர் பழநியப்பக் கவுண்டர் (பரமாத்வைத சித்தாந்த ஆசிரியர்)



## ஞானேந்திரியம் - புறமறி கருவி

மிருகாதிகளின் அகவுணர்வு பிறந்ததிலிருந்து பெரும்பாலும் ஓரளவுள்ளதாகவே காணப்படுகிறது. விருத்தியடைவதில்லை. அது புறமறி கருவியான (ஞானேந்திரியமான) கண், காது, மூக்கு, நாக்குப் போன்றதாயிருக்கிறது. பத்து வயதில் இரண்டு கஜ தூரத்தில் தெரிந்த தினை, 15 வயதில் 4 கஜ தூரத்திலும், 20 வயதில் 20 கஜ தூரத்தில் கண்ணுக்கு நன்றாய் தெரியும் என்பது இல்லை. 10 வயதில் எப்படி எவ்வளவு தூரத்தில் தெரியுமோ 30, 40 வயதிலேயும் அப்படி அவ்வளவு தூரத்திற்றான் தெரியும். இந்த ஞானேந்திரியங்களின் அறிவு மனித உடம்பிலானாலும் சரி அவ்வாறு அளந்து போட்டதேயாகும்.

நூல் : பக்கம் 30



## Guide - சுட்டிக்காட்டி

தனுஷ்கோடிக்கு சேது என்றும் பெயர் வழங்குகிறது. வங்காள விரிகுடாவும் இந்து மகாசமுத்திரமும் கலக்கும் இம்முனையில் குளித்தால் நல்ல கதி கிடைக்கும் என்று ராமேச்சுரத்துக்கு வரும் இந்துக்கள் பலர் இங்கு வந்து முழுகிவிட்டுப் போகிறார்கள். இவ்விடத்திலிருந்து தினந்தோறும் நீராவிக் கப்பல்கள் பிரயாணிகளையும், சாமான்களையும் ஏற்றிக் கொண்டு லங்கைக்குச் செல்கின்றன. இத்தீவில் வசிப்பவர்கள் படகோட்டுதல், மீன் பிடித்தல் முதலிய தொழில்களைச் செய்து பிழைக்கிறார்கள். ரமேச்சுரத்திலும், தனுஷ்கோடியிலும் அப்புண்ணிய க்ஷேத்திரங்களில் உள்ள பழைய சின்னங்களை சுட்டிக்காட்டி நற்கதிக்கு வழிகாட்டும் பார்ப்பனரும் பலர் வசிக்கிறார்கள்.

நூல் : திராவிட நாடு (முதல் பாகம்) (1949)
அமைப்பு இயல், பக்கம் - 7
நூலாசிரியர் : அ. கு. பாலசுந்தரனார், பி.ஏ., எல்.டி.,
(ஆசிரியர், சிந்தாதிரிப்பேட்டை
உயர்நிலைப் பள்ளி, சென்னை)



## Art - கைவன்மை

கைத்திறன் என்பது மனிதன் உள்ளத்தில் உள்ள ஆன்ம வுணர்ச்சியையும் இறைவனையும் ஒன்றுபடுத்துவதாகும். இதன் பெருஞ் சிறப்பை உளங்கொண்ட நம் முன்னோர் அழகினை ஆதரித்தனர். அழகிய சோலைகளை

அமைத்தனர். அழகொழுகு கட்டடங்களைக் கட்டினர், இயற்கை அழகு வாய்க்கப் பெற்ற இடங்களில் செயற்கை அழகையும் சிறப்புறச் செய்தனர். இயற்கையும் செயற்கையும் கூடிய வழி இன்ப வெள்ளம் பெருக்கெடுத்தோடுகின்றது போலப் பேரழகு பெரும் பொலிவுடன் விளங்கும் அன்றோ? இங்ஙனம் நம் முன்னோர் பேரழகில் பிறந்தனர். பேரெழிலில் வளர்ந்தனர்; அவ்வழகிலேயே இரண்டறக் கலந்தனர். அவ்வழகினை அகமகிழக் காட்ட வல்லது கைவன்மை ஒன்றேயாகும்.

நூல் : அறிவியல் கட்டுரைகள் (1949), பக்கம் : 11
நூலாசிரியர் : பேராசிரியர் பி. இராமநாதன் எம். ஏ.,



## Outline Map - புறவரிப்படம்

நூல் : கட்டுரை விளக்கம் (1949)
நூலாசிரியர் : வித்துவான் ஆர். கன்னியப்ப நாயகர்
தமிழாசிரியர் ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளி,
காஞ்சிபுரம்



## சி. சென்ராயல் - தமிழன்பன்

1950இல் தமிழரசன், தசாவதானி கணக்காயர் மீ. உ. கான்முகமது புலவர் அவர்கள், சென்ராயல் என்ற பெயரை தமிழன்பன் என மாற்றம் செய்தார்.



## தாளப்பேச்சு

சாவி : சுழட்டவும் இல்லை கழட்டவுமில்லை
சோறு சமைக்க ஜலம் எங்கே?
விதூ : சொல்றதைக் கேளடி தோண்டியைத் தூக்கினேன்
டுடுப்புன்னு ரெண்டா போச்சிடி

புத்தகம் : ராஜா - விக்கிரமா, திரைப்பாடல் புத்தகம் (1950)
பக்கம் : 6
சொல்லாக்கம் : திரைப்பாடலாசிரியர் சிதம்பரம் ஏ.எம். நடராஜ கவி



## வ. இராசமனோகரன் - வ. கோவழகன் (1950)

பழனி நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் 1950–51 ஆம் ஆண்டு பத்தாம் வகுப்பு படிக்கும்போது 'கேடயம்' என்னும் பெயரில் கையெழுத்துப் பிரதி நடத்தப்பட்டது.

'கோவழகன்' என்கிற புனைப்பெயரில், கவிதை, கட்டுரை,. கதை எழுதினேன்.

வ. கோவழகன் (1950)
(வ. இராசமனோகரன்)
புலவர் மா. நடராசன், தமிழாசிரியர்
பழனிநகராட்சி உயர்நிலைப்பள்ளி, என் பெயரை மாற்றினார்.



## Black Marketing - இருட்டு வாணிபம்

இருட்டு வாணிபமும், (Black - Marketing) திருட்டுக் கொள்ளையும், சுருட்டிப் பதுக்குதலும், பிரட்டுப் பித்தலாட்டமும் தமிழனுக்குப் பிடிக்காதன என்பதற்கு இப்பாடல் ஒன்றே போதிய சான்றாகும்.

நூல் : தமிழ் உள்ளம் (1950), பக்கம் : 110
நூலாசிரியர் : வித்வான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ. பி.எல்.,
(துணைப் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்)



## ரசீது - பணப் பற்றுச் சீட்டு

இப்பணியில் ஆர்வமுள்ள அன்பர்களும், பத்திரிகைகளுக்குரியவர்களும் ஆசிரியர்களும் பொதுமக்களிடம் கட்டணம் நன்கொடை திரட்டிப் பெயர் விவரங்களுடன் அளித்துதவினால், அவரவர்கள் கொடுக்கும் பெயர்ப்பட்டியின்படி குருகுலத்தின் பணப் பற்றுச் சீட்டு (இரசீது)கள் அனுப்பப் பெறும்.

நூல் : தமிழ்ப்பணி (1950), பக்கம் : 54
நூலாசிரியர் குழு : தமிழகத்தின் தமிழ்ப்பணிக் குழுவினர்
(உறையூர் - திருச்சிராப்பள்ளி)



| | | |
|---|---|---|
| பஞ்சபாணம் | – | ஐந்தம்பு |
| த்வஜம் | – | கொடி |
| சமரகேசரி | – | போர்ச்சிங்கம் |

நாளியல் விளக்கம் என்னும் நந்தன வருஷத்துச் சுத்த வாக்கிய பஞ்சாங்கம் (1951)

ஆசிரியர் : வித்வான் : சோ. அருணாசல தேசிகர் (சீர்காழி)



## Lipstick - உதட்டுச்சாயம்

உதட்டுச்சாயம் அழிந்து போய் விடுமே என்று காதலனை முத்தமிடத் தயங்குகிறவளைப் பற்றியும், ஜரிகை வேஷ்டி அழுக்காய் போய் விடுமே என்று தெருவில் சுவாமி புறப்பாடானபோது சாஷ்டாங்க வணக்கம் செய்யப் பால் மாறுகிறானே பக்தன்! அவனைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறீர்களல்லவா? அந்த வரிசையில் இந்த ஆசாமியையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.

நூல் : குட்டிக் கட்டுரைகள் (1951), பக்கம் : 34, 35
நூலாசிரியர் : வித்வான் ந. சுப்ரமணியன் எம். ஏ.,



## பஞ்சாங்கம் - நாளியல் விளக்கம்

நாளியில் விளக்கம் என்னும் நந்தன வருஷத்துச் சுத்த வாக்கிய பஞ்சாங்கம். இது (சீர்காழி, வித்வான்: சோ. அருணாசல தேசிகரால் கணிக்கப்பட்டது.

நாளியல் விளக்கம் என்னும் நந்தன வருஷத்துச் சுத்த வாக்கிய பஞ்சாங்கம் (1951)

ஆசிரியர் : சோ. அருணாசல தேசிகர்
(கவிஞர் சுரதா அவர்களின் யாப்பிலக்கண ஆசிரியர்)



| | | |
|---|---|---|
| அபிலாஷை | – | விழைவு |
| வியாக்கிரபாதர் | – | புலிக்கால் முனிவர் |
| பீதாம்பரம் | – | பொன்னுடை |
| அஷ்டாக்ஷர் | – | எட்டெழுத்து |
| இரணியன் | – | பொன்னன் |
| ரதவீதி | – | தேர்மறுகு |

நூல் : திருச்சிறுபுலியூர் உலா (1951)
குறிப்புரை : கி. இராமாநுஜையங்கார்



## லட்சுமி - மலர்மகள் (1951)

திருச்சி – டவுன்ஹால் அரசினர் மகளிர் உயர் நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியையாகப் பணிபுரியும் திருமதி லட்சுமி நித்தியானந்தம் M.A., B.T., அவர்கள் 1951ஆம் ஆண்டு முதல் மலர்மகள் என்னும் பெயரில் கவிதைகள், கட்டுரைகள் எழுதி வந்தவர். இப்போது இவர் உலகத் தமிழ்க் கவிஞர் பேரவை உறுப்பினர்களுள் ஒருவராகவும் இருக்கிறார்.



## எம்பிராய்டரி - பூந்துகிற் கலை

மனிதனுடைய தேகத்திற்கும் மனதிற்கும் இன்ப மளிப்பவையெல்லாம் தெய்வத்திற்குப் பொறுக்காது என்பது தலைகால் தெரியாத நம்பிக்கைகளில் ஒன்று. இதையொட்டித்தான், சிறு பெண்கள் புத்தகம் படிப்பதும், பாட்டு, நாட்டியம், சிற்பம், ஓவியம், பூந்துகிற்கலை (எம்பிராய்டரி) இவற்றைக் கற்பது எல்லாம் வீட்டைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிவிடும் என்று பலர் நினைப்பதும், நாடகம் பார்த்தாலும் சினிமா பார்த்தாலும் மனிதன் கெட்டுப் போவான் என்று நினைப்பதும் இதே மாதிரிதான்.

நூல் : குட்டிக் கட்டுரைகள் (1951), பக்கம் : 61, 62
நூலாசிரியர் : வித்வான் ந. சுப்பிரமணியன் எம். ஏ.,



## Book Post - அவிழ்மடல்

1952ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நாவலர் நா.மு. வேங்கடசாமி நாட்டார் உருவப்படத்திறப்புவிழா அழைப்பிதழில் 'Book - post' என்ற சொல்லுக்கு 'அவிழ்மடல்' என்னும் சொல் உருவாக்கப்பட்டது. அச்சொல்லை முதன் முதலில் உருவாக்கித் தமிழுலகிற்கு உலவவிட்டவர் க. அரசுமணி, இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் புலவர் இவர், பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதன், பேராசிரியர் லெப.கரு. இராமநாதஞ் செட்டியாரின் மாணவர்.

அவிழ்மடல் : சொல்லாக்கம் - புலவர் க. அரசுமணி (1952)



| | | |
|---|---|---|
| Press | - | அழுத்தகம் |
| Capitalism | - | முதலாண்மை |
| Brains Trust | - | புத்தி மண்டலம் |
| Pension | - | இளைப்பாறும் சம்பளம் |

நூல் : கூட்டுறவு அல்லது ஐக்கிய வாழ்வு (1952)
நூலாசிரியர் : அ. அருளம்பலம் (வழக்கறிஞர், ஐக்கியதீப ஆசிரியர், யாழ்ப்பாணம்)



## Encyclopedia - பேரகராதி

பல ஆயிரமாண்டுகட்கு முன்பே சீனர்கள் நாகரீகத்தில் முதிர்ச்சி பெற்று விளங்கினார்கள். இவர்கள் தொன்று தொட்டே பட்டு, காகிதம், வெடி மருந்து, அச்சுப் பொறி, திசைக்கருவிகள், கண்ணாடி முதலிய பலவகைத் தொழில்களில் முன்னேறி இருந்தார்கள். இவர்கள் சிற்பம், சித்திரம் இவைகளில் பெயர்போனவர்கள். உலகத்திலேயே மிகப்பெரிய பேரகராதி (Encyclopedia) முதன் முதலில் சீனாவில் தான் எழுதப்பட்டது.

நூல் : சீனத்துச் செம்மல் (1952), பக்கம் - 6
நூலாசிரியர் : புலிகேசி



## ரூபா - மாடு

பெகுஸ் (pecus) என்ற லத்தீன் வார்த்தைக்கும், பெய்கு என்ற ஜெர்மன் வார்த்தைக்கும், ரூபா என்ற வடமொழி வார்த்தைக்கும், மாடு என்றே பொருள். ரூபா என்ற சொல்லே திரிந்து ரூபாய் என தமிழில் வழங்குகிறது. ரூபா என்ற வடசொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல்லாகத் தமிழில் மாடு என்ற சொல் வழங்கப் பெறுகிறது.

நூல் : பணம் (1953) பக்கம் - 14
நூலாசிரியர் : ரெ. சேஷாசலம், எம்.ஏ., (ம.தி.தா. இந்துக் கல்லூரி பொருளாதார ஆசிரியர்)



## Refrigerator - குளிரச் செய்யும் பொறி
## Microscope - அணு நோக்கி

விஞ்ஞானிகளுக்குத் தேவைப்படும் அணு நோக்கி பரிசோதனைப் பொறி (Testing Machine) மின்சாரச் சூளை அடுப்பு. ஆய்வுத் துலை (Analytical Balance) எக்ஸ்ரே பொறி, அல்ட்ரா வயலெட் (ஊதா) ஒளிக் கதிர்கள் வீசும் பொறி, வெப்ப ஒளிக்கதிர் வீசும் பொறி (Heat - Ray), கண்ணாடி உருக்கும் பொறி, குளிரச் செய்யும் பொறி (Refrigerator), மற்றைய வீட்டியல் சிறு பொருள்கள், தண்ணீரை வெந்நீராக்கும் மின்சாரக் கருவி, மின்சார வீட்டடுப்பு, பல்புகள், பாதரச பல்புகள் முதலிய எல்லாப் பொருள்களும் ஜப்பானில் உற்பத்தியாகின்றன.

நூல் : நான் கண்ட ஜப்பான் (1953), இரண்டாம் பதிப்பு
பக்கம் : 65, 66
நூலாசிரியர் : சு. இராமசுவாமி நாயுடு, முன்னாள் மேயர், சென்னை.



## இரணியப் பிண்டம் - பொற்கட்டி

இந்தியாவில் ரிக்வேத காலத்திலேயே (சுமார் கி.மு. 2000) பொற்கட்டி, பணாக உபயோகிக்கப்பட்டதாக அறிகிறோம் அது. இரணியப் பிண்டம் என்றழைக்கப்பட்டது. தமிழில் அதன் நேர் பொருள் பொற்கட்டி கந்த புராண ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரியார் இரணியனைப் பொன்னன் என்றே கூறுவர். ஆடகப் பெயரின் அவுணர் மார்பினன் என வரூஉம் குமர குருபரர் வாக்கும் (திருவாரூர் நான்மணிமாலை) ஈண்டு நினைவு கூறற்பாலது.

நூல் : பணம் (1953), பக்கம் - 15
நூலாசிரியர் : ரெ. சேஷாசலம், எம்.ஏ.,
(ம.தி.தா. இந்துக் கல்லூரி பொருளாதார ஆசிரியர்)



## Under wear - உள் அங்கி

ஹிரோ ஹிடோ – ஜப்பானிய சக்கிரவர்த்தி ஓர் உடையை ஒரு முறைக்கு மேல் மறுமுறை உபயோகப்படுத்துவதில்லை. உள் அங்கி கூட (Under Wear) மறுமுறை அணிவதில்லை.

இதழ் : தம்மி, 10.10.1953, பக்கம் : 12, மலர் : 1 இதழ் : 2
சொல்லாக்கம் : தில்லை வில்லாளன், பி.ஏ., (ஆனர்ஸ்)



## புலவர் தி.நா. ஞானப்பிரகாசம் - அறிவு ஒளி

முகவரி : 2 / 25 இணைவு – 2,
பூங்குன்றனார் தெரு, மறைமலை நகர் – 603 209



## Axis - அச்செலும்பு

இந்த 33 எலும்புகளில் ஒன்று அச்செலும்பு என்னும் பெயரும், இன்னொன்று உலகம் என்னும் பெயரும் பெற்றுள்ளனவே.

நூல் : பழந்தமிழரும் முருகன், முக்கண்ணன் வணக்கமும் (1954) பக்கம் - 46
நூலாசிரியர் : டாக்டர் தி. இரா. அண்ணமலைப் பிள்ளை



## கமகங்கள் - அசைவுகள்

நம் நாட்டவர்கள் சங்கீத விஷயங்களுக்கு முதலிடம் கொடுத்தார்களே தவிர பாவனைகளைப் பற்றியோ, பாடல்களின் உச்சரிப்பைப் பற்றியோ சிந்தித்தார்களில்லை, அதனாலேயே நம் நாட்டுப் பாடல்களின் பெட்டில் பொதுமக்கள் கவர்ச்சி கொள்ளாமல் பிறநாட்டு மெட்டுகளையே அமைத்துக் கொண்டு பாடுவதும், ஆடுவதும் ரசிப்பதும் வழக்கத்தில் அதிகமாகி விட்டது. இதற்குக் காரணங்கள் நம் நாட்டுப் பாடல்களில், பதங்களைச் சரியாக உச்சரிக்காமையும், பதங்களைக் கேட்பவர்கள் புரிந்து கொள்ளாதவாறு அதிகமான சங்கீதத்தின் அசைவுகளை (கமகங்களை) அளவுமீறி உபயோகப்படுத்துதலும் ஆகும்.

நூல் : தென்னிந்திய இசை உலகம் (1954) பக்கங்கள் : 27, 28
நூலாசிரியர் : எஸ். மாணிக்கம் (தென் ஆப்பிரிக்கா)



## Lyric - தனிப்பாடல்

நூல் : புதுமைப்பித்தன் கட்டுரைகள் (1954) பக்கம் 56,
நூலாசிரியர் : புதுமைப்பித்தன்



## மயிலை சண்முக சுந்தரன் - மயிலை முத்தெழிலன்

குழந்தைகளுக்காகவே வாழ்ந்த மயிலை சிவமுத்து அவர்கள் அன்புச் செல்வனே கவிஞர் மயிலை முத்தெழிலன் அவர்கள். சண்முக சுந்தரம் என்ற பெயரை மயிலை முத்தெழிலன் என்று 1954ஆம் ஆண்டில் இவர் மாற்றி வைத்துக்கொண்டார்.



## ஜெயராமன் - வெற்றி வில்லாளன் (1955)

கவிஞர் வெற்றி வில்லாளன்,
தாத்தையங்கார் பேட்டை; திருச்சி மாவட்டம்.



## Dearness Allowance - அருமைப்பாட்டுப் படி

போர்க் காலத்தில் தோன்றிய புதுச் சொற்களில் 'பறக்குங்குண்டு' என்பது ஒன்று. இதனையே 'ஆளில்லா விமானம்' என்பாரும் உண்டு. 'பஞ்சப்படி' என்பது பெருவழக்காக வழங்குகிறது. (Dearness Allowance) என்பதை எப்படியோ இப்படி மொழி பெயர்த்துவிட்டனர். ஆயினும் அதனை இனி அருமைப்பாட்டுப் படி என மாற்றப் போவதில்லை.

நூல் : தமிழோசை (1955), பக்கம் : 89
நூலாசிரியர் : செந்தமிழ்க் காவலர்
டாக்டர் அ. சிதம்பரநாதன், எம்.ஏ., பிஎச்.டி.,
(தமிழ்த்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)



## Light Signal - ஒளி அஞ்சல்

தந்தி என்பது ஒலிமுறையில் உள்ள பேச்சு மொழியல்ல. மொழியிலுள்ள எழுத்துக்களுக்குத் தனி ஒலிக்குறிப்பு வைத்து அவ்வொலிக் குறிப்புகளினால் மொழியை அனுப்பவும் வாங்கவும் உள்ள சாதனமே தந்தி. இதே முறை ஒளி அஞ்சலிலும் (Light Signal) பயன்படுத்தப்படுகிறது.

நூல் : தமிழில் தந்தி (1955), பக்கம் : 21
நூலாசிரியர் : அ. சிவலிங்கம்



## காபியாஸ்பிரின் - தலைவலி மாத்திரை

தலைவலிக்கொரு மாத்திரை, தடுமனுக்கு ஒரு மாத்திரை, தவறுதலா தின்னுப்பூட்டா தருமலோக யாத்திரை என்று மிஸ் மாலினி படத்தில் பாடியுள்ள சுந்தரி பாய், முதன் முதலில் தோன்றியது. காபியாஸ்பிரின் (தலைவலி மாத்திரை) விளம்பரப் படத்தில்தான்.

நூல் : சினிமா நக்ஷத்திரங்களின் ரகசியங்கள் (1955) பக்கம் : 5.
நூலாசிரியர் : சுந்தர்



## மகாமகோபாத்தியாயர் - பெரும்பேராசான்

பண்டிதமணியின் தொண்டுகளை அரசியலார் அறிந்தனர். பட்டம் அளித்துச் சிறப்பிக்க வேண்டும் என்று முடிவு செய்தனர். 1941 ஆம் ஆண்டு, மன்னர் பிறந்த நாட்கொண்டாட்டம் நிகழ்ந்த போது 'மகாமகோபாத்தியாயர்' (பெரும்பேராசான்) என்னுஞ் சிறப்புப் பெயரை வழங்கிப் போற்றினர்.

நூல் : தமிழ்ப் புலவர் வரிசை (1955), (எட்டாம் புத்தகம்) பக்கம் : 82
நூலாசிரியர் : சு. அ. இராமசாமிப் புலவர்



## மா. மார்க்கபந்து - மா. வழித் துணைவன்

மா. வழித்துணைவன்
நாடக ஆசிரியர், கவிஞர், ஆய்வாளர்,
எழுத்தாளர், திருவள்ளுவர் நாடகம்,
தென் குமரி தெய்வம் நாவல்
திருக்குறள் நெறித் தோன்றல்,
குறள் படைப்புச் செம்மல்

மாரார்க்கபந்து என்னும் பெயரை 1955 ஆம் ஆண்டில் மா. வழித்துணைவன் என்று பெயர் மாற்றம் செய்து கொண்டார் இவர்.



